இ. சுந்தரமூர்த்தி

# பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்



# பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்

டாக்டர் இ. சுந்தரமூர்த்தி
இணைப் பேராசிரியர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை 600 005




ஐந்திணைப் பதிப்பகம்
282 *பாரதி சாலை (பைகிராப்ட்ஸ் ரோடு)*
சென்னை 600 005

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்** (1977—ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப் பெற்ற பிஎச். டி. ஆய்வேடு ) |
| ஆசிரியர் | : | டாக்டர் இ. சுந்தரமூர்த்தி |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீடு | : | தேன்மொழி வெளியீடு<br>தேன்மொழி நூலகம்<br>திரு. வி. க. தெரு<br>வெள்ளலூர் கோவை 641 111 |
| வெளியிடப்பெற்ற நாள் | : | 2—10—1985 |
| தாள் | ; | அமராவதி 14.2. |
| நூலின் அளவு | , | 21 × 14 செ. மீ. |
| எழுத்து | : | 10, 12 புள்ளி |
| பக்கம் | : | 472 |
| படிகள் | ; | 1000 |
| அச்சகம் | : | கதிரவன் அச்சகம்,<br>எல். பி. ரோடு, சென்னை-41. |
| நூல்கட்டு | : | அட்டை |
| விலை | : | ரூ. 55-00 |
| விற்பனை உரிமை | : | **ஐந்திணைப் பதிப்பகம்**<br>282 பாரதி சாலை<br>(பைகிராப்ட்ஸ் ரோடு)<br>சென்னை 600 005<br>(தொலைபேசி ; 845712) |

வில்லிபாரதத்திலும்
சோதிடக் கலையிலும்
புகழ் பெற்று விளங்கும்
பவழ விழாக் கண்ட
எங்கள் தந்தையார்-
எங்கள் அன்னையார்
ஆகியோர்தம் திருவடிகட்கு...

# நூன்முகம்

திருக்குறள் காலந்தோறும் புத்துரைகளையும் புதுமைக் கருத்துக்களையும் பெற்று விளங்குகிறது. பழைய உரைகாரர் களிலிருந்து இன்று வரை எண்ணிறந்த அறிஞர் பெருமக்கள், குறளின் கருத்திலும் நடையிலும் தோய்ந்து தோய்ந்து புதிய புதிய பார்வைகளைப் பெற்றுக் குறளின்பம் துய்க்கின்றனர். 'தொட்ட னைத்தூறும் மணற்கேணி'யாய் அது தன்னை அணுகியவர்க்கு நறுஞ்சுவை நல்குகிறது.

பழைய உரைகாரர் பலருள்ளும் பரிமேலழகரின் உரை அறிஞர் பலருக்கும் புலமை விருந்து நல்கும் பான்மையதாய் விளங்குகிறது. நீண்ட நெடுங்காலமாகவே ஏனைய உரைகளைக் காட்டிலும் அது பல பதிப்புக்களையும், ஆய்வுக் குறிப்புக்களையும் பெற்று விளங்கு வது எண்ணுதற்குரியதாகும்.

'பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்' குறித்த இவ் ஆய்வு ஆறு இயல்களைக் கொண்டு விளங்குகின்றது உரை வரலாறு, பரிமேலழகர் வரலாறு, அவர்தம் பல்துறைப் புலமை, உரையின் பொது, சிறப்பு நெறிகள், ஒப்பாய்வு, உரையின் தனிப் பெருமை ஆகியன ஆராயப்படுகின்றன.

இவ் ஆய்விற்கு அடிப்படையாகத் திருக்குறளுக்கு எழுந்த 800-க்கும் மேற்பட்ட நூல்களைக் கண்டதில் 20 விழுக்காடு நூல்கள் குறளின் உரைகளின் உரை நூல்களாக இருந்தமை குறள் உரைகளின் தோற்ற வளர்ச்சியை எடுத்துக்காட்டுவன. அவ்வுரை களுள்ளும் மிகுதியானவை பரிமேலழகரைப் பற்றியதே என்றறியும் போது, இவ்வுரை மக்களிடம் பெற்றிருந்த செல்வாக்கை நன்கு காட்டும். இவ்வுரைக்குச் சார்புரைகளும் மறுப்புரைகளும் பல தோன்றியுள்ளமை கருதுதற்குரியது. தனித்த ஆய்வுக்குரியதாய் இம் மறுப்புரைகள் விளங்குகின்றன.

பரிமேலழகரின் திறனை அறிதற்கு அடிப்படையாக முதற்கண் பரிமேலழகரின் உரைக்குச் சொல்லடைவு தயாரிக்கப்பட்டது. 184 பக்கங்கள் கொண்ட 'திருக்குறள் பரிமேலழகர் உரை அகராதி' இவ் ஆய்வேட்டில் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளது. இத்தகைய சொல்லடைவு பரிமேலழகர் பற்றிய அனைத்துக் கருத்துக்களையும் முழுமையான நோக்கில் காண்பதற்குத் துணைசெய்யும். இச்சொல் லடைவுக்குத் திருப்பனந்தாள் காசிமடத் திருக்குறள் பரிமேலழகர் உரைப் பதிப்பு (1968) பயன்படுத்தப்பட்டது.

சென்ற நூற்றாண்டில் தோன்றிய பரிமேலழகர் உரையின் அரிய பழம் பதிப்புக்கள் முகப்புப் பக்கங்களின் படிகளும் பிறவும் ஆய்வேட்டில் இணைக்கப் பெற்றுள்ளன. குறளைத் திருத்திய சுகாத்தியரின் குறள் பதிப்பும் அவற்றுள் இடங்கும்.

இவ் ஆய்வுக்குப் பல்லாற்றானும் துணைநின்று அறிவுரை வழங்கி ஆற்றுப்படுத்திய பேராசிரியர்கள் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கட்கும், பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கட்கும் என் நெஞ்சுவந்த நன்றி.

ஆய்வு அறிவுரைகள் வழங்கிய ஆய்வறிஞர் குழுவினர் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரனார், பேராசிரியர் டாக்டர் மு. கோவிந்தசாமி, பேராசிரியர் அ. மு பரமசிவானந்தம், பேராசிரியர் பூ ஆலாலசுந்தரனார் ஆகியோர்க்கு என் நன்றி உரியது. இவ் ஆய்வுக்குத் திருக்குறள் தொடர்பான பல்வேறு நூல்களை நல்கிப் பழம் பதிப்புக்களைப் படி எடுக்கத் துணைபுரிந்த மறைமலையடிகள் நூலகர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கட்கு என் நன்றி உரியது.

இவ் ஆய்வேட்டினை உருவாக்கும்போது என்னை நெறிப்படுத்தி, தளர்ந்தபோதெல்லாம் ஊக்கமூட்டி உறுதுணையாயிருந்தவர் ஆசிரியப் பெருந்தகை பேராசிரியர் டாக்டர் தா. வே. வீராசாமி அவர்கள் ஆவர். பேராசிரியர் டாக்டர் அ, அ. மணவாளன், பேராசிரியர் டாக்டர் க த. திருநாவுக்கரசு, பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை, டாக்டர் வ. செயதேவன் ஆகியோர் ஆய்வுக்காலத்துப் பெரிதும் உதவினர். இவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சுவந்த நன்றி.

இவ் ஆய்வேட்டினை நூலாக வெளியிட இசைவு நல்கிய சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர், பதிவாளர், மற்றும் ஆட்சிக் குழுவினர்க்கு என் பணிவார்ந்த நன்றி.

தமிழ்நாடு அரசின் தமிழ்வளர்ச்சித் துறை தமிழில் சிறந்த நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் இந்நூலினை வெளியிட நிதி உதவி நல்கியது. தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் அவர்கட்கும், துறையினருக்கும் என் நன்றி உரியது.

இந் நூலினை நன்கு உருவாக்கித்தந்த கதிரவன் அச்சகத்தினருக்கும் நண்பர் திரு. கண்ணன் அவர்கட்கும் என் நன்றி உரியது.

சென்னை
2—10—'85

இராசேந்திரன் (கையொப்பம்)

# பொருளடக்கம்

# திருக்குறள்

## பழம் பதிப்புகளின் முகப்புப் பக்க விவரங்கள்

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. உ. பா. | — | அறத்துப்பால் உரைப்பாயிரம் |
| அகம். | — | அகநானூறு |
| அங். தோ. | — | அங்கவியல் தோற்றுவாய் |
| அடை. அடைக். | — | அடைக்கலக் காதை |
| அதி. | — | அதிகாரம் |
| அர. தோ. | — | அரசியல் தோற்றுவாய் |
| அறன். தோ. | — | அறன் வலியுறுத்தல் தோற்றுவாய் |
| அறன்வலி. | — | அறன்வலியுறுத்தல் |
| அன்பு. | — | அன்புடைமை |
| ஆய்ச்சியர். | — | ஆய்ச்சியர் குரவை |
| இ. வி. | — | இலக்கண விளக்கம் |
| இளம். | — | இளம்பூரணர் |
| உவம. | — | உவமவியல் |
| எழுத்து. | — | எழுத்ததிகாரம் |
| கம்ப. | — | கம்பராமயணம் |
| கலி. | — | கலித்தொகை |
| கனக. | — | கனக மாலையாரிலம்பகம் |
| காந்தருவ. | — | காந்தருவதத்தையாரிலம்பகம் |
| காமம். | — | காமத்துப்பால் |
| கானல். | — | கானல்வரி |
| குறள். | — | திருக்குறள் |
| குறுந். | — | குறுந்தொகை |
| கொலை. | — | கொலைக்களக்காதை |
| சிலப். சிலம்பு. | — | சிலப்பதிகாரம் |
| சீவக. | — | சீவகசிந்தாமணி |
| செய்யு. | — | செய்யுளியல் |
| சொ. பொ. | — | சொற்பொருள் விளக்கம் |
| சொல். | — | சொல்லதிகாரம் |
| திருவாய். | — | திருவாய்மொழி |
| தும்பை. | — | தும்பைப்படலம் |
| தொ. | — | தொகுதி |
| தொல். | — | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| நாடுகாண். | — | நாடுகாண் காதை |
| நாலடி | — | நாலடியார் |
| நான்மணி | — | நான்மணிக் கடிகை |
| நூ. | — | நூற்றாண்டு |
| நெடுநல் | — | நெடுநல்வாடை |
| ப. | — | பக்கம் |
| பக் | — | பக்கங்கள் |
| பதி. | — | பதிப்பு |
| பசப். | — | பசப்புறுபருவரல் |
| பண்பு. தோ | — | பண்புடைமை தோற்றுவாய் |
| பழமொழி | — | பழமொழி நானூறு |
| பாடாண். | — | பாடாண்படலம் |
| பு. வெ. மா. | — | புறப்பொருள் வெண்பா மாலை |
| புறம். | — | புறநானூறு |
| பெரி. துணை. தோ. | — | பெரியாரைத் துணைக் கோடல் தோற்றுவாய் |
| பெரும்பாண். | — | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | — | பேராசிரியர் |
| பொருநரா. | — | பொருநராற்றுப்படை |
| பொருள் | — | பொருளதிகாரம் |
| பொ. வி. | — | பொருள் விளக்கம் |
| மண்மக | — | மண்மகளிலம்பகம் |
| மணி. | — | மணிமேகலை |
| மரபு. | — | மரபியல் |
| முத்தி. | — | முத்தியிலம்பகம் |
| முத்தொ. | — | முத்தொள்ளாயிரம் |
| முன். | — | முன்னுரை |
| மே. கா. நூ. | — | மேற்காட்டிய நூல் |
| மொ. பெ. | — | மொழிபெயர்ப்பு |
| யுத்த. | — | யுத்தகாண்டம் |
| வஞ்சி | — | வஞ்சிப்படலம் |
| வழக்குரை. | — | வழக்குரைகாதை |
| வாகைப். | — | வாகைப்படலம் |
| விமலை. | — | விமலையாரிலம்பகம் |
| வை. மு. கோ. | — | வை. மு. கோபாலக்கிருஷ்ணமாச்சார்யார் |

வள்ளுவர் சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் தரம்,

# 1

# உரை வரலாறும் பரிமேலழகரும்

## உரையின் வரலாறு

### உரைநடையின் தொன்மை

மொழியின் தொன்மையையும் தோன்றிய காலத்தையும் வரையறை செய்வது என்பது இயலாததொன்று. மனித வரலாறு காலத்தால் நீண்டு செல்வதைப் போலவே மொழியின் வரலாறும் நீண்டு செல்கிறது. சில மொழிகளில் உரைநடைத் தோற்றத்தையும் வரலாற்றையும் வரையறை செய்வது இயலாத தொன்றாக உள்ளது. மொழியின் கூறுகளுள் பாட்டும் உரையும் முதன்மையானவை. தமிழ் மொழியில் நமக்குக் கிடைத்துள்ள மிகப் பழமையான நூல்களுள் முதன்மையான தாகிய தொல்காப்பியம் செய்யுளைப் பற்றியும் உரை நடையினைப் பற்றியும் சுட்டிச் செல்வது[1] இங்கு உளங்கொளத் தக்கது. எனவே பாட்டும் உரையும் மிகப் பழங்காலந் தொட்டே தமிழில் வழங்கி வருகின்றன என்பது வெள்ளிடைமலை.

### உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலம்

மிகப் பழங்காலத்தில், மக்கள் செய்யுள் வடிவிலேயே தங்கள் கருத்தை எளிதில் விளக்கும் திறன் பெற்றிருந்தவர்களாய் இருந்திருத்தல் வேண்டும். விரிவுரை விளக்கங்கள் இன்றியே பொருளுணர்ந்த காலமும் இருந்தது.

இக்கருத்தை 'உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலம் உண்டு' என்றும், 'உதாரணங்காட்டல் வேண்டாமையை உணர்ந்து உரை நடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து நூல்கள் என்பது கருத்து' என்றும் பேராசிரியர் மரபியலில் விளங்க உரைப்பதால் புலனாகிறது.[2]

உரை என்ற சொல்லும் தமிழில் 'சொல்' என்றே பொருள் விளங்குமாறு அமைந்துள்ளதும் வாய்மொழி இலக்கியமாக இவை முன் இருந்தன என்பதற்குத் தக்க சான்றாக அமைந்துள்ளது என்பர்.[3]

## கேள்விச் செல்வம்

'கற்றலினும் கேட்டலே நன்று' என்று கேள்விச் செல்வத்தைப் பழங்காலத்தில் போற்றினர். செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்கும்பான்மை அக்காலத்தில் மிகுதியும் வழக்கில் இருந்தது. 'கேள்வி என ஓர் அதிகார அமைப்பே குறளில் உள்ளது கருதத்தக்கது. 'மாணாக்கர் பாடம் கேட்கும் இயல்பு' என்றே மயிலைநாதர் விளக்கமும் தருவர்.[4]

இவை எல்லாம் உரை எழுதி நூற்களைப் படிப்பதை விடப் பிறரிடமிருந்து கேட்டுக் கல்வி பயின்ற வழக்கம் அக்காலத்தில் மிகுதியும் இருந்தது என்பதைக் காட்டுகின்றன.

## உரையின் வாய்மொழி வரலாறு

அக்காலத்து எழுது கருவிகளும் எழுதும் கலை விரைவில் வளரத் தடையாய் இருந்தன. பனையோலைகளில் எழுத்தாணி கொண்டு ஒரு நூலைப் பல நாட்கள் எழுதிச் சேர்த்துச் சுவடியாக்கிப் போற்றிக் காக்க வேண்டிய நிலை இருந்து வந்தது. ஒரே சுவடியைப் பலர் கூடிக் கற்கும் நிலையும் இருந்தது. ஒருவர் படிக்க மற்றவர் காதால் கேட்டு அறிந்தனர். மிகுதியாக எழுதி விளக்க வேண்டியவற்றை எழுதாமல் வாயால் கூறியே விளக்கிவந்தனர் 'விரிப்பின் பெருகும்; விரிவஞ்சி விடுத்தாம்; வல்லார்வாய்க் கேட்டுணர்க; வந்தவழிக் காண்க'[5] என்று உரையாசிரியர்கள் இடையிடையே எழுதிச்செல்லும் வழக்கம், அக்காலத்தில் எழுதுவதில் இருந்த இடர்ப்பாடுகளை உணர்த்தும். நூல்களுக்கு உரை எழுதாமல், வாயால் விளக்கிச் செவியால் அறிந்து கல்வி கற்றுப் புலமை பெறும் வழக்கம் அக்காலத்தில் நாடெங்கும் பரவியிருந்தது.[6] எனவே பலமுறை வாய்மொழியாக வழங்கி வந்த உரைகளே பின்னர் எழுதும் பேறுபெற்று அழியா நிலை பெற்றன எனலாம்.

இறையனார் அகப்பொருள் உரை பல தலை முறைகளாக வாய்மொழியாக வழங்கி வந்தது என்பதற்கு அவ்வுரையிலேயே அகச்சான்று உண்டு.[7]

'மதுரை ஆலவாயிற் பெருமானடிகளால் செய்யப் பட்ட நூற்கு நக்கீரானரால் உரை கண்டு குமார சுவாமியால் கேட்கப்பட்டது என்று'

'இனி உரை நடந்து வந்தவாறு சொல்லுதும்'

'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் கீரங் கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவ னாரக்கு உரைத்தார்; அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனார்க்கு உரைத்தார்; அவர் செல்லூர் ஆசிரியர் ஆண்டைப் பெருங்குமார னார்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத்து ஆசிரி யர்க்கு உரைத்தார்; அவர் மாதளவனார் இளநாக னார்க்கு உரைத்தார்; அவர் முசிறி ஆசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார். இங்ஙனம் வருகின் றது உரை'

என்னும் பகுதி உரையின் வாய்மொழி வரலாற்றை நன்கு உணர்த்தும்.

## குறிப்புரை

காலப்போக்கில் இவ்வுரை விளக்கங்களே பல்வேறு வடிவம் பெற்றன. விளக்கங்கள் மிகுதியாக நினைவில் நிறுத்து வதும் அரியதாயிற்று. எனவே உரைகளை எழுதி வைத்துப் போற்ற வேண்டிய இன்றியமையாத நிலை ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

இந்நிலை ஏற்பட்டபோதும் அக்காலத்தில் எழுதுவதில் இருந்த தொல்லைகளால் முதலில் உரைகள் குறிப்புரைக ளாகவே அமைந்தன. விரிவும் விளக்கமுமமைந்த உரையாக அமையவில்லை. அருஞ்சொற்களுக்குப் பொருளும், சொற் களைக் கொண்டு கூட்டி முடிக்கும் முறையும் நினைவிற்காகச் சிலவரலாற்றுக் குறிப்புகளையுமே கொண்டு அவை அமைந்தன.

சான்றாகச் சிலப்பதிகாரத்திற்கு அரும்பதவுரையைக் கொள்ளலாம். மேலும் ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் எனும் சங்கத்தொகை நூல்களுக்குக் குறிப்புரைகளே முதலில்

இயற்றப்பட்டன. அகநானூற்றிற்கும் (தொண்ணூறு பாடல்கள்) பழைய உரை குறிப்புரையாகவே கிடைத்துள்ளது. புறநானூற்றில் பழைய உரை பொழிப்புரையாகவே உள்ளது: பின்னர் எழுந்த உரைகள் விளக்கவுரைகளாக மலர்ந்தன.

கருத்துக்கள் வளர வளரப் பொழிப்புரை, விளக்கம், மேற்கோள் முதலியன உரைகளில் இடம்பெற்று வளர்ச்சியுற்றன. இக்கருத்திற்கு அரண் செய்யும் வகையில் சிலப்பதிகாரத்திற்கு அரும்பதவுரையைத் தொடர்ந்து அடியார்க்கு நல்லாரின் உரை எழுந்தது.

தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரை முதன் முதலில் சிலப்பதிகாரமே 'உரையிடை யிட்ட ப்ாட்டுடைச் செய்யுள்' என்று போற்றப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் தொடர்ந்து உரை நடை வருவதைக் காண இயலாது. உரைபெறு கட்டுரை, உரைப்பாட்டுமடை முதலிய தலைப்புக்களில் உரைநடை இடையிடையே வருகின்றது. அரும்பத உரையாசிரியர் 'உரைப்பாட்டு மடை' என்பதற்கு 'உரையாகிய பாட்டை இடை மடுப்பது' என உரை எழுதுவர்.[8]

**விளக்கவுரை**

உரையின் வளர்ச்சி மூலபாடம் சொல்லல், கருத்துரைத்தல், சொல் வருவித்தல், சொற்பொருள் உரைத்தல், பொழிப்புரைத்தல், உதாரணங்காட்டல், வினாத்தோற்றல், விடை கொடுத்தல், விசேடங்காட்டல், விரிவு காட்டல், அதிகார வரவு காட்டல் துணிவு கூறல், பயனொடுபடுத்தல், ஆசிரிய வசனம் காட்டல் என்று பதினான்கு வகைகளாக விரிந்தது என்பதை மயிலைநாதர் உரையால் அறிய முடிகிறது [9]

தொல்காப்பியர் காலத்துக்கு முன் இருந்து, பின் தோன்றாது நின்ற உரைநடை, சிலப்பதிகார காலத்தில் மறைவாகத் தோன்றி மறுபடியும் சில நூற்றாண்டுகள் கழித்தே வளர்ச்சியுற்றது என்ற கருத்து இவண் கருதத்தக்கது [10]

**உரைநடையின் ஊற்றிடம்**

இறையனார் களவியலுக்கு உரை வகுத்த நக்கீரர் காலத்திலிருந்துதான் (கி பி, எட்டாம் நூற்றாண்டு)[11] உரை வரலாற்றின் சிறப்பு தொடங்குகிறது என்பர். ஒரு நூல் முழுமைக்கும் முழு உரையாகவும் முழுமை பெற்ற உரையாகவும் விளங்

குவது நக்கீரரின் இறையனார் களவியல் உரையே ஆகும். எனவே இதனை உரைநடையின் ஊற்றிடம் என்று கூறுவர்.[12]

## உரையாசிரியர் காலம்

கி. பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டு வரை தமிழ் உரைநடை செழித்து வளர்ந்தோங்கியது இக்காலத்தில் பல்வேறு பழந்தமிழ் நூல்களுக்கு உரைகள் எழுந்தன. அறிஞர் இக்காலத்தைத் தமிழ் உரை நடை வரலாற்றின் பொற்காலம் என்பர்.[13]

சோழப் பெருமன்னர் ஆட்சி மிகச் சிறப்புற்று விளங்கிய இக்காலத்திலே சைவ சித்தாந்தம், விசிஷ்டாத்துவிதம் முதலிய தத்துவக் கொள்கைகள் நாட்டிலே பரவின. அவை முதன் முதலாகச் செய்யுள் வடிவத்தில் அமைந்துள்ள நூல்களிலேயே வரலாயின. அந்நூல்களிற் காணப்படும் கருத்துக்களை மக்களுக்குத் தெளிவாக விளக்குதற் பொருட்டு அவற்றிற்கு உரைகள் வகுக்கப்படலாயின. தத்துவக்கொள்கைகளைத் தருக்க முறைப்படி விளக்க வேண்டியிருந்ததனாலே தமிழ் உரைநடை ஒரு புது வழியில் விருத்தியடையலாயிற்று[14] என்று தமிழ் உரைநடை வளர்ச்சிக்கான இக்காலச் சூழலை அறிஞர் ஆராய்ந்து கூறுவர்.

## மீட்சி இயக்கம்

இவ்வுரை நூல்கள் எழுந்த காலச்சூழலை ‘மீட்சி இயக்கம்’ என்று கூறும்அறிஞரின் கருத்தும் இங்கு எண்ணுதற்குரியதாகும்.

இடைக்காலத்தில் வடமொழிச் சொற்களும் வடமொழிக் காவிய மரபுகளும் தமிழிற் குடிபுகுந்தன. பல்வேறு நல்லியல்பு, களும், தமிழில் வந்தமைந்தன. ஆனால் அவற்றோடு சில தீய தன்மைகளும் புகுந்து விட்டன. சுருக்கம், நேர்மை என்ற இயல்புகள் இரண்டும் ஒழிந்து போயின ; அலங்காரங்களும் ஆடம்பரங்களும் தலையோங்கிவிட்டன .. அக்காலத்துக் கல்வியாளர் சிலர் சங்கத்தமிழின் மீதும் அதன் நன்முறையைக் கைப்பற்றிய பெருநூல்களின் மீதும் பொது மக்கள் பற்றுக் கொண்டு கற்கும்படி செய்ய வேண்டுமென்று எண்ணினர். இதனால் சங்கத் தமிழுக்கு மீட்சி இயக்கம் (Return to classicism) நிகழ்வதாயிற்று. இம்மீட்சி இயக்கத்திற்கு அறிகுறியாகச் சங்க இலக்கியங்களுக்கும், அவற்றோடொத்த பெருமை

யுடைய குறள் போன்ற பெருநூல்களுக்கும் செவ்விய உரைகள் எழுதப்பட்டன. ஒரு வலுவான இலக்கிய இயக்கத்தின் விளைவாகவே தோன்றிய, இந்த இயக்கம் கி. பி. பதின் மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிச் சுமார் மூன்று நூற்றாண்டு கள் வரை தமிழ் இலக்கிய உலகில் சக்தியுடன் இயங்கியது என்பர்.[15]

இக்காலத்தை ஒட்டியே சற்று முன்னும் பின்னுமாக வேதாந்தத் தத்துவங்கட்கு வடமொழியில் சங்கரர் இராமா நுசர், மத்துவர் ஆகியோரால் சூத்திரங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றிற்குப் பல பேருரைகள் எழுந்தன. வைணவ நூல்களுக்கு மணிப்பிரவாள உரைகளும் மலர்ந்தன.[16]

இவ்வாறு வடமொழி உரைகள் பல எழுந்ததை ஒப்பிட்டுப் பார்த்தால் இக்காலத்திலேயே இரு மொழிகளிலும் உரை நூல்கள் தோன்றி வளர்ந்தன என்பது புலனாகும்.

### உரை முயற்சி

குறிப்பிட்ட ஒரு காலத்தில் வாழும் மக்களிடையே 'அறிவுப் பசி' தலையெடுக்கின்றபொழுது, தங்கள் பழம் பெரும் நூல்களுக்குத் தங்கள் காலத்திய வாழ்க்கைச் சூழலுக் கேற்ப விளக்கம் தர அக்காலத்திய அறிஞர்கள் முயலுகின் றனர். அவர்களுடைய உள்ளத்தில் ஆராய்ச்சி மனப்பான்மை மேலோங்கி நிற்கின்றபொழுதும், பழமையில் புதியன காண வேண்டும் என்ற உணர்ச்சித் துடிப்பு உண்டாகின்றபொழுதும் அவர்கள் தங்கள் பழையநூல்களுக்கு உரை எழுதுகின்றனர்.[17] எனவே இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபடும் அறிஞர்களின் சிந்தனை வளர்ச்சியே உரையெனலாம்.

இடைக்காலத்தில் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்ட புலவர் சிறந்து விளங்கிய பண்டைக்கால நூல்களுக்கு உரைகள் எழுது வதன் மூலமே தங்கள் ஆராய்ச்சிக்கு உருவம் கொடுத்தனர். உரை எழுதுவதை அரிய இலக்கிய ஆக்க முயற்சியாகவே கருதித் தமிழ்ப் புலவர் அதைக் கையாண்டனர்.[18]

எனவே பண்டையோர் நூல்களுக்கு உரையெழுதும் முயற்சிகளை இலக்கிய ஆராய்ச்சியாகவும், இலக்கிய ஆக்க முயற்சியாகவுமே கருதினர் என்பது நன்கு புலனாகும்.

**உரை வரையறையும் வகைகளும்**

தொல்காப்பியர் உரையின் வகைகளை இரண்டு வகையாகப் பாகுபடுத்தி உரைப்பர். அவை காண்டிகை, உரை என்பன.[19] இறையனார் அகப்பொருள் உரை கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத் திரட்டல், அகலங்கூறல் என நான்கு வகைகளைக் குறிக்கின்றது.[20] நம்பியகப் பொருள் இந்நான்கு வகைகளையும் பின்வருமாறு விளக்குவது உளங்கொளத்தக்கது.[21]

> "அவற்றுள் கருத்து உரைத்தலாவது, சூத்திரத்தின் உட்கோள் உரைத்தல்.
>
> கண்ணழித்தலாவது சூத்திரத்துள் சொற்றோரும் பொருள் உரைத்தல்.
>
> பொழிப்புத் திரட்டலாவது சூத்திரத்துப் பொருளை யெல்லாம் தொகுத்துரைத்தல்.
>
> அகலங் கூறலாவது, சூத்திரப் பொருளைத் தூய்மை செய்தற்குக் கடாவும் விடையும் உள்ளுறுத்து விரித்துரைத்தல்."

யாப்பருங்கல விருத்தியுரையும் உரைகள் பத்துவகைக் குற்றங்களின்றியும், பத்துவகை அழகுகள் பொருந்தியும், எழுவகை மதங்கள் பொருந்தியும் அமைதல் வேண்டும் என்பதனை.

> முத்திறத்தானும், மூவிரு விகற்பினும்
> பத்து விதத்தானும், பதின்மூன்று திறத்தானும்
> எழுவகையானும், இரண்டு கூற்றானும்
> வழுவு நனிநீங்க, மாண்பொடும் மதத்தொடும்
> யாப்புறுத்துரைப்பது சூத்திர உரையே[22]

என்னும் நூற்பாவால் உரை இலக்கணத்தை நன்கு விரித்துக் காட்டும்.

இவற்றுள் முத்திறம் என்பது பொழிப்பு, அகலம், நுட்பம் என மூன்று வகைப்படும்.

மூவிரு விகற்பமாவது எடுத்துக்காட்டல், பதம் காட்டல், பதம் விரித்தல், பதப்பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல் ஆகியனவாம்.

பத்துவிதமாவன,

சொல்லே சொற்பொருள் சோதனை மறைநிலை
இலேசே எச்சம் நோக்கே துணிபே
கருத்தே செலுத்தலென் றீரைங் கிளவியும்
நெறிப்பட வருவது பனுவல் உரையே

என்னும் நூற்பாவால் விளக்கப்படுகின்றன.

பதின்மூன்று திறமாவன, சூத்திரம் தோன்றல், சொல் வகுத்தல், சொற்பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல் விசேடம் காட்டல், உதாரணம் காட்டல், ஆசிரிய வசனம் காட்டல், அதிகார வரவு காட்டல், தொகுத்து முடித்தல், விரித்துக் காட்டல், துணிவு கூறல், பயனொடு புணர்த்தல் என்பன.

எழுவகை பொழிப்பு, அகலம், நுட்பம், நூல்எச்சம், பதப்பொருள் உரைத்தல், ஏற்புழிக்கோடல், எண்ணல்என்பன.

இரண்டு கூறாவன தொகுத்துக் கண்ணழித்தல், விரித்துக் கொணர்ந்து உரைத்தல் என இவை.

பத்துவகை வழுக்களாவன, குன்றக் கூறல், மிகைபடக் கூறல், கூறியது கூறல், மாறுகொளக் கூறல், வழூஉச்சொற் புணர்த்தல், மயங்க வைத்தல், வெற்றெனத் தொடுத்தல். மற்றொன்று விரித்தல், சென்று தேய்ந்திறுதல், நின்றுபயன் இன்மை ஆகியன இன்றி உரை அமைக்கப்படல் என்று மேலும் வலியுறுத்தும்.

உரை, சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின் றோர்க்கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசை உடைமை, ஆழமுடைத்தாதல் உலகமலையாமை, முறையின் வைத்தல், விளங்குதாரணத்தாகுதல் ஆகிய மாண்புகளைப் பொருந்தியிருத்தல் வேண்டும் என்று கூறும்.

எழுவகை ஆசிரிய மதங்களையும் கொண்டு உரை அமையும் என்று உரைக்கும், அவை உடன்படல், மறுத்தல், பிறர் தம் மதமேற்கொண்டு களைதல், தாஅனாட்டித் தனாது நிறுத்தல், இருவர் மாறுகோள் ஒருதலை துணிதல், பிறநூற் குற்றம் காட்டல். ஏனைப் பிறிதொடு படாஅன் தன் மதம் கொளல் என்பன.

இவை உரை இலக்கணத்தினைப் பற்றிய யாப்பருங்கல விருத்தியுரையின் கொள்கைகளாம். நன்னூலார் கூறும் இலக்கணத்தினையே இவ்வுரை விரித்துரைக்கின்றது எனலாம்.[23]

இங்ஙனம் முன்னோர் நெறியில் சென்ற யாப்பருங்கல விருத்தியுரை, இறுதியில்,

> "எடுத்துக் கொள்ளப்பட்ட பொருளவற்றுள் யாதானும் ஒருவகையாற் கேட்போர் உணர்வு புலன் கொள்ளுமாற்றால் எடுத்துக்கொண்ட சூத்திரப் பொருள் உரைக்க வேண்டும்"[24]

என்றுரைப்பது எண்ணுதற்குரியதாகும்,

இங்ஙனம் கூறிய உரைப்பண்புகள் அனைத்தும் இலக்கண நூற்பாக்களுக்கு உரியன எனினும் இப்பண்புகளே பொதுவாக இலக்கிய உரைகளுக்கும் பெரிதும் பொருந்தும் எனலாம். சான்றாக இவ்விலக்கண நூல்களுக்கு முன்னர்த் தோன்றிய அற இலக்கியமாகிய நாலடியாரும் ஒரு நூலின் உரை எவ்வாறு அமைந்து விளங்க வேண்டும் என்பதனைக் கீழ்வருமாறு சுட்டுகிறது :

> பொழிப்பகல நுட்பநூ லெச்சமிந் நான்கிற்
> கொழித்தகலங் காட்டாதார் சொற்கள் பழிப்பி
> னிரையாமோ சேர்க்கு நெடுங்குன்ற நாட
> உரையாமோ நூலிற்கு நன்கு[25]

இச்செய்யுளுக்கு உரை எழுதிய பதுமனார் திரண்ட பொருளைச் சொல்லலும் விரித்துரைத்தலும், கடாவும் விடையுமாகச் சொல்லுதலும், இலேசான பொருளை உரைத்தலும், எச்சவும்மைகளால் எஞ்சிய பொருளை உரைத்தலும் என உரையியல்புகளைக் கூறுவதும் உளங்கொளத்தக்கது.

### திருக்குறள் உரைகள்

குறளுக்குக் காலந்தோறும் உரைகள் தோன்றிக் கொண்டேயுள்ளன. பொழிப்புரைகளும் விளக்கவுரைகளும், குறிப்புரைகளும், தெளிவுரைகளுமாகப் பல உள்ளன. பழைய உரைநூல்கள், புத்துரைகள், ஆய்வு நூல்கள் உட்படக் குறளைப் பற்றி எண்ணூற்றிற்கும் மேற்பட்ட நூல்கள் தோன்றியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.[26]

இந்நூல்களுள் இருபது விழுக்காடு உரைநூல்களே என்றறியும்போது வள்ளுவத்திற்குக் காலந்தோறும் தோன்றி வருகின்ற உரை வளர்ச்சிப் போக்கை ஒருவாறு உணர இயலும். இங்ஙனம் தோன்றிய உரை நூல்களை,

1. மூல உரை நூல்கள்
2 உரைத் தழுவல்கள்
3 உரைக்கு எழுந்த உரைகள்
4. நிறளுக்கு எழுந்த செய்யுள் உரைகள்[27]

என நால்வகையாகப் பிரிக்கலாம்.

இவற்றுள் திருக்குறளுக்கு எழுந்த உரைநூல்களுள் ஒன்றான பரிமேலழகர் உரை குறித்து இனிக் காண்போம்:

## பரிமேலழகரின் வரலாறு

திருக்குறளுக்கு உரை கண்ட பழைய உரையாசிரியர் பதின்மருள் பரிமேலழகர் ஒருவர்.[28] இவரைப் பரிமேலழகி யார், பரிமேலழகியான், பரிமேலழகரையன் என்றும் வழங் குவர். இத்தொடரின் பொருள், குதிரை நம்பிரான் மீது அலங் காரத் திருக்கோலம் கொண்டருளி உலாவரும் பெருமான் என்பதாகும்.[29] இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுச் செய்தி கள், பிற குறிப்புகள் ஆகியவற்றின் துணைகொண்டு ஓரளவே இவருடைய வரலாற்றை அறிய முடிகிறது, எனினும் தெளிவான வரலாறு எதுவும் கிடைத்திலது.

தொண்டை மண்டலச் சதகப்பாடல் இவரைக் காஞ்சி புரத்தைச் சார்ந்தவர் என்று கூறும்.[30] சாசனக்கவி சரித நூலாசிரியரும் கல்வெட்டுச் சான்றுகளைக்கொண்டு பரிமே லழகர் காஞ்சிபுரத்தினர் என்பர்[31] மண்டல சதகப் பதிப் பாசிரியர் இவர்தம் வரலாற்றைக் கூறும்போது, ''இளமையில் அழகர் எனப் பெயர் பெற்று, தமிழ்ப் புலமையும் வடமொழிப் புலமையும் ஒருங்கே சிறக்க ஆய்ந்து குறளுக்குத் தருமர் முதலான ஒன்பதின்மர் இயற்றிய உரையேயன்றித் தாமும் ஓர் உரை வகுத்தனர். அவ்வுரையைத் தங்காலத்து அரசு புரிந்த வேந்தன்பாற் சென்று காட்ட, அம்மன்னன் இதனை இங்குள்ள உருக்குப் பரிமேலிருந்து கூறுவீராயின் ஒப்புவோ மென, அங்ஙனமே பழுக்கக் காய்ந்த பரிமேலிருந்து தம் உரை சிறந்ததெனக் கூறிப் பழுதில்லாமல் வந்தமையால் பரிமேலழகர்

எனப் பெயர் சிறந்தனர். இதனை, 'திருத்தகுசீர்த் தெய்வத் திருவள்ளுவர்' எனவும், 'பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ' எனவும் கூறியிருத்தலால் உணரப்படும், வள்ளுவர் செய் தருளிய திருக்குறளுக்கு உரை கண்ட பதின்மருள், முற்பட்டவராகிய தருமர் ஆருகதர். அவரை ஆருகதர்கள் தருமசேனர் என்பர். அவர் செய்த உரையிலே பெரும்பாலும் ஆருகதமதக் கொள்கைகளே நிரம்பியுள்ளன. இவ்வாறே மற்ற உரையாசிரியர்களும் தத்தம் சார்பு பற்றி உரைத்தனர். அவருள் நச்சினார்க்கினியர் ஒருவரே திருவள்ளுவரைப் பொது நூலெனக் கொண்டு நடுநிலை கலங்காது உரை செய்தனர். ஆயினும், அவ்வொன்பதிமர் உரையும் மெய்யுரை அல்லவெனக் கண்டே பரிமேலழகர் தாம் உரை செய்யத் துணிந்தனர். இவர் யோகப் பயிற்சியுடையரென்றும் ஒவ்வொரு சொல்லுக்கும் சமாதியிலிருந்தே மெய்ப் பொருள் கண்டாரென்றும், பூர்வம் வைணவராயிருந்து பின்னர்ச் சுப்பிரமணிய உபாசகர் ஆயினாரென்றும், ஒரு கர்ண பரம்பரைச் செய்தி உண்டு. இஃதெவ்வாறாயினும் ஒவ்வொரு சொற்கும் சமாதியிலிருந்தே மெய்ப்பொருள் கண்டாரென்பது அவர் உரையை ஊன்றி நோக்குந்தோறும் நம்பத்தக்கதாகின்றது" என்று எழுதுவர். இக்கருத்துக்களை ஏற்றுக் கொள்வதற்கு எந்தவிதமான ஆதாரங்களும் இல்லை என்பர் அறிஞர்.[32]

பெருந்திரட்டில் காணப்படும் பழம்பாடல் ஒன்று 'கலை தேர் ஒக்கைக் காவலன்'[33] என்று பரிமேலழகரைக் குறிப்பிடுவதால் இவர், இக்காலத்தில் ஒக்கூர் என வழங்கப் பெறும் ஒக்கையைச் சார்ந்தவர் எனக் கூறுவர். இது பாண்டி நாட்டில் உள்ளது. மேலும் 'ஒக்கைக் காவலன்' என்று சுட்டு வதால் இவர் அரசியலில் பங்கு கொண்டவர் எனவும் கருத இடமுண்டு. பொருட்பாலிற்கு இவர் எழுதிய உரையே இதற்குச் சான்றாகத் திகழ்கிறது எனலாம்.

பெருந்திரட்டில் உள்ள மற்றொரு செய்யுள் 'போற்று தமிழ்க்கூடற் பரிமேலழகியான்' என்று இவரைக் குறிப்பிடுவ தால் மதுரையைச் சார்ந்தவர் என்றும் கூறுவர்[34]

பரிமேலழகர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்தவர் என்ற செவிவழிச் செய்தியும் உண்டு.[35] இம்மாவட்டத்தில் உள்ள கீழஊரால் என்னுமிடத்தில் 'பரிமேலழகர் நினைவாலயம்' என்னும் கோவிலும் உண்டு,[36] எனினும் அவர் அங்கு

வாழ்ந்தார் என்பதற்கு இச்செவிவழிச் செய்தியன்றி வேறு தக்க ஆதாரங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

இதுகாறும் கிடைக்கப்பெறும் இலக்கியக் கல்வெட்டுச் சான்றுகளால் பரிமேலழகர் பாண்டி நாட்டிலும், காஞ்சியிலும், வாழ்ந்த ஓர் அறிஞர் என்று மட்டுமே கொள்ளலாம் என்று இவ்விரு கருத்துகளையும் இணைத்துப் பொதுமை காண்பர் சில இலக்கிய வரலாற்றாசிரியர்கள்.[87]

**காலம்**

திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், பரிமேலழகரின் குறள் உரை, திருத்தொண்டர் புராணம், சித்தியார் ஆகிய ஐந்து நூல்களும் தண்டமிழில் தரமான நூல்கள் எனத் திறனாய்வு செய்த அறிஞர் ஒருவரின் பழம்பாடல் பரிமேலழகர் காலத்தினை வரையறுக்க உதவுகின்றது.

வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தஉரை — ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் தரம்[88]

என்பது அப்பாடல். இதனைப் பாடிய உமாபதி சிவாச்சாரியர் காலம் கி. பி. 1313 ஆகும். எனவே பரிமேலழகர் கி. பி. 14 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் எனலாம்.

காமத்துப்பாலின் முன்னுரையில் பரிமேலழகர் 'வடநூல் போசராசனை'ப் பற்றிக் குறிப்பிடுகிறார். போசராசன் வட நாட்டில் 11 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மன்னன். பரிமேலழகர் குறிப்பிடும் கருத்து, போசன் செய்த சிருங்காரப் பிரகாசம் என்ற நூலின் முதல்பிரகாரத்து ஆறாம் சுலோகத்தில் உள்ளது.[89] இதனால் பரிமேலழகர் 11 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவராகிறார்

'வானோக்கி வாழும் குடி' (542) என்ற குறளுக்கு உரை கூறும்போது பரிமேலழகர் சேனாவரையர் கருத்தைத் தழுவி உரை எழுதுகிறார். 'ஆக்கமும் கேடும்' என்ற குறளுரையில் (642) செய்யுளாதலிற் சுட்டுப் பெயர் முன் வந்தது என்று காட்டிச் செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக் கண்டு கொள்க என்று சேனாவரையர் காட்டாது விட்ட உதாரணத்தை விளக்கியும், சொல்லெச்சந்துக்க உரையாசிரியர் கொள்கையைச்

சொல்லாது, சேனாவரையர்கருத்தைத் தழுவியும் (சொல். 421 உரை - குறள் 10, 37 உரை) செல்வது இங்கு எண்ணுதற் குரியது. இதனால் சேனாவரையர் காலத்திற்குப் (கி. பி.1876) பிற்பட்டவராகிறார் பரிமேலழகர்.[40]

பரிபாடலில் வரும் 'வாண்மிகுவய மொய்ம்பின்' (பரிபாடல் 9-57) என்னும் தொடருக்குப் பரிமேலழகர் 'வாட்டழும்பு நெருங்கிய வெற்றி மொய்ம்பு' என்று உரைகூறியுள்ளார்; 'வண் புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்' (முருகு-169) என்புழி வசிந்து என்பதற்குப் பகைவர் மார்பைப் பிளந்தென்று பொருள் கூறிப் 'படைக்கலல்களால் வடுப்பட்டு என்று பொருளுரைத்தல் இறைவனாதலிற் பொருந்தாது' என்று நச்சினார்க்கினியர் கூறும் விசேட உரை பரிமேலழகர் கருத்தை மறுப்பதாகக் கொண்டு பரிமேலழகர் காலம் நச்சினார்க்கினியரின் காலத்திற்கு முற்பட்டது என்பர் இதனடிப்படையில் காணின் 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நச்சினார்க்கினியருக்கு முற்பட்டவராகிறார் பரிமேலழகர்

இலக்கணக் குறியீட்டுத் தொடரான 'ஒரு பொருட் பன்மொழி' என்னும் சுருங்கிய சொல் தொல்காப்பியத்தில் இல்லை. தொல்காப்பியம் இதனை,

ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்[41]

என்று கூறும். நச்சினார்க்கினியர் 'மீமிசை' போன்றதனை 'ஒருபொரு ளிருசொற் பிரிவில்லாதது' என நீண்டதோர் குறிப்பினால் வழங்கினார். முதன் முதலில் 'ஒருபொருட் பன்மொழி' என்ற சுருங்கிய அழகிய தொடரை வழங்கியவர் பவணந்தியாரேயாவர். இவர் காலம் கி. பி. 1212. பரிமேலழகர் இத் தொடரை இரண்டு இடங்களில் (571, 863 உரை) எடுத்தாண்டுள்ளார். இக்குறிப்பினாலும் பரிமேலழகர் இக்காலத் திற்குப் பிற்பட்டு வாழ்ந்தவர் என்பது புலனாகின்றது.

பெரியபுராணம் உயிர்களுக்கு வரும் ஐந்து வகை இடையூறுகளையும் கூறி அவற்றை மன்னன் நீக்கவேண்டும் என்றும் கூறும்[42] பரிமேலழகர் 442ஆம் குறளுரையில் மக்களால் வரும் துன்பங்களாவன, பகைவர் கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் என்னும் இவர்களான் வருவன என்று எழுதுவார். பெரியபுராணப் பாடல் கருத்தினைப் பரிமேலழகரின் உரை பெரும்பாலும் பொருந்தியிருப்பதால் பரிமேலழகர் சேக்கிழார் கருத்தையே மனத்துள் கொண்டு கூறியிருப்பர் என்று அறிஞர்

கருதுவர்.[43] இக்குறிப்பினாலும் சேக்கிழார் (1133-1150) காலத்திற்குப் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தவராகிறார் பரிமேலழகர்,

காஞ்சிபுரம் வரதராசப் பெருமாளாகிய அருளாளப் பெருமாள் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்று பரி மேலழகிய பெருமாள் தாதன் என்னும் பெயரைச் சுட்டுகிறது. இக்கல்வெட்டு தெலுங்குச் சோழனாகிய விசய கோபாலனது 22 ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும் (சகம் 1193-கி, பி. 1271).[44] புவியாளப் பிறந்த ஆமூர்நீலகங்கரையர் என்னும் அரசர் பரிமேலழகிய பெருமாள் தாதன் என்பாரிடம் நிலம் வாங்கிய செய்தி இங்குக் குறிப்பிடப்படுகிறது. வண்டுவரைப் பெருமாள் என்பது அவர் பிள்ளைத் திருநாமம் என்றும், பரிமேலழகிய பெருமாள் தாதர் என்பது தாஸ்ய நாமமுமாக அமைந்திருத்தல் வேண்டும் என்றும், காலம், இடம், சமயம் முதலான பல ஒற்றுமைகளால் இத்தாதரே பரிமேலழகர் என்றும் அறிஞர் கருதுவர்.[45]

மேற்குறித்த இலக்கியச் சான்றுகளையும், கல்வெட்டுச் சான்றுகளையும் கொண்டு ஆராயின் பரிமேலழகர் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது உறுதியா கின்றது.

**சமயம்**

இவர் வைணவ சமயத்தினர் என்பது இவரது பெய ராலும்[46] மேற்குறித்த கல்வெட்டாலும் நன்கு புலனாகின்றது. இனி உரைச் சான்றுகள் வருமாறு :

'அடியளந்தான்' (610) என்பதற்குத் 'தன் அடியள வானே எல்லா உலகையும் அளந்த இறைவன்' என்று திருமாலைக் குறிப்பிடல்,

'தாமரைக் கண்ணான் உலகு' (1103) என்றவிடத்து 'துறந்த யோகிகள் எய்தும் செங்கண்மால் உலகு' என்று கூறி, 'இந்திரன் உலகு என்றுரைப்பாரும் உளர்; தாமரைக் கண்ணான் என்பது அவனுக்குப் பெயரன்மையின் அஃதுரை யன்மையறிக' என்று பிறருரையை மறுத்துத் தம் சமயப்பற்றை வெளிப்படுத்தல்,

இறைமாட்சி அதிகாரத்தின் தோற்றுவாயில், 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்று பெரி-யாரும் பணித்தார்' என்று நம்மாழ்வாரின் பாடலை (4. 4. 8) மேற்கோளாகக் காட்டல்.

'பற்றற்றே கண்ணே' (349) என்னும் குறள் உரையில் திருவாய்மொழியை (1, 2, 5) மேற்கோளாகக்காட்டல்.

370ஆம் குறளுரையில் 'அவா நீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும்' என்பதற்குத் திருவாய்மொழிப் பாட லான 'நன்றாய் ஞானம் கடந்து போய்' என்னும் பாடல் முழுவதையும் எடுத்துக்காட்டாகத் தருதல்.

குறளுரையிலன்றி இவர் எழுதிய பரிபாடல் உரைச் சிறப்புப் பாயிரம் இவரை 'நீள்நிலம் அளந்தோன் தாள் தொழும் மரபில் பரிமேலழகன்'[47] எனச் சுட்டுவதாலும், பரிபாடலின் உரைக்குப் பாயிரமாகக் கூறியிருக்கும் கடவுள் வணக்கப் பாடலில் திருமாலுக்கு வணக்கம் கூறியிருத்தலாலும் இவர் வைணவ சமயத்தினர் என்னும் கருத்து மேலும் உறுதி யாகின்றது

## பரிமேலழகரின் உரை நூல்கள்

திருக்குறளுக்கு மட்டுமேயன்றிப் பரிமேலழகர் பரிபாடலுக் கும் உரை செய்துள்ளார் என்பது மூன்று நூற்றாண்டுகட்கு முன் வாழ்ந்த திருக்குருகூர் - திருமேனி இரத்தின கவிராயர் எழுதிய 'திருக்குறள் நுண்பொருள்மாலை' என்னும் நூலாலும் புலப்படுகின்றது.[48]

மேலும், இவர் திருமுருகாற்றுப்படைக்கும் உரை எழுதிய தாகக் கூறுவர்.[49]

## பரிமேலழகரைப் பற்றிய ஆய்வுகள்

பரிமேலழகரைப் பற்றி எழுந்த ஆய்வுகளுள் பெரும் பாலானவை சிறு கட்டுரைகளாகவே உள்ளன. அவற்றுள்ளும் பல அவர்தம் வடமொழிச்சார்பு மறுப்புரைகளாகவே விளங்கு கின்றன.

நூல்களுள் அவர் உரையை மறுத்துப் புத்துரைகளும் எழுந்துள்ளதைக் குறிப்பிடல் வேண்டும். நாமக்கல் கவிஞர், ப—உ, 2,

புலவர் குழந்தை, பாவாணர் ஆகியோர்தம் உரைநூல்கள் குறிப்பிடத்தக்கன. கா. அப்பாத்துரையாரின் மணிவிளக்க வுரையில் பரிமேலழகரின் உரைக்கூறு பற்றிய குறிப்புகள் உள.

மு. அருணாசலம் அவர்களின் 'தமிழ் இலக்கிய வரலாறு' (13ஆம் நூ.); மு. வை. அரவிந்தன் அவர்களுடைய 'உரையாசிரியர்கள்' ஆகிய இரு நூல்களிலும் பரிமேலழகரைப் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. பரிமேலழகரின் உரைப் போக்கை மறுத்து ஆயும் வகையில் 'திருவள்ளுவரும் பரிமேலழகரும்' 'திருவள்ளுவர் திடுக்கிடுவார்' (நாமக்கல் கவிஞர்), 'திருக்குறளும் பரிமேலழகரும்' (குழந்தை) ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கன. இவை அனைத்தும் வடமொழிச் சார்பான உரையை மட்டும் மறுக்கும் தன்மையன.

இவையேயன்றித் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்கள் பலவும் பரிமேலழகரைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும், உரை இயல்பையும் சுருங்கிய அளவில் கூறுகின்றன. ஏறத்தாழ பரிமேலழகரைப் பற்றி நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் வெளிவந்துள்ளன. செந்தமிழ், தமிழ்ப்பொழில், செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி முதலான தமிழ் இதழ்களிலும், Tamil Culture, Tamilian Antiquary முதலான ஆங்கில இதழ்களிலும் அவ்வப்பொழுது பல கட்டுரைகள் பரிமேலழகரைப் பற்றி வந்துள்ளன.

உரைகாரர்களுள் அடியார்க்குநல்லார், நச்சினார்க்கினியர் ஆகிய உரைகாரர்களைப்பற்றி முழுமையான ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன[60] ஆயின் பரிமேலழகரைப் பற்றி முழுமையான ஆய்வு இதுகாறும் தோன்றவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### திருக்குறள் பரிமேலழகர் பதிப்புகள்

குறள் உரைகளுள், பரிமேலழகர் உரைக்கே மிகுதியான பதிப்புகள் தோன்றியுள்ளன. பரிமேலழகர் உரைக்குப் பல தழுவல் உரைகளும், உரைக்கு உரைவிளக்கம் தரும் வகையில் பல உரைகளும் தோன்றியுள்ளன. உரைவளங்களும், உரைக் கொத்துகளும் உரைகளை ஒப்பாய்வு செய்வதற்குத் துணை புரிகின்றன. இப்பதிப்புகளிலும் பரிமேலழகரைப் பற்றிய அரியகுறிப்புகள் உள்ளன.

பரிமேலழகர் உரைப்பதிப்புகளுள் சிலவற்றை இவ் வியலின் இறுதியில் காணலாம்.[61]

குறிப்புகள்

1. தொல்., மரபியல் 99-105.
2. தொல்., மரபியல், பேராசிரியர் உரை: 98, 101.
3. சஞ்சீவி, டாக்டர் ந., *ஆராய்ச்சிக் கட்டுரைகள்* ப. 20.
4. *நன்னூல்*, பாயிரம், 39
5. தொல்., பேரா. செய்யு. 2, உவம., 302,., தொல் இளம். எழுத்து, 159, 161
6. அரவிந்தன், மு. வை., *உரையாசிரியர்கள்*, ப. 5.
7. *இறையனார் அகப்பொருள் உரை*, பக். 9.
8. சிலம்பு, குன்றக்குரவை,
9. நன்னூல், மயிலைநாதர் உரை, நூற்பா. 21.
10. பரமசிவானந்தம், அ. மு, *தமிழ் உரைநடை*, ப. 80.
11. வரதராசன், மு., *தமிழ் இலக்கிய வரலாறு* ப. 183.
12. சஞ்சீவி, டாக்டர் ந., *ஆராய்ச்சிக்கட்டுரைகள்*. ப, 158.
13. Kamil Zvelebil, Dr., *The Smile of Murugan on Tamil Literature of South India*, P. 248
14. செல்வநாயகம், வி., *தமிழ் உரைநடை வரலாறு*, ப. 40.
15. வையாபுரிப் பிள்ளை, ச. *தமிழ்ச்சுடர் மணிகள்*, பக். 197-198.
16. Sastri, K. A. N., *Cholas*, pp. 637-689.
17. திருநாவுக்கரசு, க. த., 'திருக்குறளுக்கு உரைகள் வேண்டுமா?' AO 1 இதழ், தொ. 23, பகுதி 1, ப. 3.
18. சுப்பிரமணிய அய்யர் ஏ. வி, *தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி*, ப. 240.
19. தொல். மரபியல், 103, 104.
20. இறையனார் அகப்பொருள் உரை, ப. 14.
21. நம்பியகப்பொருள், பாயிரம்
22. யாப்பருங்கல விருத்தியுரை, பாயிரம்.
23. நன்னூல் 13.
24. யாப்பருங்கல விருத்தியுரை, பாயிரம்.
25. நாலடியார், அவையறிதல் 9.
26. திருநாவுக்கரசு, க. த., 'திருக்குறள் நூலடைவு' தமிழாய்வு, (தொகுதி 3, சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு) பகுதியினின்றும் தொகுக்கப்பெற்றது

27 சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா, வடமலை வெண்பா, சிவசிவ வெண்பா, இரங்கேச வெண்பா முதலான 21 வெண்பா நூல்களைக் குறளுக்குச் செய்யுள் வடிவில் எழுந்த உரைநூல்கள் எனலாம்.

28. தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி — திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்கு
எல்லையுரை செய்தார் இவர்

— சுப்பிரமணிய பிள்ளை, கா. சு., இலக்கிய வரலாறு இரண்டாம் பாகம், ப. 349 (மேற்கோள்)

29 அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூ., ப. 14.

30. தொண்டைமண்டல சதகம் 41.

31. இராகவையங்கார், மு., சாஸனத் தமிழ்க்கவி சரிதம், ப. 116.

32. அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூ. ப. 65.

33. பெருந்திரட்டு 1547.

34. பெருந்திரட்டு, 1548.

35. பண்டிதர் சவரிராயர் அவர்கள், 1913இல் வெளியிட்ட *Tamilian Antiquary* Vol. II-1, p.53 இதழில் இவர் வரலாறு பற்றி மேலும் சில குறிப்புகளைக் கூறியுள்ளார் :

"கன்ன பரம்பரை வரலாற்றின்படி இவர் கடையம் என்னுமிடத்தில் பிறந்து புங்கவர் நந்தத்தில் வாழ்ந்தவர். இவ்விரண்டு கிராமங்களும் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளன. வெளிகண்ட நாடார் என்னும் செல்வன் ஒருவன் இவரை ஆதரித்தான். பரிமேலழகரும் அவரை ஆதரித்தவனின் குலத்தவரே. இவர் நாடார் குழுவுக்குக் குருக்களாயுள்ள கூட்டத்தைச் சார்ந்தவர். இவர் வாழ்ந்த வீடு இன்று அக்கிராமத்தில் வடமேற்கு மூலையில் உள்ளது. பரிமேலழகருக்குக் குமாரசுவாமிக் குருக்கள் என்னும் குமாரன் ஒருவன் இருந்தார். இவர் ஆதி இராமாயணம் என்னும் நூலைப் பாடினார்"

என விரிவாகப் பல செய்திகளைக் கூறுவர்.

36. கீழசூராவில் 'பரிமேலழகர் நினைவாலயம்' எழுப்பப்பட்டுள்ளது.

37. அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு 13 ஆம் நூ. ப. 67-78.

38: சமயத்துறையில் நின்ற உமாபதி சிவாச்சாரியார் தொல்காப்பியத்தைச் சுட்டியிருக்க மாட்டார். எனவே இப்பாடல் அவர் செய்ததன்று; பிற்காலப் பாடல் எனக் கொள்ளவேண்டும் என்பாருமுளர்.

(மே. கா. நூ. ப. 90-91)

39. இராகவையங்கார், மு. **சாஸனத் தமிழ்க்கவி சரிதம்**, ப. 115.

40. இராகவையங்கார், மு., **சாஸனத் தமிழ்க்கவி சரிதம்**, ப. 118.

41. **தொல்.**, சொல். 460.

42 மாநிலங் காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால் தன்பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ
— பெரியபுராணம், திருநகரச் சிறப்பு, 36.

43, அருணாசலம், மு., **தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூ.** ப 94.

44 "ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விஜய கண்ட கோபால தேவர்க்கு யாண்டு 12வது கும்ப நாயற்று அமரபக்ஷத்து திருதியையும் புதன் கிழமையும் பெற்ற அத்தத்து நாள் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து நகரம் காஞ்சிபுரத்துத் திருவத்தியூர் நின்றருளிய அருளாளப் பெருமாளுக்குப் புவியாளப் பிறந்த ஆமூர் நீலகங்கனேன் திருமாலைப்புறமாகக் கொடுத்த திருநந்த வனமானது கீழைத்திருச்சோலையில் பெரும்புதூர் தாதர் திருநந்தவனத்துக்கு மேற்கு, தேவன் மறையோர்த்தர் திருநந்தவனத்துக்குக் கிழக்கு, திருக்கலிகன்றி தாதர் திருநந்தவனத்துக்குத் தெற்கு, ஆற்றுக்கு வடக்குப்பட்ட வண்டுவரைப் பெருமானான பரிமேலழகிய பெருமாள் தாதன் தான் திருந்ந்தவனத்தில் வடக்கடையக் குழி 500, இக்குழி ஐஞ்நூற்றுக்கும் இப்பரிமேலழகிய பெருமாள் தாதர்க்கு விலை நிச்சயித்துக் கொடுத்த பழம்புள்ளி மாடை 3), இம்மாடை முப்பதுக்கும் இந்திருநந்தவனம் குழி ஐஞ்நூறும் கொண்டு பெருமாளுக்குச் சந்திராதித்தவரை திருமாலையும் திருப்பள்ளித்தாமமும் தாள்வழி தேவையும் திருநாள் தேவையும் முட்டாமல் செல்வதாகக் குடுத்தேன் புவி ஆளப் பிறந்த ஆமூர் நீலகங்கனேன் "

45. இராகவையங்கார், மு, சாஸனத் தமிழ்க்கவி சரிதம், பக். *116-117*. கல்வெட்டாராய்ச்சி வல்லாரான திரு. கே. வி. சுப்பிரமணிய ஐயர் அவர்களும் இக்கருத்தினை ஏற்றுள்ளமை அறியத்தக்கது.
— கொங்கு மலர், தொ. 2, பக்,244-2.5.

46. அழகிய பெருமாள், அழகன் என்னும் பெயர்கள் பெரும் பாலும் வைணவப் பெயர்களுக்கே அமைந்துள்ளது இங்குக் கருதத் தக்கது

47. **பரிபாடல்**, உரைச் சிறப்புப் பாயிரம், 20—21.

48. 'பரிபாட்டினுள் மழையிருஞ்சூல் என்பதனை, முன் பின்னாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை என்றார் இவ்வுரையாசிரியர்' (47) என்று இரத்தின கவிராயர் குறிப்பிடுகின்றார். இது குறளுரையில் வருவது. இதனால் குறள் உரை செய்த பரிமேலழகரே பரிபாட லுக்கும் உரை செய்தார் என்பது புலனாகின்றது

49. காசி மடத்தார் வெளியிட்ட திருமுருகாற்றுப்படை உரைக் கொத்திலும் இது காணப்படுகின்றது.

50. அடியார்க்கு நல்லாரின் உரைத்திறன் குறித்து மு. அருணாசலம், டாக்டர் ச.வே.சுப்பிரமணியன் ஆகியோர் ஆய்வு செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

51. **1800-1900 எழுந்த உரைநூல்கள்:**

1838 — சரவணப் பெருமாளையர் (தணிகை) பதி. **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையைத் தழுவிச் செய்யப்பட்ட உரையும்.**

1840 — இராமாநுசக் கவிராயர் (மு. ரா, பதி.) குறள் அறப்பாலில் இல்லறம் 24 அதிகாரமும் அவற்றிற்குப்பரிமேலழகர் உரையும், ஊரு ஐயர் செய்த ஆங்கில மொழி பெயர்ப்பும், முதற்பதிப்பு, அமெரிக்க மிசியோன் அச்சுக்கூடம்.

1849 — வேதகிரி முதலியார் (களத்தூர்) பதி. திருக்குறள் சரவணப் பெருமாளையர் உரை, பரிமேலழகர் உரையைத் தழுவியது, இரத்தின விநாயகர் சன்ஸ்.

1850 — வேதகிரி முதலியார் (களத்தூர்)
**திருக்குறள் மூலமும் உரையும்**, சண்முக விலாச அச்சுக்கூடம்.

1856 — வேதகிரி முதலியார் (களத்தூர்)
**திருக்குறள் மூலமும் உரையும்**, 2 ஆம் பதிப்பு, கேசவ முதலியார், பிரபாகர அச்சுக் கூடம்.

1861 — கந்தசாமி பிள்ளை (பதி.)
**திருக்குறள் பரிமேலழகர் உரை**, சரவணப் பெருமாளையர் உரை விளக்கங்களுடையது, திருநெல்வேலி.

1861 — ஆறுமுக நாவலர் (பதி.)
**திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்**, வாணி நிகேதன் அச்சுக்கூடம்.

1869 — கருணானந்த சுவாமிகள் (பதி.)
**சரவணப் பெருமாளையர் உரை**, கேசவ முதலியார், பிரபாகர் அச்சுக்கூடம்.

1873 — குப்புசாமி நாயுடு, இட்டா (பதி.)
**திருக்குறள் பரிமேலழகர் உரையைக் கொண்டியற்றிய பதவுரை கருத்துரையுடன்**, கலிரஞ்சனி அச்சுக்கூடம், 1873.

1873 — குறள் மூலமும் உரையும், தரங்கம்பாடி, இ.எல்.எம். பிரஸ், 1873.

1875 — வீராசாமிப்பிள்ளை (எம்.) பதி.
**திருக்குறள் சரவணப் பெருமாளையர் உரை**, பரிமேலழகர் உரையைந் தழுவியது, சென்னை.

1884 — பொன்னுசாமி முதலியார் (பதி.)
**திருக்குறள் சரவணப் பெருமாளையர் உரை**, பரிமேலழகர் உரைத்தழுவல், சிதம்பரம்.

1885 — புஷ்பரதச் செட்டியார் (பதி.)
**திருவள்ளுவரின் குறள் பரிமேலழகருரையுடன்**, முதற்பதிப்பு, கலாரத்நாகரம், (1885).

1889 — சுகாத்தியர்
**திருவள்ளுவ நாயனார் மூலமும் உரையும்,** முதற்பதிப்பு, லாரன்ஸ் பிரஸ்

1893 — சுந்தரமுதலியார்
**திருக்குறள் மூலமும் கருத்துரையும்,** விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடம், சென்னை

1893 — இராகவலுநாயுடு (பதி.)
**திருக்குறள் சரவணப் பெருமாளையர்** உரை (பரிமேலழகர் உரையைத் தழுவியது) சென்னை.

# 2

# பரிமேலழகரின் பல்துறைப் புலமை

## பல்துறையறிவு

வாழ்வின் பல்வேறு கூறுகளையும் பெற்று விளங்கும் இலக்கியங்களுக்கு உரை எழுதப் புகுவார் பல்துறைகளிலும் புலமை பெற்றிருப்பர். 'இது இன்ன காலத்துத் தோன்றிய நூல் என்ற கால அறிவும், இக்காலத்து இச்சொல்லுக்கு இப்பொருள் என்ற சொல்லறிவும், இன்ன காலத்து இருந்த பழக்க வழக்கங்கள் இவை என்ற சமுதாய அறிவும், இத் தொடர் ஓடிக்கிடக்கும் முறை இதுவென்ற நடையறிவும் நாட்டின் வரலாற்றறிவும் இன்ன பிறவும் இருந்தால்தான், உரையெழுதும் பொழுது நினைவுக்கு வந்தால்தான் பொருளை முரணின்றிக் காண முடியும்' என்பர் ஆய்வாளர்.[1] எனவே நூலின் பொருள் விளக்கம் காண்போர்க்குப் பல்துறையறிவும் வேண்டும் என்பது தேற்றம்.

## கல்விப் புலமை

'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்னும் பெருமையினைப் பெற்றது வள்ளுவரின் திருக்குறள்.[1] எனவே இந் நூலுக்கு உரை காண்போர் பல்துறை அறிவும் உடையோராக இருந்தாலன்றி உரை நன்கு அமையாது. இத்தகைய பல்துறைப் புலமையினை உடைய உரையாசிரியர் பரிமேலழகர் ஆவார்.

அவர்தம் இருமொழிப் புலமையும், கல்வியியல், அரசியல், பொருளியல், சமய மெய்ப்பொருளியல், தருக்க இயல், மருத்துவ இயல், உளவியல், உழவியல், இசை முதலான பிற துறைகளில் பெற்றிருந்த பன்முக அறிவாற்றலும் அவருக்கு உரை எழுதுவதற்குப் பெரிதும் பயன்பட்டன என்பதை அவர்தம் குறள் உரையில் பல இடங்களிலும் காண முடிகிறது.

## இருமொழிப் புலமை

### தமிழ்ப் புலமை

பரந்துபட்ட தமிழ்ப் புலமையின் ஒளி அவர் உரையில் தொட்ட இடமெல்லாம் துலங்குகிறது. 'பல்கேள்வித் துறை போகிய தொல்லாணை நல்லாசிரியராகப் பரிமேலழகர் விளங்குவது குறளை விளக்குதற்காக அவர் எடுத்தாண்ட மேற்கோள் செய்யுள்களால் புலனாகின்றது. எடுத்தாளும் மேற்கோள் செய்யுள்கள் குறளின் கருத்தை இனிது விளக்குவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.[3]

உரையின் இடையே மேற்கோள்களை எடுத்துக்காட்டி விளக்கும் இயல்பு தொன்று தொட்டு இருந்துவரும் மரபே யாகும். மேற்கோள் காட்டுதல் உரை உறுப்புகளுள் ஒன்று எனத் தொல்காப்பியம் கூறும்.[4] இலக்கிய உரையில் இலக்கண உரையைக் காட்டிலும் எடுத்துக்காட்டுகள் குறைவாகவே காணப்பெறும்.[5] இந்நெறிக்கு விதிவிலக்காகத் திருக்குறள் பரிமேலழகர் உரையில் 230 மேற்கோள்கள் காணப்படு கின்றன. இது அவர்தம் தமிழ்ப் புலமைக்குச் சான்றாகத் திகழ்கின்றது.

பரிமேலழகருடைய உரையிலிருந்து அவர் தமக்கு முன்னும், தம்முடைய காலத்தும் இருந்த இலக்கிய இலக்கண நூல்களை முற்றக் கற்றுணர்ந்தவர் என அறிகிறோம். பொன் அணியில் மணியைப் பதித்தாற்போன்று தம்முடைய உரையின் இடையே அவ்விலக்கிய இலக்கண அருந்தொடர்களைப் பெய்து உரைக்கு அழகும் அமைப்பும் சேர்த்துள்ளார். கவிதை நடையையே உரை நடையாகத் தம் சொல்லாட்சித் திறத்தால் வடித்துக் கலைப்பண்பு பொதுள உரை உருவில் இன்றமிழ் இலக்கியமாகத் தந்துள்ளார் இத்தகைய நடையில் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், கீழ்க்கணக்கு நூல்கள், சமய நூல்கள், இலக்கண நூல்கள் ஆகியவற்றையும் பயன்படுத்திய சிறப்பை நன்கு உணர முடிகிறது

### பரிமேலழகரும் சங்க நூல்களும்

சங்க நூல்களுள் (1) புறநானூறு (2) கலித்தொகை (3) அகநானூறு (4) நற்றிணை (5) குறுந்தொகை (6) பட்டினப்பாலை (7) பரிபாடல் (8) நெடுநல்வாடை 9) பதிற்றுப்பத்து (10 பொருநராற்றுப்படை[6] முதலான நூல்களைப்

பரிமேலழகர் எடுத்தாண்டுள்ளார். அவர் இந்நூல்களைப் பயன்படுத்திய இடங்களையும் நோக்கத்தையும் பின்வரும் அடைவு நன்கு காட்டும்:

| | இலக்கியம் | எடுத்தாண்ட இடங்களின் மொத்த எண்ணிக்கை | பயன்படுத்திய நோக்கம் பொ வி. | சொ. பொ | இ. வி |
|---|---|---|---|---|---|
| 1. | புறநானூறு | 31 | 23 | 6 | 2 |
| 2. | கலித்தொகை | 16 | 6 | 3 | 7 |
| 3 | அகநானூறு | 4 | 3 | — | 1 |
| 4 | நற்றிணை | 2 | — | 2 | — |
| 5. | குறுந்தொகை | 2 | 1 | 1 | — |
| 6 | பட்டினப்பாலை | 2 | 2 | — | — |
| 7. | பரிபாடல் | 2 | — | 1 | 1 |
| 8 | நெடுநல்வாடை | 1 | 1 | — | — |
| 9. | பதிற்றுப்பத்து | 1 | 1 | — | — |
| 10 | பொருநராற்றுப்படை | 1 | 1 | — | — |

(* மேற்கோள் பாடல்களும், தொடர்களும் அவை வந்துள்ள குறள் எண்களும் தனியே தரப்பட்டுள்ளன. பொ. வி பொருள் விளக்கம்; சொ பொ.: சொற்பொருள் விளக்கம்; இ.வி. இலக்கண விளக்கம்)

### புறநானூறு

பரிமேலழகர் எடுத்தாண்ட மேற்கோள் நூல்களுள் முதன்மை இடம் பெற்றுத் திகழ்வது புறநானூறே ஆகும். குறளுரையில் 31 இடங்களில் இதன் ஆட்சியைப் பரிமேலழகரின் உரையில் காண்கிறோம்.[7] சான்றாகச் சிலவற்றைக் காண்போம் :

பரிமேலழகரின் உரைப்பாயிரம், புறநானூற்றின் ஆளுகையிலேயே தொடங்குவது குறிப்பிடத்தக்கது.

> தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்

என்று உரைப்பாயிரத்தில் கூறுவர் பரிமேலழகர் இங்கு 'ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்' என்னும் தொடர்,

'நீ மெய்கண்ட தீமை காணின் ஒப்பநாடி அத்தக ஒறுத்தி'[3] என்னும் புறப்பாடலின் இறுதித் தொடராகும். மேலும்,

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ் (64)

என்னும் குறட்பாவின் உரையில் 'சிறுகையான் அளாவலாவது இட்டுந்தொட்டும் கவ்வியும் துழந்தும் நெய்யுடையடிசில் மெய் பட விதிர்த்தல்'[9] என்று புறநானூற்றின் நன்னடையையே தம்நடையாக்கியுள்ளார் பரிமேலழகர்.

அகப்பொருள் கூறும் காமத்துப்பால் பகுதியிலும், புறப் பொருள் கூறும் புறநானூற்றுப் பகுதியை எடுத்தாண்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம். 'இன்பமான நட்பிலேயே துயரத்தை வரச் செய்ய வல்லவர், துன்பம் தரும் பகையை வெல்லும் வலிமை வேண்டும்போது என்ன ஆவாரோ ?' என்று தோழி யோடு புலந்து சொல்லியதை வள்ளுவர்,

துப்பின் எவன் ஆவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர் (1165)

எனக் கூறுவர், துப்புப் பகையுமாதலுக்கு இலக்கியச் சான்று தர விழைந்த பரிமேலழகர்,

"துப்புப் பகையுமாதல்
'துப்பெதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை அண்மையன்'
என்பதனாலும் அறிக"[10]

என்று கூறிப் புறநானூற்றுந் தொடரினை இதனோடு இயைபு படுத்தி உரைப்பர்.

இதனால் பாடல் தொடரை உரை நடைப்படுத்தியும், இலக்கியச் சான்று தந்தும், தம் உரை விளக்கத்திற்குப் பயன் படுத்தும் பரிமேலழகரின் குறள் உரைநெறி புலனாகின்றது. புறநானூற்றுத் தொடரினையும் கருத்தையும் பரிமேலழகர் குறளுரையில் பயன்படுத்தும்போது பெரும்பாலும் பொருள் விளக்கத்திற்கே முதலிடம் தந்திருக்கின்றார். பொருள் விளக்கம் செய்யும் வகையில் 23 இடங்களிலும் சொற்பொருள் விளக்கம் தரும் வகையில் 6 இடங்களிலும், இலக்கண விளக்கம் பெறும் பொருட்டு இரண்டு இடங்களிலும் புற நானூற்றைப் பயன்படுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கலித்தொகை

பரிமேலழகர் கலித்தொகையைத் தம் குறள் உரையில் 16 இடங்களில் மேற்கோளாகப் பயன்படுத்துவர்.[11]

அதிகாரத் தோற்றுவாயிலேயே அவ் அதிகாரப் பெயரினை விளக்குவதற்குக் கலித்தொகைச் சொற்றொடரைக் கையாளுவர்:

'பண்புடைமை-அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்'

என அதிகாரத் தலைப்பிற்கு விளக்கம்கூறிப் பின்னர்,

'பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்[12] என்றார் பிறரும்' என்று கலித்தொகைத் தொடரினைச் சான்று தருவர். இதனால் சுருங்கிய சொற்றொடரில் பெரு விளக்கம் தரும் நெறியை உணர முடிகிறது.

காமத்துப்பாலில், தலைவனின் நோக்கு இன்ப உணர்வையும் பிரிவு அச்சத்தையும் தருகின்றது (1152) என்பார் வள்ளுவர். பரிமேலழகர் இதனை மேலும் விளக்குவதற்காக,

"அச்சத்தினை உடைத்தாதலாவது,

'முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்
கள்ளினும் மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்
ஒள்ளிழை திருத்தும்'[13]

பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற் குறிப்புக் காட்டி அச்சஞ் செய்தலுடைமை"

என விரித்துரைப்பார். முன்பு இருந்ததை விட மிக்க அன்பு தலைவன் காட்டுவானாயின் அது பிரிவினைக் குறிக்கும் என்பதனை இவ்விலக்கியச் சான்று மேலும் விளக்குவதை உணர முடிகிறது.

'அறிவுடை யந்தணன் அவனைக் காட்டென்றானோ, என்னும் தொடரினை 167ஆம் குறட்பாவிலும், 929ஆம் குறட்பாவிலும் உருபு மயக்கத்திற்காகச் சான்று காட்டுவர்.

பரிமேலழகர் காட்டும் மேற்கோள் நூல்களுள் கலித் தொகையையே இலக்கணக் குறிப்பு விளக்கத்திற்காக அவர் மிகுதியாகப் பயன்படுத்துவது உளங்கொளத்தக்கது 16 இடங்களில் 7 இடங்களில் கலித்தொகையை இலக்கண விளக் கத்திற்காகப் பயன்படுத்துவர்.[14]

அகநானூறு

அகநானூற்றுப் பாடல்களைப் பெரும்பாலும் காமத்துப்பால் குறட்பா விளக்கங்களுக்கே பரிமேலழகர் பயன்படுத்துவர்[15]

'இரு தலைப்புள்ளின் ஓருயிரம்ம'[16] உழுவலன் புடைய எமக்கு' என அகநானூற்றுத் தொடரையே குறட்பா உரையில் (1109) உரைநடையாக்குகின்றார் பரிமேலழகர்.

அனிச்சமும், அன்னத்தூவியும் மகளிரடிக்கு நெருஞ்சிப் பழம் போல் துன்பத்தைத் தரும் என மாதரடியின் சிறப்பைப் பேசுவர் (1120) வள்ளுவர். 'இத்தன்மைத்தாய அடி 'பாத்தி யன்ன குடுமிக்கூர்ங்கற்'களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனம் கடக்கும் எனக் குறிப்பாற் பெறப்பட்டது' என்று கூறும் பரிமேலழகர் விளக்கவுரையில் அகநானூற்றுத் தொடர் உரை நடையில் பயல் பட்டிருப்பதைக் காணலாம்

இங்கு நெருஞ்சி முள்ளோடு, கூர்ங்கற்கள் பெற்று விளங்கும் வெஞ்சுரத்தின் கொடுமையையும் பரிமேலழகர் இணைத்துப் பார்ப்பதால் உடன் போக்கின் அருமையை நயமாகச் சுட்டும் விளக்கம் அவர் தம் உரை மூலம் நன்கு வெளிப்படுகின்றது.

நற்றிணை

ஈரிடங்களில் நற்றிணைப் பாடல்களைப் பரிமேலழகர் சொற்பொருள் விளக்கத்திற்காகப் பயன்படுத்தியுள்ளார்;[17]

'கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டாடும்'[18]

என்னும் பாடற்பகுதியை வட்டாடல் — உண்டையுருட்டல் என்னும் சொற்பொருள் விளக்கத்திற்காகவும்,

'முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்'[19]

என்னும் தொடரினை, 'நாகரிகம் என்பது கண்ணோட்டமாதல்' என்பதன் சொற்பொருள் விளக்கத்திற்காகவும் சான்று காட்டுவர்.

இதனால் பரிமேலழகர், சொற்பொருள் விளக்கம் தரவும் இலக்கியத்தைத் தம் உரையில் பயன்படுத்திய உரைநெறியினை அறிய முடிகிறது.

**குறுந்தொகை**

மேற்கோளாகக் கொள்ளப்பெற்ற குறுந்தொகைப் பாடற் பகுதி இரண்டனையுமே காமத்துப்பாலில் பரிமேலழகர் பொருள் விளக்கத்திற்காகவும், சொற்பொருள் விளக்கத்திற்காகவும் பயன்படுத்தியுள்ளார்.[20] சான்றாக ஒன்றினைக் காண்போம்:

'துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேம்' (1250) என்னும் குறட்பாவில் நெஞ்சு என்பது அகம் என்னும் பொருளில் வந்ததைச் சுட்டி, இதற்குச் சான்றாகக் குறுந் தொகையில் வரும் 'குன்றி — னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்'[21] என்னும் பாடற்பகுதியில் உள்ள 'நெஞ்சு' அகப் பொருட்டாய் நின்றது என இயைபு காட்டுவார்.

இதனால் இருவேறு இலக்கியங்களிலும் பயின்றுவரும் சொற்கள் ஒரு பொருள் தருவதைச் சுட்டித் தம் கருத்துக்கு மேலும் விளக்கம் காட்டும் பான்மையினை அறிய முடிகிறது.

**பட்டினப்பாலை**

பட்டினப்பாலையைப் பரிமேலழகர் ஈரிடங்களில் குறிப் பிடுகிறார்.[22]

நடுவு நிலைமை அதிகாரத்தில், வள்ளுவர் பிறர் பொருளை யும் தம் பொருளைப் போலப் பேணிச் செய்தலே சிறந்த வாணிகம் (120) என்பார். பரிமேலழகர், பிறவும் தமபோற் செய்தலாவது: 'கொள்வது மிகையும் கொடுப்பது குறையு மாகாமல் ஒப்பநாடிச் செய்தல்' என மேலும் இதற்கு விளக்கம் தருவர். பட்டினப்பாலையில் 'கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது' என்று வரும்[23] தொடரின் கருத்தினை இங்குப் பரிமேலழகர் பயன்படுத்தியுள்ளமை கருது தற்குரியது.

இதனால் பாடலின் கருத்தை விளக்கத்திற்காகப் பயன் படுத்தும் உரைப்பாங்கு தெளிவாகிறது.

**பரிபாடல்**

பரிமேலழகர் பரிபாடல் அடிகளை ஈரிடங்களில் சொற் பொருள் விளக்கத்திற்காகவும், இலக்கண விளக்கத்திற்காகவும் பயன்படுத்தியுள்ளார்[24]

'கடல் குறை படுத்த நீர் கல்குறை படவெறிந்து'[26] என்னும் பரிபாடல் வரிகளில் வரும் 'குறைபடுத்த' என்னும் தொடருக்கு 'முகத்தல்' என்பது பொருளாகும். 'குறைத்தல்' என்னும் சொற்கு 'முகத்தல்' என்னும் பொருள் கொண்டதை 'நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும்' என்னும் குறட்பாவில் விளக்கி அதற்குச் சான்றாக மேற்குறித்த பரிபாடல் பகுதியை யும் காட்டுவர் பரிமேலழகர்.

இதனால் சொற்பொருளையும் கூறி அதற்கு அரணாக இலக்கியச் சான்று காட்டும் உரைநெறி தெளிவாகிறது.

**நெடுநல்வாடை**

நெடுநல்வாடையைப் பரிமேலழகர் ஓரிடத்தில் சொற் பொருள் விளக்கத்திற்கு மட்டுமே எடுத்தாள்வர்

> கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேல்
> தவ்வென்னுந் தன்மை யிழந்து (1144)

என்னும் குறட்பாவில் 'தவ்வென்னும்' என்பது குறிப்பு மொழி என்பர் பரிமேலழகர். இங்ஙனம் 'தவ்' வென்னும் சொல் குறிப்பு மொழியாக நெடுநல்வாடையிலும் வந்துள்ளதைப் பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டுவர் இதனை, 'நூல் கால் யாத்த மாலை வெண்குடை தவ்வென்றசைஇத் தாழ்துளி மறைப்ப என்புழியும் அது'[25] என்னும் அவர்தம் உரை நன்கு காட்டும்.

இதனால் சுருங்குதலைக் காட்டும் குறிப்பு மொழியாகிய 'தவ்' என்னும் சொல் இரு இலக்கியங்களிலும் வந்துள்ளதை ஒப்புமை காட்டி உரை விளக்கும் நெறி புலப்படும்.

## பதிற்றுப்பத்து

பரிமேலழகர் பதிற்றுப்பத்தினின்றும் ஒரு தொடரைப் பொருள் விளக்கத்திற்குப் பயன்படுத்துவர்.[27]

வேண்டும் வழிப்பொருள் கொடாமை, நன்மையின் நீங்கிய மானம், அளவிறந்த உவகை ஆகியன அரசன் செய்யத்தகாத குற்றங்கள் (432) என்றார் வள்ளுவர். இங்கு அளவிறந்த உவகை என்பதற்குப் பரிமேலழகர் 'கழி கண்ணோட்டம்' எனப் பொருள் கூறி, 'சினனே காமம் கழிகண்ணோட்டம்' என்ற இவற்றை அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும் தீது[28] என்றார் பிறரும்' என வள்ளுவர் கருத்துக்குப் பதிற்றுப்பத்திலிருந்து மேலும் விளக்கம் தருவர். இங்கு ஒரு கருத்துக்கு இணையாக மற்றொரு கருத்தினைக் கூறி விளக்கும் நெறி புலப்படுகின்றது.

## பொருநராற்றுப்படை

பொருள் விளக்கத்திற்காகப் பரிமேலழகர் பொருநராற்றுப் படையினின்றும் ஒரு தொடரையே தந்து விளக்குவர்.[29]

'பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை' (811) என்னும் குறட்பாத் தொடருக்கு இணையாகப் 'பருகு வன்ன அருகா நோக்கமொடு என்றார் பிறரும்'[30] என்று பொருநராற்றுப் படையினின்றும் இணையான தொடரினை எடுத்து விளக்குவதில் ஒரு கருத்தை விளக்க மற்றொரு கருத்தைக் காணும் நெறியே பின்பற்றப்படுகிறது.

## காப்பியங்கள்

காப்பியங்களும், காப்பியக் கருத்துக்களும் பரிமேலழகரின் விளக்கத்திற்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளன. சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றின் பாடல்களையும், கருத்துக்களையும் உரையில் எடுத்தாண்டுள்ளார். இராமாயணக் கருத்தையும் உரையில் காண்கிறோம். முழுமையாகக் கிடைக்காத காப்பியங்களுள் ஒன்றான வளையாபதியினை அவர் உரையால் அறிய முடிகிறது.

காப்பியங்களைப் பரிமேலழகர் உரையில் பயன்படுத்தும் இடங்களும் நோக்கமும் வருமாறு :

| | இலக்கியம் | எடுத்தாண்ட இடங்களின் மொத்த எண்ணிக்கை | பொ.வி | சொ.பொ | இ.வி. |
|---|---|---|---|---|---|
| 1 | சீவக சிந்தாமணி | 17 | 16 | 1 | — |
| 2. | சிலப்பதிகாரம் | 8 | 8 | — | — |
| 3. | மணிமேகலை | 2 | 2 | — | — |
| 4. | இராமாயணம் | 1 | 1 | — | — |
| 5. | வளையாபதி | 2 | 2 | — | — |

***சீவக சிந்தாமணி***

காப்பியங்களுள் சிந்தாமணிப் பாடல்களே பரிமேலழகரின் குறளுரையில் பெரிதும் இடம் பெற்றுள்ளன. 17 இடங்களில் சிந்தாமணியின் தொடர்களும் கருத்துக்களும் உள்ளன[31] சான்றாகச் சிலவற்றைக் காண்போம் :

'மறனிழுக்கா மானம்' என்னும் தொடரை (384) விளக்கும் போது, 'குற்றமாய மானத்தின் நீக்குதற்கு மறனிழுக்கா மானம்' என்பதைக் குறிப்பிட்டபின் மேலும் நல்விளக்கம் பெறும் பொருட்டு,

வீறின்மையின் விலங்காம்என மதவேழமும் எறியான்
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சில்என் றெறியான்
மாறன்மையின் மறம்வாடும்என் றிளையாரையும் எறியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயில்உழவன்.[32]

என்னும் சீவக சிந்தாமணிப் பாடலினை முழுமையாகத் தருவது குறிப்பிடத்தக்கது.

காப்பியத்தில் வரும் கதைமாந்தர்களையும் நன்குணர்ந்து அவர்தம் இயல்பையும் உரை விளக்கத்திற்குப் பயன்படுத்தும் உரைநெறியையும் அவர்தம் உரையால் அறியலாம். கட்டியங்காரன் சிந்தாமணிக் காப்பியத்தில் வரும் அமைச்சன். தனக்கு அனைத்து நன்மைகளையும் செய்த, தன்னை நம்பிய மன்னனையே கொன்று நாடாண்டவன். இவ்வஞ்சகச் செயல் இவனுடைய கொடுமனத்தின் உண்மை வடிவை நன்குகாட்டும் என்பர் அறிஞர்,[33]

எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர் (514)

என்னும் குறட்பாவினை விளக்கும்போது பரிமேலழகர், **கட்டியங்காரன் போல** அரச இன்பத்தினை வெஃகி விகாரப்படுவதல்லது அதனைக் குற்றமென் றொழிந்து தம் இயல்பில் நிற்பார் அரியராகலின், 'வேறாகு மாந்தர் பலர் என்றார்' என்று கட்டியங்காரனின் செயலால் விளக்குவது உளங்கொள்வதற்குரியது.

சிந்தாமணிப் பாடல்களை 16 இடங்களில் பரிமேலழகர் பொருள் விளக்கத்திற்காகவும், ஓர் இடத்தில் சொற்பொருள் விளக்கத்திற்காகவும் பயன்படுத்துவர்.

பல பகுதிகளைச் சீவக சிந்தாமணியிலிருந்து உரையா சிரியர் எடுத்தாண்டிருப்பினும் முத்தியிலம்பகத்திலிருந்து மிகுதி யான கருத்துக்களை எடுத்துள்ளமை குறிப்பிடத்தக்கது, தமிழ்க் காப்பியங்களிலேயே பரிமேலழகர் மேற்கோள் காட்டு வது மிகுதியாகச் சிந்தாமணியிலிருந்துதான் என்பதை எண்ணி னால் அவர்க்குள்ள பற்றையும் படிப்பாழத்தையும் உணர முடிகிறது.[34]

**சிலப்பதிகாரம்**

பரிமேலழகர் சிலப்பதிகாரத்தை 8 இடங்களில் பொருள் விளக்கத்திற்காக எடுத்தாளுவர்[35]

அன்புடைமை அதிகாரத் தோற்றுவாயில் 'வாழ்க்கைத் துணை மேல் அன்பு இல்லையாகில் இல்லறம் இனிது நடவாது' எனக் கூற விழைந்த பரிமேலழகர்,

அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை[36]

எனக் காப்பியத் தலைவி கண்ணகியின் கூற்றை எடுத்துக் காட்டி உரையை விளக்குவர்.

இல்லறத்திற்குக் கண்ணகி கூற்றைக் கூறியது போன்று அரசியலறத்திற்குச் சிலம்பிலிருந்து மனுநீதிச் சோழனையும் முட்டா முறை செய் மன்னராகக் காட்டுகிறார் (547).

நாட்டின் உறுப்பாகிய அரணின் அருமையைப் பற்றிக் கூறும்போது சிலம்பில் இளங்கோ அடிகள் கூறிய பொறி களையே தொகுத்துரைப்பர்.[37]

இதனால் காப்பிய மாந்தரின் கூற்றையும், கதை வரலாற் றுக் குறிப்பையும், அரண் முதலாயவற்றின் இலக்கணத்தையும் தம் உரை விளக்கத்திற்குப் பயன்படுத்தும் பரிமேலழகரின் உரைநெறி நன்கு புலனாகும்.

**மணிமேகலை**

சிலம்பின் தொடர்ச்சியாக விளங்கும் மணிமேகலைக் காப்பியத்தினைப் பரிமேலழகர் ஈரிடங்களில் பொருள் விளக்கத் திற்காகப் பயன்படுத்துகின்றார்.[38]

செங்கோன்மை அதிகாரத்தில் அறத்திற்கு மன்னவன் செங்கோல் காரணம் (543) என்பார் வள்ளுவர். பரிமேழகர் ஈண்டு அறத்தினை விளக்கும் போது, 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவலன்றித் தங்காவலான்[39] ஆகலின் ஈண்டு அறம் என்றது அவையொழிந்தவற்றை' என்று எழுதுவர். மணிமேகலையின் கருத்துக்கள் இங்கு உரை விளக் கத்திற்கு உதவிய பான்மையினை உணரமுடிகிறது.

நல்குரவின் கொடுமையினை மணிமேகலை வழிநின்று, 'குடிப்பிறப்பழிக்கும் விழுப்பங் கொல்லும்' என விளக்கும் நிலையும் எண்ணுதற்குரியது[40]

**இராமாயணம்**

பரிமேலழகர் உரையில் இராமாயணம் பற்றிய குறிப்பு ஓரிடத்தில் மட்டுமே பொருள் விளக்கம் காரணமாக இடம் பெறுகிறது.[41]

> ஊராண்மைக்கு விளக்கம் வரைந்த (773) பரிமேலழகர், 'ஊராண்மை - உபகாரியாம்தன்மை, அஃதாவது இலங் கையர் வேந்தன் போரிடைத் தானை முழுதும்படத் தமிய னாயகப் பட்டானது நிலைமை நோக்கி அயோத்தி யரிறை மேற்செல்லாது, இன்று போய் நாளை நின்தானை யோடு வா'[42] என விட்டாற் போல்வது.

என்று இராமாயணக் கதைக் குறிப்பைப் பயன்படுத்துவர்.

இதனால் காப்பியத் தலைவன் இராமனின் இயல்பும், அவனுடைய கூற்றைக் கொண்டு ஊராண்மைத் தன்மையை விளக்கும் பரிமேலழகரின் உரை நெறியும் நன்கு வெளிப்படும்.

### வளையாபதி

மறைந்து போன நூலான வளையாபதியின் பெயரைச் சுட்டி, 'எழுமை யென்றது வினைப்பயன் தொடரும் பிறப்பினை அது வளையாபதியுள் கண்டது' (107) என்பர். மிக அருகிய நிலையிலேயே பரிமேலழகர் தம் உரையில் நூலின் பெயரைச் சுட்டுவார். அத்தகைய இடங்களில் இது ஒன்று என்பது நினைத்தற்குரியது.

பெயரைச் சுட்டியதேயன்றி வளையாபதிச் செய்யுளையும் ஓரிடத்தில் மேற்கோளாகக் காட்டுவார். இனமல்லார் நட்பு மகளிர் மனம் போல வேறுபடும்' (822) என்னும் உவமையை விளக்க, 'பெண்மனம் பேதின்றொருப் படுப்பேன் என்னும் எண்ணில் ஒருவன்' [43] என்னும் வளையாபதித் தொடரைப் பயன்படுத்துவர்.

வளையாபதியில் வரும் குறிப்பையும் தொடரையும் பொருள் விளக்கத்திற்காகவே பரிமேலழகர் பயன்படுத்தியிருப்பது கருதத்தக்கது

### கீழ்க்கணக்கு நூல்கள்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடியார் நான்மணிக்கடிகை. பழமொழி நானூறு, திரிகடுகம் ஆகியவற்றைப் பரிமேலழகர் குறளுரையில் பயன்படுத்துகிறார்.

அவர் இந்நூல்களைப் பயன்படுத்திய இடங்களையும் நோக்கத்தையும் பின்வரும் அடைவு காட்டும்:

| | இலக்கியம் | பயன்படுத்திய இடங்களின் மொத்த எண்ணிக்கை | பயன்படுத்திய நோக்கம் பொ.வி. | சொ.பொ. | இ.வி. |
|---|---|---|---|---|---|
| 1. | நாலடியார் | 22 | 13 | 5 | 4 |
| 2. | நான்மணிக்கடிகை | 4 | 3 | 1 | — |
| 3. | பழமொழி நானூறு | 2 | 2 | — | — |
| 4. | திரிகடுகம் | 1 | — | 1 | — |

**நாலடியார்**

பரிமேலழகர் உரையில் சங்க நூல்களுள் புறநானூறு முதலிடம் பெற்று விளங்குவது போலவே கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடியார் முதன்மை பெற்று விளங்குகிறது. 22 இடங்களில் நாலடியின் ஆட்சி புலப்படுகிறது.[44]

'தன் இன்பத்தை விரும்பாது தான் மேற்கொண்ட செயலை முடிக்கின்றவன் தன் சுற்றத்தாரின் துன்பத்தைப் போக்கித் தாங்குகின்ற தூண்' (615) என்பார் வள்ளுவர். பரிமேலழகரும், 'மதலையாய் மற்றதன் வீழூன்றியாங்கு'[45] என்னும் நாலடித் தொடரையே இக்கருத்திற்கு அரணாகக் காட்டுகிறார்.

உரையில் தாம் கூறும் இலக்கணப் பொருளுக்குப் பிறிதொரு இலக்கிய மேற்கோளை எடுத்துக்காட்டுதல் இவருடைய இயல்பாகும்.

> சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
> சொல்லிற் பயனிலாச் சொல் (200)

என்னும் குறளில் சொற்பொருட் பின்வருநிலையணி அமைந்தமையை விளக்க, "சொல்லின் என்பது இருவழியும் மிகையாயினும் சொற்பொருட் பின்வரு நிலையென்னும் அணி நோக்கி வந்தது" என்று கூறி அதற்குச் சான்றாக 'வைகலும் வைகல் வரக் கண்டும் என்பது போல'[46] என்னும் நாலடித் தொடரையே அணிவகை விளக்கத்திற்குப் பயன்படுத்துவர்.

நாலடியில் மேற்கோள் செய்யுள்களைப் பரிமேலழகர் 13 இடங்களில் பொருள் விளக்கத்திற்காகவும், 5 இடங்களைச் சொற்பொருள் விளக்கத்திற்காகவும் 4 இடங்களை இலக்கண விளக்கத்திற்காகவும் பயன்படுத்துவது குறிப்பிடத்தக்கது.

**நான்மணிக்கடிகை**

நான்மணிக்கடிகையைத் தம் உரையில் நான்கு இடங்களில் பரிமேலழகர் எடுத்துக்காட்டி விளக்கம் தருவர்.[47] மூன்றிடங்களில் பொருள் விளக்கம் தரும்பொருட்டும் ஓரிடத்தில் சொற்பொருள் விளக்கம் தரும்பொருட்டும் பயன்படுத்துகிறார்.

'மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை' (556) என்னும் குறட்பாவின் விளக்கவுரையில் மன்னுதற்கு ஏதுபுகழ்என்பதைக் காட்டி அக்கருத்துக்கு அரண் செய்யும் வகையில், 'இந்நிலத்து மன்னுதல் வேண்டின் இசைநடுக' என்ற நான்மணிக்கடிகைத் தொடரை [48] மேற்கோளாகக் காட்டுவர்

'அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்' [49] என்னும் நான்மணிக்கடிகைத் தொடரையே ஈரிடங்களில் (77,548) பொருள் விளக்கத்திற்காகப் பரிமேலழகர் எடுத்தாளுவது உளங்கொளத் தக்கது.

### பழமொழி

பழமொழிப் பாடல்களை ஈரிடங்களில் பொருள் விளக்கத்திற்காகப் பரிமேலழகர் தம் உரையில் பயன்படுத்தியுள்ளார்.[50]

> பொழுது கண்டிரங்கல் அதிகாரத்தோற்றுவாய் விளக்கத்தில், '' 'கனா முந்துறாத வினையில்லை'[51] என்பது பற்றிப்பகற் பொழுது ஆற்றியிருந்தாட்கு உரியதாகலின் இது கனவு நிலையுரைத்தலின் பின் வைக்கப்பட்டது''

எனப் பழமொழி நானூற்றுத் தொடரைப் பயன்படுத்துவர் பரிமேலழகர்.

இதனால் அதிகார வைப்பு முறைக் காரணம் பற்றிக் கூறுதற்கும், பழமொழிச் செய்யுளை எடுத்தாண்ட உரைநெறி வெளிப்படுகின்றது

'தன் கை குறைத்தான்'[52] என்னும் பழமொழித் தொடரால் செங்கோல் புரிந்த பொற்கைப் பாண்டியனைக் குறிப்பால் சுட்டி, முறை செய்த மன்னர்க்கு விளக்கம் தரும் (547) பான்மையும் இவண் கருதத்தக்கது.

### திரிகடுகம்

குறளுரையில் பரிமேலழகர் திரிகடுகத்தை ஓரிடத்தில் மட்டுமே[53] மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

> பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாம்
> கண்ணோட்ட மில்லாத கண். (573)

என்னும் குறட்பாவில் இறுதிக்கண் வரும் 'கண்' என்பதனைத் திரிகடுகத்தில் வரும் 'கண்ணகன் ஞாலம்'[51] என்புழிப்போலக் கொள்க என்பார் பரிமேலழகர்.

'கண்ணகன் ஞாலம்' என்னும் தொடரில் உள்ள கண் என்னும் சொல்லுக்கு இடம் என்பது பொருள். எனவே குறளில் வரும் 'கண்ணோட்டமில்லாத கண்' என்னும் தொடருக்கு 'கண்ணோட்டமில்லாத இடத்து' என்பது பொருளாகின்றது.

இதனால் ஒவ்வொரு சொல்லையும் கூர்ந்து நோக்கி அச்சொல் வேறு இலக்கியத்தில் எப்பொருளில் ஆளப்பட்டுள்ளது என்பதையும் ஆய்ந்து குறளில் சொற்பொருள் விளக்கத்திற்குப் பயன்படும் பரிமேலழகரின் உரைநெறி இவண் நன்கு புலனாகின்றது.

சமய நூல்கள்

சமய நூல்களுள் திருவாய்மொழியையும் திருக்கோவையாரையும் எடுத்துக் காட்டுவர் பரிமேலழகர். அவற்றைப் பயன்படுத்திய பாடல்களின் மொத்த எண்ணிக்கையும், நோக்கமும் பின்வரும் அடைவால் விளங்கும்:

| இலக்கியம் | பயன்படுத்தும் இடங்களின் மொத்த எண்ணிக்கை | பயன்படுத்திய நோக்கம் பொ.வி. | சொ.பொ | இ.வி |
|---|---|---|---|---|
| 1. திருவாய்மொழி | 3 | 3 | — | — |
| 2. திருக்கோவை | 1 | – | 1 | — |

திருவாய்மொழி

பரிமேலழகர் திருவாய்மொழியை மூன்றிடங்களில் பொருள் விளக்கத்திற்காகப் பயன்படுத்துகிறார்.[5]

அவாவை நீக்கினால் பேரா இயற்கை கிட்டும் என்பார் வள்ளுவர் (370). இதனைப் பரிமேலழகர் மேலும் விளக்குந்தற் பொருட்டு,

நன்றாய் ஞானங் கடந்து போய் நல்லிந் திரிய
மெல்லா மீர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பி லதனை
யுணர்ந்து ணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு அதுவே வீடு வீடாமே[56]

என்னும் திருவாய்மொழிப் பாடலை முழுமையாகக் காட்டி ஐம்புலன்களையும், அதற்குக் காரணமான ஐம்பொறிகளையும் அடக்கி, இன்ப துன்பங்களைக் களைந்தால் அதுவே வீடு பேறாம் என விளக்கம் தருவர்.

இறைமாட்சியின் மாட்சியை விளக்குதற்காக அவ் அதிகாரத் தோற்றுவாயிலேயே 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்'[57] என்ற திருவாய்மொழிப் பாடலின் தொடரை எடுத்துக் காட்டுவதால் சமயத்தையும் அரசியலையும் இணைக்கும் பரிமேலழகரின் கருத்து விளக்கம் புலனாகிறது

**திருக்கோவையார்**

திருக்கோவையாரினைப் பரிமேலழகர் ஓரிடத்திலேயே சுட்டுகிறார்.[58]

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து (277)

என்னும் குறட்பாவின் விளக்கவுரையில், 'செம்மை, கருமை என்பன - பொருளின்கண் நிறத்தை விட்டுச் செப்பத்தினும் அறியாமையினும் சென்றனவாயினும் பண்பாதல் ஒத்தலின் - இவை பண்புவமை' என்று எழுதுவர்.

இவ்விலக்கண நுட்பத்தை விளக்குதற்குத் திருக்கோவையாரினுள்ள 'கூழின் மலிமனம் போன்றிருளா நின்ற கோகிலமே'[59] என்னும் தொடரையே எடுத்துக்காட்டி இதுவும் பண்புவமையாக வந்தது என அரண் செய்வர்

இதனால் பரிமேலழகர் சமய நூல்களை மெய்ப்பொருள் விளக்கத்திற்கு மட்டுமேயன்றி அரசியல் விளக்கத்திற்கும் இலக்கண விளக்கத்திற்கும் பயன்படுத்தினார் என்பது மேற்கண்ட மேற்கோள்களால் தெளிவு பெறுகின்றது.

**பிற நூல்கள்**

முத்தொள்ளாயிரப் பாடலைப் பொருள் விளக்கத்திற்காகப் பரிமேலழகர் ஓரிடத்தில் எடுத்தாளுவர்.[60]

கண்ணோடிருந்தும் கண்ணோட்டமில்லாதவர், கண்ணோடு (கணுவோடு) பொருந்தியிருந்தும் கண்ணோடாதிருக்கும் மரம் போல்வர் என்பார் வள்ளுவர் (576). இங்குப் பரிமேலழகர் 'மரம் போல்வர்' என்று பொருள் கொண்டு, மேலும் உரையில், 'மரப்பாவை' என்று பிறர் பொருள் கொள்வதை மறுத்து, முத்தொள்ளாயிரப் பாடலைச் சான்றாகக் காட்டி விரித்துரைப்பர்.

வெறும் சுதை மண்ணோடு கூடிய மரப்பாவை என்றால் புறத்திற்குத் தோன்றும் கண் என்ற உறுப்பிற்கு மட்டும் உவமைப் பொருத்தம் ஏற்படுமே ஒழிய, உள்ளீடாகிய கண்ணோட்டத்தைச் சுட்டாது எனக்கூறி, 'மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்றிரக் கண்டாய்'[61] என முத்தொள்ளாயிரத்திலும் 'கண்ணோட்டமில்லாத கண் மரக் கண்' என்று வருவதை எடுத்துக் காட்டித் தாம் உரை விளக்கம் கண்ட பொருளை நிறுவுவர்.

இதனால் உரை விளக்கம் கண்ட தம் பொருளுக்குப் பிற இலக்கியத்தினின்றும் மேற்கோள் சான்று கூறி நிறுவும் உரை நெறி வெளிப்படுகின்றது

**ஏரம்பம்**

பரிமேலழகர் பிற நூலினின்றும் செய்யுள்களையும், தொடர்களையும் மட்டும் எடுத்தாள்வதின்றிப் பொருள் விளக்கத்தைப் பிற நூலிலும் காண்க என நூலின் பெயரையும் சுட்டுவர். அந்நெறியில் கல்வி அதிகாரத்தில்,

> 'எண் என்பது கணிதம். அது கருவியும் செய்கையும் என இருவகைப்படும். அவை **ஏரம்பம்** முதலிய நூல்களுள் காண்க'[62]

என உரை எழுதுவர்.

நூலின் பெயரைச் சுட்டும் இந்நெறி மிக அருகிய நிலையிலேயே பரிமேலழகர் உரையில் காணப்படுகின்றது.

## இலக்கண நூல்கள்

இலக்கண நூல்களுள் பரிமேலழகர், புறப்பொருள் வெண்பாமாலை, தொல்காப்பியம், இறையனார் அகப் பொருள் ஆகிய மூன்றையும் எடுத்தாளுவர்.

| | இலக்கணம் | பயன்படுத்தும் இடங்களின் மொத்த எண்ணிக்கை | பயன்படுத்திய நோக்கம் பொ.வி. | சொ.பொ. | இ வி. |
|---|---|---|---|---|---|
| 1 | புறப்பொருள் வெண்பாமாலை | 12 | 8 | — | 4 |
| 2 | தொல்காப்பியம் | 7 | 2 | — | 5 |
| 3 | இறையனாரகப் பொருள் | 1 | 1 | — | — |

## புறப்பொருள் வெண்பாமாலை

இலக்கண மேற்கோள்களுள் புறப்பொருள் வெண்பா மாலையை 12 இடங்களில் பரிமேலழகர் தம் உரையில் பயன் படுத்தியுள்ளார்.[63] 8 இடங்களில் பொருள் விளக்கத்திற்காக வும் 4 இடங்களில் இலக்கண விளக்கத்திற்காகவும் பரிமேலழகர் இவற்றை எடுத்தாள்வார்.

சான்றுக்குச் சிலவற்றைக் காண்போம்.

போரில் அழிவின்மை, பகைவரால் அறைபோகாமை, வழிவந்த வன்கண்மை ஆகிய மூன்றும் படையின் இலக்கணம் என்பார் வள்ளுவர் (734). இவற்றுள் வழிவந்த வன்கண் மைக்கு,

> கல்நின்றான் எந்தை கணவன் களப்பட்டான்
> முன்நின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று
> கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி
> எய்போற் கிடந்தா னென்னேறு[64]

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடலைப் பரிமேலழகர் பொருள் விளக்கத்திற்காகப் பயன்படுத்துவர்.

'கணவன், உடன் பிறந்தார், மகன்' ஆகிய மூவரும் போர்க்களத்தில் தறுகண்மையோடு விளங்கிய செய்தியை இப்பாடல் வழிக்கூறி 'வழிவந்த வன்கண்மைக்கு'ப் பொருள் விளக்கம் செய்யும் பரிமேலழகரின் உரைப்பாங்கு உளங் கொளற்குரியது.

'என்னை முன் நில்லன்மின்' (771) என்னும் குறட்பாவிற்கு 'நெடுமொழி வஞ்சி'[65] எனவும் 'கான முயலெய்த அம்பினில்' (772), 'பேராண்மை என்பதறுகண்' (773) ஆகிய இரண்டு குறட்பாக்களையும் 'தழிஞ்சி'[66] எனவும், 'கைவேல் களிற் றொடு, (774) என்னும் குறளை 'நூழிலாட்டு'[67] எனவும் அவர் புறப்பொருள் இலக்கணக் குறிப்பு எழுதி விளக்குவது குறிப் பிடத்தக்கது.

## தொல்காப்பியம்

வள்ளுவரின் சொல்லாட்சித் திறத்தினை ஆய்வு செய்யும் போதும், சொற்களுக்கு நயமும் பொருள் விளக்கமும் கூறும் போதும் தொல்காப்பிய மேற்கோள்களைக் காட்டி விளக்குதல் பரிமேலழகருடைய இயல்பாகும். 7 இடங்களில் தொல்காப்பிய நூற்பாக்களைப் பரிமேலழகர் எடுத்தாளுவர்[68]

'மலர்மிசை ஏகினான்' (3) என்னும் குறட்பாவில் வள்ளுவர் 'ஏகினான்'என இறந்த காலத்தால் கூறினார். இக்குறட்பாவின் விளக்கவுரையில் பரிமேலழகர்,

> 'அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின் ஏகினான் என இறந்த காலத்தால் கூறினார். என்னை?
>
> வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
> ஓராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி
> இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
> விரைந்த பொருள என்மனார் புலவர்[69]
>
> என்பது ஓத்தாகலின்'

எனத் தொல்காப்பிய நூற்பாவினை முழுமையாகக் காட்டி விரித்துரைப்பர்.

இதனால் காலம் பற்றிய கருத்து விளக்கத்திற்குத் தொல்காப்பிய நூற்பாவைப் பயன்படுத்தும் உரைநெறி வெளிப்படுகின்றது.

> இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
> வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.[70]

என்னும் சொல்லதிகார நூற்பாவை ஈரிடங்களில் பயன்படுத்தி விளக்குவர்.[71] 'இனைத்தென அறிந்த சினை' என்னும் தொடரினை 402 ஆம் குறளிலும், 'வினைப்படு தொகுதியினும்மை வேண்டும்' என்பதனை 9:0 ஆம் குறளிலும் எடுத்தாளுவர்

இதனால் பரிமேலழகர், பொருள் விளக்கத்திற்காகத் தொல்காப்பிய நூற்பாக்களை முழுமையாகப் பயன்படுத்துவது மட்டுமன்றி, இன்றியமையாத தொடரினையும் எடுத்தாளும் உரைநெறி புலப்படுகின்றது.

## இறையனாரகப் பொருள் மேற்கோள்

இறையனாரகப் பொருள் உரையினின்றும் மேற்கோள் பாடலொன்றினையும் பரிமேலழகர் தம் உரையில் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.[72]

ஏதிலார் முன்னே காதலர் முன்னறியாதார் போல பொது நோக்குடையராயிருப்பர் என்பார் வள்ளுவர் 1 99).'காதலார்', 'ஏதிலார்' என்னும் இந் சொற்களையும் விளக்கும்போது பரிமேலழகர் இறையனார் அகப்பொருள் உரை மேற்கோளை எடுத்துக் காட்டி,

> 'மது மறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே
> மகிழ்தலின்'' [73] அது பற்றிக் 'காதலார்' என்றும்.
> அது புறந்து வெளிப்படாமையின் 'ஏதிலார்'
> என்றுங் கூறினான் ''

என்று விளக்குவர்.

இதனால் பிற உரையகத்துக் காணும் மேற்கோள் செய்யுளினையும் தம் உரை விளக்கத்திற்குப் பயன்படுத்திக் கொண்டமை தெளிவாகும்.

## மேற்கோள் விளங்காப் பாடல்கள்

பரிமேலழகரின் மேற்கோள் பாடல்களுள் சில இந்நூலைச் சார்ந்தவை என அறியவியலா நிலையிலும் உள்ளன.[74] இவை அக்கால வழக்கிலிருந்து, பின் மறைந்த நூல்களாக இருக்கக் கூடும். இம்மேற்கோள் செய்யுள்கள் அவர்தம் பரந்துபட்ட தமிழ்ப் புலமையினையும், அவை அவர்தம் உரை விளக்கத் திற்குத் துணை புரிந்து நின்ற பான்மையினையும் அறிய உதவு கின்றன.

சான்றாகக் கல்வி அதிகாரத்தில் அவர் மேற்கோளாகத் தந்துள்ள ஒரு பாடலைக் காண்போம்:

எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும் - மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூல் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

என்னும் பாடலால் கல்விச் சிறப்பைக் கூறுவர். இதனால் எண்ணும் எழுத்தும் உயிர்க்குக் கண் (392) என்ற வள்ளுவரின் குறட்பாவினை மேலும் விளக்கி எழுத்தறிவு மொழித்திறத்தை உண்டாக்கி முதற்நூற்பொருளை உணரச்செய்து வீடு பேற்றிற்கு வழிகோலுகிறது என்பர் பரிமேலழகர் குறட்பாவின் கருத்து உரையாசிரியர் பரிமேலழகரின் மேற்கோள் செய் யுளால் மேலும் பொருள் விளக்கம் பெறுவது எண்ணுதற் குரியது.

## வடமொழிப் புலமை

பரிமேலழகர் வாழ்ந்த காலம் வடமொழித் தாக்குறவு மிகுந்த காலம். அக்காலத்தில் வாழ்ந்த இவரும் அச்சூழ லோடு ஒன்றியிருத்தல் இயல்பே ஆயினும் அவருடைய உரை நடை இதற்கு விதிவிலக்காக அமைந்து, வடமொழி கலந்த நடையைக் கொள்ளாது, வடமொழிப் புலமையினைச் சுட்டிக் காட்டும் இனிய தமிழ் நடையுடன் அமைந்து விளங்குவது எண்ணுதற்குரியது.

வடநூல் துறையும் தென்திசைத் தமிழும்
விதிமுறை பயின்ற நெறியறி புலவன்[75]

என்று அவரைப் பாராட்டுவதும் உளங்கொளத் தக்கது.

பரிமேலழகர் வடமொழியில் உள்ள பலதுறை நூல்களை நன்கு கற்றுத் தம் உரையில் ஆங்காங்கே பயன்படுத்திச் செல்கின்றார் என்பது அவர்தம் உரையால் நன்கு புலனாகிறது.[76]

### மூவகை நிலை

சொல் நிலை, பொருள் நிலை, மரபு நிலை என்னும் மூவகை நிலைகளில் வடநூலறிவைத் தம் உரையில் பயன்படுத்துவர் பரிமேலழகர்.

### சொல் நிலை

பெயர்ச் சொல்லும் திரிசொல்லும் அமையும் பாங்கைச் சுட்டிச் சொற்கள் தொடரில் இயையுமாறு காட்டிச் செல்வதைப் பரிமேலழகர் உரையுள் காணலாம். சான்றாக,

> 'அமாத்யர் என்னும் வடமொழிப் பெயர்' (638); 'அதியென்பது வடசொல்லுள் மிகுதிப் பொருளதோரிடைச் சொல்; அது திரிந்து நுட்பம் என்பதனோடு தொக்கது' (636); 'ஆயம் - வடமொழித் திரிசொல்' (933); 'குடங்கமென்னும் வடசொல் திரிந்து நின்றது' (890); 'ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன் முடிபு' (1)

என்னும் தொடர்களைக் கொள்ளலாம்.

இவற்றுள் திரிசொல் பற்றிய குறிப்பே மிகுதியாக உள்ளது எண்ணத்தக்கது.

### பொருள் நிலை

வடநூற் பொருளைக் குறளோடு இயைபுபடுத்தி உரைப்பதும் பரிமேலழகர் உரையில் காணப்படும் நெறியாகும். இதனை அறம், பொருள், இன்பம் ஆகிய பொருள் வகையில் பிரித்து உணரலாம்.

### அறம்

வடமொழிப் பொருள் அறிவைக் கொண்டு அறத்தின் இலக்கணத்தை பரிமேலழகர் சுட்டும் போது,

> 'அறமாவது — மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்'

என்று வடநூற் கருத்தைத் தழுவிக் குறளுக்கு உரைப்பாயிரம் வகுப்பர்.

அறத்திற்கு மாறான ஒழுக்கம் எது என்று சுட்டி அதற்குரிய வடமொழி வழக்கையும் காட்டுவார். சான்றாகப் பிறன் மனைவியை விரும்பியொழுகும் தீய ஒழுக்கத்தை வடநூலார் **பரகீயம்** என்று சொல்வார் எனல் [77]

**தத்துவ ஞானம்**

அறநெறி நின்று மெய்ப்பொருளைக் காணும் பெரு நெறியைப் பரிமேலழகர் வடமொழிச் சார்புபற்றி,

> ' மெய்யுணர்தல் - அஃதாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் தத்துவ ஞானம் ' என்ப' [78]

என்று வடநூலாரின் தத்துவ ஞானத்தோடு இணைத்துப் பொருள் காண்பர்.

இங்ஙனம் பரிமேலழகர் தம் வடமொழிப் புலமையால் அற இலக்கணம், அறம் ஆகாநிலை, மெய்ப்பொருள் முதலான வடமொழிப் பொருள்களைக் குறளின் கருத்தோடு தம் உரையால் இணைப்பார்.

**பொருள்**

அரசன், அமைச்சன், படை, நாடு பற்றிக் கூறும்போது வடநூற் கருத்துக்களைக் குறளின் கருத்துகட்கு விளக்கம் பெறும் பொருட்டுக் கூறுவது அவர்தம் வடமொழிப்புலமையைப் பெரிதும் வெளிப்படுத்தும்,

அரசனைப் பற்றிக் கூறும்போது, நீதி, அரசு கடிதற்குரிய குற்றங்கள், அரசு ஒறுத்தற்குரியோர், கொலையிற் கொடியார், அரசன் தனக்குரியோரைத் தேர்ந்தெடுக்கும் முறை முதலானவற்றை வடமொழியில் காணும் பொருட்புலமை கொண்டு உரை விளக்கம் தருவர்.

**அங்கம்**

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறும் உடையான் அரசன் என்பார் (381) வள்ளுவர். பரிமேலழகர் இதன் விளக்கவுரையில்,

"'ஆறுமுடையான்' என்றதனால், அவற்றுள் ஒன்று இல் வழியும் அரசனீதி செல்லாதென்பது பெற்றாம்; வட நூலார் இவற்றிற்கு **அங்கம்** எனப் பெயர் கொடுத்ததூஉம் அது நோக்கி"

என்று வடநூலாரின் கருத்தை இணைத்துக் கூறுவர்.

**பகை வர்க்கம்**

குற்றங்கடிதல் அதிகாரத் தோற்றுவாயில் பரிமேலழகர் அரசன் கடிந்தொதுக்க வேண்டிய குற்றங்களாகக் காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம் உவகை, மதம் ஆகிய ஆறனையும் குறித்து இவற்றை வடநூலார் **பகைவர்க்கம்** என்ப என எழுதுவர்.

**ஆததாயிகள்**

வள்ளுவர் கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் வேண்டும் என்பார் (550). இங்குக் கொடியார் என்பதற்குப் பரிமேலழகர், "தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள்வார், பிறனில் விழைவார் என்ற இவர் முதலாயினாரை" என விளக்கம் தந்து 'இவரை வடநூலார் **ஆததாயிக**ளென்ப' என்று வடநூற் கருத்தையும் சுட்டுவர். [18] அ

**நால்வகை உபதை**

தெரிந்து தெளிதல் அதிகாரத்தில் அமைச்சர் முதலாயினாரைத் தேர்ந்தெடுக்கப்படும் முறையை வடநூற் பொருண்மை பொதுள [79] அற உபதை, பொருளுபதை, இன்ப உபதை, அச்ச உபதை என நான்கு வகைச் சோதனைகளாக விரித்துரைப்பது இவர்தம் வடமொழியறிவைச் சுட்டும்.

**அமைச்சு**

அமைச்சனது இயல்பினைக் கூறும்போது வள்ளுவர் தானை, பொருள், காலம், செய்யுமாறு, வினை என்னும் ஐந்தும் முற்றுப் பெறும்படி எண்ண வல்லவனே அமைச்சன் என்பார் (631). பரிமேலழகர் இவை ஐந்தினையும் '**வடநூலார் மந்திரத்திற்கு அங்கம் என்ப**' என்று விளக்க உரையில் சுட்டுவார்.

இனி அங்கங்களால் விளங்கும் படையையும் நாட்டையும் வடமொழிப் புலமை கொண்டு விளக்குவதைக் காண்போம்.

### மௌலம்

படைமாட்சி அதிகாரத்தில் மூலப்படை, கூலிப்படை, நாட்டுப் படை, காட்டுப் படை, துணைப்படை என்னும் அறு வகைப் படையுள்ளும் சிறப்புடையது மூலப்படை என்று கூறி (762) 'வடநூலார் இதனை மௌலம் என்ப'[80] என்று கூறுவதால் பரிமேலழகரின் படையியல் பற்றிய வடநூற் புலமை யும் உரை விளக்கத்தால் அறிய இயலும்.

### ஈதிவாதைகள்

நாட்டிற்குக் கேடு மிகுந்த மழையின்மையாலும் எலி, விட்டில், கிளி, அரசு, அண்மை முதலியவற்றாலும் நேரிடு வதைப் பரிமேலழகர் உரை விளக்கத்தில் கூறி வடநூலார் இதனை ஈதிவாதைகள் என்று குறிப்பிடுவதாகக் கூறுவர்.[81]

இதனால் பரிமேலழகர் பொருட்பாலின் பொருள் விளக்கம் பெற வடமொழியில் காணும் பொருளுடைத் தொடர்களைக் கூறுவதுடன் அவற்றிற்கு அங்குக் காணும் சான்று விளக்கங் களையும் எடுத்துரைக்கும்போது அவர்தம் வடமொழிப் புலமை தெளிவாக விளங்குகிறது.

### மரபு நிலை

காமத்துப்பாலில் வடமொழி மரபுகளைத் தமிழ் மொழி மரபோடு இணைத்துக் காட்டுவதால் இவர்தம் வடமொழிப் புலமையில் காணும் மரபு அறிவை உணர்கிறோம்.

காமத்துப்பாலின் தோற்றுவாயில் வடநூலுட் போசராசன் கூறும் இன்பச் சுவையைச் சுட்டுவார். வள்ளுவர் வடநூல் வழக்குப் பற்றிப் பொருட் பாகுபாட்டினை அறம், பொருள், இன்பம் என ஓதுவர் என்று கூறிக் காமத்துப்பாலின் முடிவுரை யிலும் அவ்வாறே விளக்கம் தருவர்.

வள்ளுவர் வடமொழி நெறியில் நின்று பிரிவைச் செலவு, ஆற்றாமை, விதுப்பு, புலவி என்பனவற்றால் நான்கு வகை யாக்கிக் கூறினார் என்பது பரிமேலழகர் கொள்கையாகும். அந்நால்வகையினுள் கற்பியலில் கூறப்படும் பதினெட்டு அதிகாரங்களையும் பின்வருமாறு வகுத்துக் காட்டுவர்;

| | | |
|---|---|---|
| பிரிவாற்றாமை | — | செலவு |
| படர் மெலிந்திரங்கல் முதல் நிறையழிதல் வரை | } | ஆற்றாமை |
| அவர்வயின் விதும்பல் முதல் புணர்ச்சி விதும்பல் முடிய | } | விதுப்பு |
| நெஞ்சொடு புலத்தல் முதல் ஊடலுவகை முடிய | } | புலவி |

அங்ஙனமாயின் வடநூலார் இந்நான்குடனே சாபத்தினாலாகிய பிரிவினையும் கூட்டிப் பிரிவினை ஐவகைத்து என்று கூறினார் என்றால், அப்பிரிவு அறம் பொருளின்பம் என்னும் பயன்களுள் ஒன்று பற்றிய பிரிவல்லாமையாலும் முனிவரது கட்டளையால் ஒரு காலத்தில் ஒரு குற்றத்தினால் உண்டாவதல்லாமல் உலக இயற்கையாய் வாராது. எனவே இங்கு ஒழிக்கப்பட்டது என்க என்று காமத்துப் பாலின் இறுதியில் வடநூல் மரபினைப் பின் பற்றியும் மறுத்தும் முடிவுரை கூறுவர்.[82]

பரிமேலழகரின் வடமொழியறிவைத் தொகுத்துப் பார்க்கும் போது வடமொழிச் சொற்புலமையை அறத்துப்பாலிலும், பொருட்புலமையைப் பொருட்பாலிலும், மரபு பற்றிய அறிவைக் காமத்துப் பாலிலும் பெரிதும் விளங்கக் காண்கிறோம்.

**கல்வியியல்**

கல்வியைத் தலைமைப் பண்பாகவும்,[83] கீழ்க்குலத்தோருக்கு மதிப்பு அளிப்பதாகவும்[84] முன்னையோர் கருதினர். இதனை அரசியலுக்கு இன்றியமையாததாகக் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை வாயிலாக வள்ளுவர் புலப்படுத்தினர்.

வள்ளுவரது பொதுமை அறத்தின் நுண்மையை உணர்ந்த பரிமேலழகர் கல்வி அனைவருக்கும் பொது எனச் சுட்டுகின்றார். இதனை,

> *கல்வி - அஃதாவது அவ் அரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல் - அவையாவன அறநூலும், நீதிநூலும், யானை, குதிரை, தேர், படைக்கலம் என்றிவற்றினூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனாயக்கால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் நோக்கி இஃதரசியலுள் வைக்கப்பட்டதாயினும் யாவர்க்கும் உறுதி பயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்றார்.*

என்று கல்வி அதிகாரத்தின் தோற்றுவாயிலேயே வலியுறுத்துவதால் அறியலாம்.

மேலும் அவர் கூறுகின்ற பல்வேறு உரைக் குறிப்புகளால் அவர்தம் கல்விக் கொள்கையும் நன்கு புலப்படுகின்றது.

**கல்வியின் இலக்கணம்**

'அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள் உணர்த்துவனவாகவே கல்வி அமைதல் வேண்டும்' என்று (391) கல்வியின் இலக்கணத்தைச் சுட்டுவர்.

மேலும் பிற பொருள் உணர்த்துவன 'சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகா' (391) என்பர்.

**கற்கும் நெறி**

'கசடறக் கற்றல் என்பது விபரீத ஐயங்களை நீக்கி மெய்ப் பொருளை நல்லோர் பலருடனும் பயிறல்' (393) என்று கூறுவதால் கற்கும் நெறி தெளிவாகிறது.

கற்கும்போது 'பொய்யாய மானம் நோக்கி மெய்யாய கல்வி இழந்தார் பின்னொரு ஞான்றும் அறிவுடையராக மாட்டார்; என்று கூறுவதால் பிற்றை நிலை முனியாது கற்க வேண்டிய நெறியையும் வலியுறுத்துவார் (395).

**கல்வியின் பயன்**

'கல்வியென்னும் ஞானக் கண்ணால், தேயமிடையிட்ட வற்றையும், காலமிடையிட்டவற்றையும் காண முடியும்' (393) என்று கல்வியின் பயனைச் சுட்டுவர்.

**கல்வியின் சிறப்பு**

கல்வி அழிவற்றது; தாயத்தார், கள்வர், வலியர், அரசர் என்று இவராற் கொள்ளப்படாது (400) என்றும்,

'உடலோடு ஒழியும் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லும் கல்வியுயர்ச்சி சிறப்புடையது' (409) என்றும் **கல்விச் சிறப்பை** எடுத்துரைப்பார்.

இவ் உரைக் குறிப்புகளால் பரிமேலழகர் கொண்ட கல்வி இலக்கணமும், கல்வி கற்கும் நெறியும், கல்வியின் பயனும், கல்வியின் சிறப்பும் தெளிவுறுகின்றன.

**கேள்வி**

வள்ளுவர், அறிவினைக் கல்வி, கேள்வி என்னும் இரு வகையில் பெற முடியும் என்னும் கருத்தினர். இதனால் எழுத்துக் கல்வி இல்லாதோரும் நன்னூல்களில் பொருள்களைக் கேட்டறியும் வாய்ப்பினை அக்காலத்து மக்கள் பெற்றிருந்தனர் என்பது புலனாம். ஆகவே வள்ளுவர், 'கற்றிலனாயினும் கேட்க' (414) என்றார். கேள்வியினைக் கல்லாதோர் மட்டுமேயன்றிக் கற்றோரும் கேட்டு அறிவை மேன்மேலும் பெருக்கினர் என்பது பரிமேலழகர் தரும் பின்வரும் உரைக் குறிப்பால் அறிய முடியும்:

> 'அஃதாவது கேட்கப்படும் நூற்பொருளைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனினாய அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலான்'

கேள்வியறிவு { கற்றவர் - அறிவு மேலும் வளர்தல்
கல்லாதவர் - அறிவு பெறுதல் }

இக்குறிப்பால் கேள்வியறிவினைக் கற்றோர், கல்லாதோர் ஆகிய இருவகையினரும் கேட்பர் என்பதும், கற்றறிந்தார் நூற்பொருளைக் கூறுவர் என்பதும், பயன் இருவகையினர்க்கு அறிவு என்பதும் பெறப்படுகின்றன.

**கேள்வியின் இயல்பு**

இத்தகைய கேள்விச் செல்வத்தைப் பரிமேலழகர் மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கும் கருவி (418) என்பர். கேள்வி மழைத்துளி போல வந்தீண்டி எல்லா

அறிவுகளையும் உளவாக்கும் (416) என்றும் சுவை மிகுதியும், பிற்பயத்தலுமுடையது என்றும் கூறுவது உளங்கொளத் தக்கது. அச்சுவையைப் பரிமேலழகர், சொற்சுவை, பொருட் சுவை என இருவகைப்படுத்துவர். சொற்சுவை குணம், அலங் காரம் என இருவகைத்து என்றும், பொருட்சுவை காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென ஒன்பது வகைத்து (420) என்றும் வரையறை செய்வர்.

கல்வி கேள்வி பற்றிய இக்கருத்துகள் குறள் மொழியிலன் றிப் பரிமேலழகர் தரும் விளக்கங்களாகக் குறள் உரையில் காணப்படுவது குறிப்பிடத் தகுந்ததாகும்.

மக்கள் கல்வியறிவு பெறுதற்கு வேண்டிய பல்வேறு நூல் களின் பெயர்களும் அவர்தம் உரைக் குறிப்புகளினின்றும் அறிய முடிகிறது. அறநூல். பொருள் நூல், இன்ப நூல் ஆகிய மூவகை நூல்களையும் அவர் சுட்டுவர். அறநூலுள், மனு நூலைப் பெயரிட்டுக் கூறுவார். பொருள் நூல் எனப் பொருள் வகையாகச் சுட்டுவாரேயன்றிப் பெயர்களைச் சுட்டவில்லை. இன்ப நூலைப் பற்றிக் குறிப்பிடும் போது 'போசராசன் வடநூலுள் கூறுவர்' என்று கூறுவர்.[86] உரையால் அறியலாகும் மூவகை நூல்கள் வருமாறு:

**அறநூல்கள்**

மனு முதலிய நூல்கள் (அ. உ. பா.)
அறநூல் 140, 322
நீதி நூல் 581, 662, 683

**பொருள் நூல்கள்**

சமய நூல்கள் 21
சாங்கிய நூல் 27
மெய்ந்நூல்கள் 3.0
ஆகமங்கள் 300
ஏரம்பம் முதலிய நூல்கள் 391
பொருள் நூல்கள் கருவி நூல்கள் 3:3
உழவு, பசுக்காவல், வாணிபம் ஆகியவற்றிற்கு உரிய நூல்கள் 512
அளவை நூல் சொன்னூல் 725
அரண் பற்றி உரைக்கும் நூல் 743

நீதிநூல், யானை, குதிரை, தேர் படைக்கலம் என்றிவற்றின் நூல்கள் - கல்வி. தோற்றுவாய்.

மனமொழி மெய்கள் அடங்குதற்கு ஏதுவாய நூல்கள் 834

**இன்ப நூல்**

போசராசன் வடநூல் – காமத்துப்பால், தோற்றுவாய்.

**அரசியல்**

மனிதன் நல்வாழ்வு வாழ்வதற்குத் தேவையான சூழலை ஏற்படுத்தவே அரசு தோன்றியது. ஒரு சமூகம் நிலைபெற்றிருப்பது அதன் அரசைப் பொறுத்துள்ளது. அரசு என்பது இயற்கையினால் படைக்கப்பட்டது என்றும், பிறப்பியல்பில் மனிதன் அரசியல் தன்மை கொண்டவன் என்றும் அரிஸ்டாட்டில் கருதுவது உளங்கொளத்தக்கது[87] முன்னையோர் அரசியலை அரச சாத்திரம், அர்த்த சாத்திரம், தண்ட நீதி போன்ற சொற்களால் குறிப்பிட்டனர்.[88]

இன்று அரசியலென்பது நிலப்பரப்பு (Territory) மக்கள் கூட்டம் (Population), அரசாங்கம் (Government) இறைமை (Sovereignty) எனப்படும் நான்கு கூறுகளை ஒருங்கே கொண்டுள்ள அரசைப் பற்றிய இயலாகும். இவ்வரசையும் அதன் நோக்கத்தையும் அடையக் கருவிகளாகக் கொள்ளப்படும் அரசாங்கம் அதன் பிரிவுகளான நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை ஆகியவற்றின் அமைப்பு, இயல்கள், இயங்கு முறைகள் பற்றிய கருத்துக்களையுமே தற்காலத்தில் அரசியல் கொள்கை (Poltiical Theory) எனக் கூறுகின்றனர்.[89]

குறளில் பொருட்பாலில் காணப்படும் அரசியலில் இத்துணையளவு விரித்த செய்திகள் காணப்படவில்லையென்றாலும் அக்காலத்திய அரசுச் செயல்முறைகளை ஓரளவு அறிந்துகொள்ள முடிகிறது.

பொருட்பாலை அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூவகையாகப் பகுத்த பரிமேலழகர் முதல் இயலாகிய அரசியல் இறைமாட்சி தொடங்கி இடுக்கண் அழியாமை ஈறாக 27 அதிகாரங்களில் அரசியல் பேசப்படுவதாகக் கூறுவர். ஏனைய அங்கவியல், ஒழிபியல் ஆகிய இயல்களிலும் அரசு பற்றிய கருத்துக்கள் உண்டு.

இறைமாட்சி என்பதற்குப் பரிமேலழகர் 'அரசனுடைய 'நற்குண நற்செய்கைகள்' என்று பொருள்கொள்வர். மேலும் அரசு - அரசனது தன்மை' (381) என்று பொருள் கொள்வதும் இங்குக் கருதத்தக்கது.

அரசர்கள் இறைப்பண்பு பெற்றவர்கள் என்று பண்டையோர் கருதினர்.[90] பரிமேலழகர் இறைமாட்சியின் தோற்றுவாயில் கூறும் உரை விளக்கமும் இறைப்பண்பு அமைந்த அரசனைச் சுட்டுவதாக அமைந்துள்ளது ஒப்புநோக்கத் தக்கது

"உலகபாலர் உருவாய்நின்று உலகம் காத்தலின் 'இறை' என்றார், 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்'[91] என்று பெரியாரும் பணித்தார்"

என்று எழுதுவதால் மன்னனைப் பற்றிய பரிமேலழகர்தம் கொள்கை வெளிப்படுகின்றது. மேலும் 'மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த அரசன்' என்று அரசனுடைய சிறப்பைப் பரிமேலழகர் போற்றுவர்[92]

'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்'[93]

'மன்னுயிரெல்லாம் மன்னாள் வேந்தன் தன்னுயிர்'[94]

'மன்னுயிர் ஞாலக்கு இன்னுயிர் ஒக்கும் இறை'[95]

என்று முன்னையோர் மன்னனைப் போற்றிய நெறியைப் பின்பற்றிப் பரிமேலழகரும் 'மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த அரசன்' என்று சிறப்பித்தனர்.

அரசன் அறன் இழுக்காது அல்லவை நீக்க வேண்டும் என்பார் வள்ளுவர் (384). இங்குப் பரிமேலழகர் அறம் என்பதை,

அவ்வறமாவது, ஓதல் வேட்டல் ஈதல் என்னும் பொதுத் தொழிலினும், படைக்கலம் பயிறல், பல்உயிர் ஓம்பல், பகைத்திறம் தெறுதல் என்னும் சிறப்புத் தொழிலினும் வழுவாது நிற்றல் (384)

என்று விளக்கவுரை தருவர்.

இதனால் அரசன் கொள்ள வேண்டிய தொழில்களாகப் பரிமேலழகர் பொதுத்தொழில், சிறப்புத் தொழில் என இரண்டினைப் பாகுபடுத்திக் கூறுவர்.

அரசன் காட்சிக்கு எளியனாய் இருத்தல் வேண்டும் (386) என்ற வள்ளுவரின் கருத்து பரிமேலழகரின் உரையால் மேலும் விளக்கம் பெறும்போது அவர்தம் அரசியலறிவு நன்கு வெளிப்படும்.

முறை வேண்டினார்க்கும் காண்டற்கு எளியனாய் அரசன் இருத்தல் வேண்டும் என்பதும், அத்தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வி உடையவனாயிருத்தல் வேண்டும் என்பதும் பரிமேலழகருடைய உரையால் புலப்படும். 'முறை வேண்டினார் – வலியரால் நலிவு எய்தினார், குறை வேண்டினார் - வறுமையுற்று இரந்தார்' எனப் பரிமேலழகர் விளக்குவதும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

மேலும் அவனால் காக்கப்படுகின்ற நாடு, பசி, பிணி, பகை முதலியன இன்றி யாவர்க்கும் பேரின்பம் தந்து தேவருலகினும் நன்று என்னுமாறு, பிறர் புகழ அமைந்திருக்க வேண்டும் (386) என்பது பரிமேலழகர் கொள்கையாக விளங்குகின்றது. மன்னனைப் புகழ்வதினும் நாட்டைப் புகழ்வது உயர்ந்தது என்னும் பரிமேலழகரின் கருத்து எண்ணத்தக்கது.

மன்னன் அறநூலும் நீதிநூலும் கற்றவனாய் இருத்தல் வேண்டும் என்பர்.[96] அரசர்க்குக் கல்வி இன்றியமையாதது என்பதைச் சுட்டுமுகத்தான் அரசன் அறிவுடையவனானால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுவான்[97] என்பார். படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்று கூறப்படும் அரசனின் ஆறு அங்கங்கட்கும் அறிவு உரித்து (382) என அரசனுக்கும், உறுப்புகட்கும் அறிவின் இன்றியமை யாமையைச் சுட்டுவார்.

அமைச்சு

அமைச்சர் அரசர்க்கு இணையான தகுதியுடையவர் என்பது பரிமேலழகரின் கருத்தாகும்.[98] வள்ளுவர் அமைச்சனதியல்பினைப் பத்து அதிகாரங்களில், அங்கவியலில் கூறுவதாகப் பரிமேலழகர் பகுத்து வைப்பர். மேலும் அவர் 'அமைச்சனது தன்மை அவன்றன் குணங்களும் செயல்களும்'' என உரை எழுதுவது எண்ணுதற்குரியது.

'அரசர், சுருங்கிய காலத்தும், பெருகிய காலத்தும் இடை நிகராய காலத்தும் எஞ்ஞான்றும் அரசர்க்கு ஏற்பத் தொழில் செய்யும் திறம் பொருந்தியவராக அமைச்சர் விளங்கவேண்டும் என்று பரிமேலழகர் கூறுவர் (635).

அமைச்சியல் நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல் லும் சொல்வன்மை அமைச்சர்க்கு வேண்டும் என்பார்.[99] சொற்களைச் சொல்லும்போது தம்முடையவும், கேட்போ ருடையவுமாய குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் செல்வம், உருவம், பருவம் என்பனவற்றான் வரும் தகுதி வேறுபாடு களை உணர்ந்தும் தமக்கும் அவர்க்கும் உள்ள ஏற்றத்தாழ்வு களை அறிந்தும் அவ்வம்மரபால் கூறவேண்டும் (644) என்பார். எனவே உலகத்தோடு ஒட்ட ஒழுகும் இயல்பை அமைச்சர் அறிந்திருத்தல் வேண்டும் என்பது பரிமேலழகர் உரையால் நன்கு வெளிப்படுகின்றது.

## பெரியாரைத் துணைக்கோடல்

காவற்சாகாடு உகைத்தற்குரிய மன்னன் தீ நெறி விலக்கி நன்னெறியில் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கொள்ள வேண்டும் என்பார்.[100] பேரறிவுடை யவர், அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக்குற்றங்கள் வாராமல் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர் என்பவராவர் என விளக்கமும் தருவர்.

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல் (442)

என்னும் குறட்பாவின் விளக்கவுரையில் 'உற்ற நோய்களை யும்', 'தீர்க்கும் விதத்தையும்' கூறுவார்.

அரசர்க்குத் துன்பங்கள் தெய்வத்தாலும், மக்களாலும் வரும் என்பர். தெய்வத்தால் வரும் துன்பங்கள், (1) மழை யினது இன்மை, மிகுதிகளால் வருவன (2) காற்று, தீ, பிணி என்றிவற்றான் வருவன என்பனவாம். இவை கடவுளரையும், தக்கோரையும் நோக்கிச் செய்யும் சாந்திகளால் நீக்கப்படும் என்பர்.

பகைவர், கள்வர், கற்றறிந்தார், வினை செய்வார் என்றி வர்களால் வருவன மக்களால் வருந்துன்பங்கள் என்றும், இவை சாம, பேத, தான, தண்டங்கள் ஆகிய நால்வகை உபாயத் துள்ளும் ஏற்றதனால் நீக்கப்படும் என்றும் கூறுவர்.

தெய்வத்தால் வருவனவற்றை உற்பாதங்களால் அறிந்து சாந்திகளால் காக்க வேண்டும் என்றும், மக்களால் வருவன வற்றை அவர் குணம், இங்கிதம், ஆகாரம், செயல் என்பன வற்றான் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றால் காக்க வேண்டும் என்றும் இதனால் புரோகிதரையும், அமைச்சரையும் கூறியவாறாயிற்று என்றும் விரிவாக உரைப்பர்.

பரிமேலழகரின் இவ் உரை விளக்கத்தில் மன்னர்க்கு வரும் இருவகைத் துன்பங்கள், நீக்கும் நெறிகள், துன்பங்களை நீக்கும் பெரியோர் முதலாயின பற்றிய குறிப்புகளைத் தருவதால் குறளின் பொருளை அவர் அரசியல் புலமையோடு வெளிப் படுத்திய பாங்கு நன்கு தெளிவுறுகின்றது.

சடங்குகள் பற்றிய பரிமேலழகரின் கருத்துகள் வடமொழி மரபை ஒட்டியன.[101]

ஒற்று

அரசனுக்குத் தன் நாடு செலுத்தும் போதும், பிறர் நாடு கொள்ளும் போதும் ஒற்றாடல் தேவை என்பர் பரிமேலழகர். ஒற்று என்பதற்குப் பரிமேலழகர் 'பகை, நொதுமல், நட்பு என்னும் மூன்று திறத்தார்மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல்' எனப் பொருள் கூறுவர்.[102]

ஒற்றையும், நீதிநூலையும் மன்னன் இரு கண்களாகக் கொள்ள வேண்டும் என்பார் வள்ளுவர் (581). பரிமேலழகர் இதனை விளக்கும் போது, 'ஒற்றுத் தன் கண் செல்லமாட்டாத பரப்பெலாம் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தன எல்லாம் உணர்த்தும்'என்றும்,நூல் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்ல மாட்டாத வினைகளையெல்லாம் சொல்லி உணர்த்தும் என்றும் கூறி இவ்விரண்டையும் முறையே ஊனக்கண், ஞானக் கண் என மன்னர் போற்றல் வேண்டும் என்பார். இதனால் பரிமேலழகர் ஒற்றினது சிறப்பை உணர்த்தும் பாங்கு தெளிவா கின்றது.

ஒற்றர் ஐயுறாத வடிவாக பார்ப்பார். வணிகர் முதலா யினார் வடிவைச் சுட்டுவார் (585).

ஒற்றர் ஒற்றப்பட்டாரை நெருங்கி எவ்வாறு செயலாற்ற வேண்டும் என்பதை வள்ளுவர்,

மறைந்தவை கேட்கவற்று ஆகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று (587)

என்னும் குறட்பாவால் கூறுவர்.

'கேட்கவற்றாகி' என்பதற்குப் பரிமேலழகர் தரும் விளக்கம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

> ''மறைந்தவை சொல்லுவாரை யறிந்து அவர் அயிராமற் சென்று ஒட்டித் தாமே சொல்லும் வகை அதற்கேற்ற சொல்லாகச்செயலாக முன்னே விளைத்து அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறாதார் போன்று நின்று கேட்க வேண்டு தலின் கேட்கவற்றாகி' என்றார்''

என்பது அவர் தரும் விளக்கமாகும்.

இதனால் ஒற்றுப்பட்டாரை நெருங்கி நின்று அவர் மறை பொருளைச் சொல்லுமாறு சொல்லாலும் செயலாலும் ஏற்ற சூழலைத் தாம் ஏற்படுத்தி, மறைபொருளை அறிய விருப்ப மில்லாதார் போலக் கேட்டுத் தெளியும் திறன் ஒற்றர்க்கு இருத்தல் வேண்டும் என்று ஒற்றினது இலக்கணம் கூறும் உரைப்பாங்கு பரிமேலழகரின் அரசியலறிவை நன்கு வெளிப் படுத்துவதாக அமைகின்றது.

## போர்ப்பணி

அரசர்க்குக் காவற்பணியும் இன்றியமையாததாக அக் காலத்தில் விளங்கியது. வள்ளுவர் சிறப்பாக நாடு, அரண், படைமாட்சி, படைச்செருக்கு முதலான அதிகாரங்களில் நாடு காவலைப் பற்றியும் போர் பற்றிய செய்திகளையும் கூறுகிறார். இவையன்றித் தெரிந்து செயல்வகை, வலியறிதல் காலம் அறிதல், இடன் அறிதல் ஆகிய அதிகாரங்கள் அரசனின் போர்ப்பணியைக் குறிப்பதாகவே பரிமேலழகர் கருதுவர். பரிமேலழகரின் இவ் அதிகாரப் பொருள்களைத் தொகுத்துக் கூறுவதால் போர்ப்பணி பற்றிய அவர்தம் நுட்பமான கருத்து கள் நன்கு விளங்குகின்றன.

பரிமேலழகர்,

வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு (465)

என்னும் குறட்பாவிற்குப் 'போர்வினையைத் தொடங்கு முன் நிகழும் திறங்களை முற்ற எண்ணாது, சில எண்ணிய துணையானே அரசன் பகைவர்மேற் செல்லுதல், பகைவரை வளரும் நிலத்திலே நிலைபெறச் செய்யும் நெறி' என்று கருத்துரைப்பார். மேலும் விசேட உரையில் வினைக்கு முன் எண்ண வேண்டிய திறங்கள் எவை எவை என்று பரிமேலழகர் விளக்குவது கருதத்தக்கது:

"அத்திறங்களாவன: வலி, காலம், இடன் என்ற இவற்றால் தனக்கும் பகைவர்க்கும் உளவாம் நிலைமைகளும், வினை தொடங்குமாறும், அதற்குவரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும் அதனால் பெரும்பயனும் முதலாயின. அவற்றுள் சில எஞ்சினும் பகைவர்க்கு இடனாம் ஆகலான், முற்றுப்பெற எண்ண வேண்டும் என்பதாம்"

அரசன் செய்யத்தக்கன அல்லவற்றைச் செய்தால் கெடும் என்றும் செய்யத்தக்கனவற்றைச் செய்யாவிட்டாலும் கெடும் என்றும் வள்ளுவர் உரைப்பர் (466). இங்குப் பரிமேலழகர் செய்யத்தக்கன அல்லவாவன யாவை என்பதனை, 'பெரிய முயற்சியினவும், செய்தால் பயனில்லனவும், அது சிறிதாயினவும், ஐயமாயினவும், பின் துயர் விளைப்பனவும் என இவை' என்று சுட்டி இவற்றின் மறுதலையாயின அனைத்தும் செய்யத்தக்கன என்றும் சுருங்க உரைப்பர்.

அரசன் வினை செய்யத் தொடங்கும் முன் இங்ஙனம் எண்ணித் தெரிந்து செயலாற்றல் வேண்டும் என்பதைப் பரிமேலழகர் கூறிய குறிப்புக்கள் நன்கு உணர்த்தும். அவ்வாறு செயலாற்றவில்லையேல், அறிவு, ஆண்மை, பெருமை என்னும் மூவகை ஆற்றலுள் பொருள், படை என இருவகைத் தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனாய் விடுவர் என்றும் தெளிவுறுத்துவர்

பகையரசனோடு ஏற்படும் பூசல்களைத் தீர்ப்பதற்கு உரிய உபாயங்களைப் பரிமேலழகர் குறிப்பிடுவர். 'உபாயம்' பற்றித் திருவள்ளுவர் வெளிப்படையாகக் கூறவில்லையாயினும் பரிமேலழகர் உரைத்திறம் கொண்டு அதனை விளக்குவதைக் காண்போம்:

'எண்ணித் துணிக கருமம்' (467) என்பதற்குச் செய்யத் தக்க கருமமும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் தொடங்குக என உரை தந்து, உபாயங்கள் குறித்துப் பின் வருமாறு விளக்குவர்:

> ''அது கொடுத்தல், இன்சொல் சொல்லல், வேறுபடுத்தல் ஒறுத்தல் என நால்வகைப்படும். இவற்றை வடநூலார் தான, சாம, பேத, தண்டம் என்ப. அவற்றுள் முன்னைய இரண்டும் ஐவகைய. ஏனைய மூவகைய. அவ்வகைக ளெல்லாம் ஈண்டுஉரைப்பின் பெருகும். இவ்வுபாய மெல்லாம் எண்ணாது தொடங்கின் அவ்வினை மாற்றா னால் விலக்கப்பட்டு முடியாமையானும் இடையின் ஒழிதல் ஆகாமையானும் அரசன் துயருறுதலின் அவ் வெண்ணாமையை 'இழுக்கு' என்றார். செய்வன வற்றையும் உபாயம் அறிந்தே தொடங்குக என்பதாம்.

இவ்வுரையின் தொடர்ச்சியாக அடுத்த குறட்பாவின் உரையில் (468) நால்வகை உபாயங்களையும் பயன்படுத்தும் நெறியையும் எடுத்துரைக்கின்றார். கொடுத்தலைப் பொருள் நசையாளன்கண்ணும், இன்சொல்லைச் செப்பம் உடை யான், மடியாளன், முன்னே பிறரோடு பொருது நொந்தவன் என இவர்கண்ணும், வேறுபடுத்தலைத் துணைப்படை யாளன், தன் பகுதியோடு பொருந்தாதான் என இவர்கண்ணும், ஒறுத்தலை இவற்றின் வழி வாராத இவர் கண்ணும் தேறப் படாத கீழ்மக்கள்கண்ணும் அவ்உபாயங்களைப் பயன்படுத்தி அரசன் வினைமுடித்தல் வேண்டும் என்பர்.

இவ் உபாயங்களுள் பொருந்தாதனவற்றைச் செய்தல் கூடாது என்றும் அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட்கு ஏற்பச் செய்தல் வேண்டும் என்றும் கூறுவர். தாம் வலியராய் வைத்து மெலியார்க்கு உரிய கொடுத்தல் முதலியன மூன்றனைச் செய்தலும், மெலியராய் வைத்து வலியார்க்கு உரிய ஒறுத்தலைச் செய்தலும் பொருந்தாத உபாயங்களைச் செய்தலாம். எனவே இவற்றை நன்கு ஆராய்ந்து செய்தல் வேண்டும் என்னும் பரிமேலழகரின் கூற்று அரசன் எங்ஙனம் வினையை அணுக வேண்டும் என்பதனைத் தெளிவுறுத்து கின்றது எனலாம்.

காலமறிந்து தானையினைச் செலுத்த வேண்டும் (481) என்பர் வள்ளுவர். பரிமேலழகர் அதன் விளக்க உரையில், 'காலமாவது வெம்மையும், குளிர்ச்சியும் தம்முள் ஒத்து, நோய் செய்யாது, தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினதாய் அமைந்திருத்தல் வேண்டும்' என்று கூறுவதால் படைநடத்திச் செல்லும் மன்னன், அதனை நடத்துதற்குரிய காலத்தின் சிறப்பையும் அறிந்திருக்க வேண்டும் என்னும் பரிமேலழகரின் கொள்கை தெளிவாகிறது.

### தூது

அரசியலில் அயல்நாட்டுறவு பெரிதும் இன்றியமையாதது. வள்ளுவர் 'தூது' என்னும் அதிகாரத்தில் தூது உரைப்பான் பண்புகளை விளங்க உரைக்கின்றார்.

பரிமேலழகர் தூது என்பதற்குச் 'சந்தி விக்கிரகங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மை' (103) என விளக்கம் தருவர். தான் வகுத்துக் கூறுவான், [104] கூறியது கூறுவான்[105] எனத் தூது இருவகைப்படும் என்பர் பரிமேலழகர். தான் வகுத்துக் கூறுவானை அமைச்சனோடு ஒப்பான் எனவும், கூறியது கூறுவான் அவனிற் காற்கூறு குறைந்தோன் என இருவருக்கும் தகுதி வகுப்பர். இவ்விரு வகையாரோடு வடநூலார் மதத்தைப் பின்பற்றி ஓலை கொடுத்து நிற்பாரையும்[106] கூட்டித் தூதரைத் தலை, இடை, கடை என மூவகையாக வகுத்துக் காட்டுவது பரிமேலழகர்தம் அரசியலறிவைப் புலப்படுத்தும்.

### பொருளியல்

'பொருளியல்' இன்று தனிமனித வாழ்விலும், அரசாட்சி-யமைப்பிலும், நிறுவனங்களிலும், சமூக வாழ்விலும் தனியாட்சி நடத்துகின்றது. பொருளியலைப் பொருள்நூல், பொருளாதாரம் என்றும் கூறுவர். பொருளியல் அறிவு பழங்காலத்தில் தனித்துறையாகத் தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லையென்றாலும் இன்றைய பொருளியலறிஞர் கூறும் கருத்துக்கள் அவ்விலக்கியங்களில் இலைமறை காயாகக் காணக்கிடக்கின்றன என்பர் பலதுறை அறிஞர்கள்.[107]

பொருளியல் மனிதனைப் பற்றியது; சமூக அறிவுத் துறைகளில் ஒன்று. மனிதன் தன் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளப் பொருள்களைத் தேடவும், படைக்கவும், துய்க்கவும் ஒரு சமூகமாக இயங்க வேண்டியுள்ளது. அம்முயற்சிகளை ஆய்ந்துரைப்பதே பொருளியல் என்பர் அறிஞர்.[108] எனவே பொருளை ஈட்டலும் இயற்றலும் வகுத்தலும் பற்றியுரைப்பதே பொருளியல் எனலாம்.

## பொருளின் சிறப்பு

இத்தகைய பொருளை வள்ளுவர்,

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள் (751)

பொருள் என்னும் பொய்யா விளக்கம் (753)

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல் (247)

செய்க பொருளை...... (759)

பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை (252)

என்று போற்றுவர்.

வள்ளுவ உள்ளத்தை உணர்ந்த பரிமேலழகரும் பொருளைப் போற்றும் வகையில், இவ்வுலக இன்பங்கட்குப் பொருள் காரணம் (247); பகைவர், நட்டார், நொதுமலர் யாவரும் பொருளுடையாரைப் போற்றுவர் (752); பொருளுடையாரிடத்துப் பகைவரும் தாமே தருக்கழிந்து ஒடுங்குவர்; பொருள் பெரும்படையையும் நட்பையும் உண்டாக்கும் (759); என்றும் எல்லார்க்கும் எஞ்ஞான்றும் பொருள் இன்றியமையாதது (753) என்றும் விளங்க உரைப்பர்.

இக்கருத்துக்களோடு பொருளாதார நிலையில் மிக உயர்ந்து விளங்கும் இன்றைய வல்லரசுகளை ஏனைய நாடுகள் போற்றிப் புரந்து வாழும் நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இக் கூற்றுகளின் வன்மை நன்கு புலனாகும்.

அரசு நடைபெறுவதற்கும், நாடு காவலுக்கும், மக்கட் காப்புக்கும் பொருள் இன்றியமையாதது. 'பொருள் செயல் வகை' என்னும் அதிகாரத்திற்கு விளக்கம் தரும் பரிமேலழகர் 'பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவும்

காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம்' என உரை எழுதுவது இவண் உளங்கொளத்தக்கது. இவ்வதிகாரப் பொருளில் வரும் பத்துக் குறள்களின் கருத்தையும் பரிமேலழகர் தொகுத்து முறையே 'பொருளது சிறப்பு'[109], 'பொருள் ஈட்டும் நெறி'[110]; 'பொருளான் வரும் பயன்'[111] கூறப்பட்டன என்பர்.

## அரசின் பொருள் வாழ்வு

தனி மனிதன் பொருள் ஈட்டித் தன் தேவைகளையும் தன் குடும்பத் தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்கின்றான். தனி மனிதனது பொருள் வாழ்வு போன்றே அரசுக்கும் பொருள் வாழ்வு உண்டு. அதன் தேவைகளை நிறைவேற்றுவதும் அதற்கான பொருளையும் பயன்பாட்டையும் (Utilities) ஈட்டுவதும் செலவு செய்வதும் பற்றியதே அரசின் பொருள் வாழ்வு. தனி மனிதனைப் போன்றே அரசும், வரவும் செலவும் பார்த்து முதலும் ஊதியமும் கணக்கிட்டு வாழ வேண்டும். அது மட்டுமல்லாது மக்கள் பொருள் வாழ்வினை அது நெறிப்படுத்தியும் செல்கிறது. அது அதன் கடமையுங்கூட ஆகும். தனி மனிதன் பொருள் வாழ்வுக்கும் அரசின் பொருள் வாழ்வுக்கும் நெருங்கிய உறவுண்டு. எல்லாம் முடிவில் மக்கள் வாழ்வாகவே முடிகின்றன; எல்லாம் மக்களுக்குத்தான் என்பதன்றி வேறில்லை. அரசு மக்களுக்கெல்லாம் பொது. அது நடத்தும் பொருள் வாழ்வும் எல்லாருக்கும் உரியதும் உறவுடையதும் ஆகும். ஆகவே அரசின் பொருள் வாழ்வு (Economics of Government) பொது நிதியியல் (Public Finance) எனவும் பெயர் பெறுகிறது.[112] எனவே அரசினுடைய வரவு செலவுகளைக் கூறுவது பொது நிதியியலாகும்.

வள்ளுவர் இதனை,

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு (385)

என்பர். இக்குறளுக்குப் பரிமேலழகர் தரும் விளக்கங்கள் அவர்தம் பொருளியல் புலமையை நன்கு உணர்த்துவனவாக உள்ளன.

> "தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன்மேல் உளவாக்கலும், அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்தவற்றை அறம் பொருளின்பங்களின் பொருட்டு விடுத்தலும் வல்லவனே அரசன்"

என்பது அவர்தம் உரை இவற்றுள் பொருள்கள் உளவாக் கல்ல வருவாய்க்குள்ளும் (Revenue) தொகுத்தலையும் காத்தலையும் நிதியாட்சியுள்ளும்(Financial Administration) விடுத்தலைச் செலவுள்ளும் (Expenditure) அடக்கலாம்.

பரிமேலழகரின் உரையில் அரசுக்கு வரும் பொருள்களும், வரும் வழிகளும், அவற்றினைக் காக்கும் முறையும், செலவு செய்யும் முறையும் நன்கு கூறப்பட்டுள்ளன. அவர்தம் உரை யால் அறியும் செய்திகள் வருமாறு:

அரசுக்கு வரும் **பொருள்களாவன:** மணி, பொன், நெல் முதலாயின என்று குறிப்பிட்டு, அரசுக்குப் பொருள் எவ்வெவ் முறையில் வரக்கூடும் என்பதையும் பின்வருமாறு விளக்குவர்.

**வரும் வழிகளாவன:**
1. பகைவரை அழித்தல்
2. திறைகோடல்
3. தன் நாடு தலையளித்தல்

'வாரிபெருக்கி' என்னும் குறள் தொடருக்கு (512) உரை எழுதும் போது பொருள் வரும் வாயில்கள் என மேற்குறித்த வற்றைக் குறிப்பிட்டு அவற்றோடு

4. உழவு
5. பசுக்காவல்
6. வாணிகம் என்னும் வார்த்தையுமாம்

என மூன்றைக் கூட்டி எழுதுவர். 'உறு பொருள்' என்னும் குறட்பகுதியில் (756),

7. உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருள்
8. வைத்தார் இறந்து போக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்தது
9. தாயத்தார் பெறாதது
10. சுங்கமாகிய பொருள்

முதலாயின அரசுக்கு உரிய பொருள்களாம் என்பர்,

மேலும் நிலவரியாக (11) 'ஆறில் ஒன்றாய் வருதல்' (755) என்னும் குறிப்பையும் தருவர். இவர்தம் உரையினின்றும் அரசுக்குரிய வருவாயாக மேற்கண்ட பதினொரு வருவாய்களை அறிய முடிகின்றது. இது அவர் காலத்திலிருந்த நடைமுறையாயிருக்கக் கூடும்.

'உல்கு பொருள்' என்பதற்குப் (756) பரிமேலழகர் 'சுங்கமாகிய பொருள்' எனவும், கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது'[113] எனவும் கூறுவர். 'சுங்கம்' அக்காலத்திய வருவாய் என்பதும் இதனால் புலனாகிறது.

இங்குப் பரிமேலழகர் கூறும் 'பசுக்காவல்' என்பது ஆடு, மாடு, எருமை முதலிய இனங்கள் கொண்ட கால்நடை வளர்ப்பாக இருத்தல் வேண்டும் என்பர். நாட்டிலுள்ள கால்நடையால் அரசனுக்கு வருவாயுண்டு. உழவர்கள் நிரைகாத்து அரசனுக்கு நிதி தந்தனர் என்பதை,

> போர்வகை வாய்த்த புரவலரின் மேதக்கார்
> ஏர்வாழ்நர் என்பதற்கு ஏதுவாம் — சீர்சால்
> உரைகாக்கும் மன்னர்க்கு ஒளிபெருகத் தாம்தம்
> நிரைகாத்துத் தந்த நிதி

என்னும் பழம்பாடலாலும் அறிய முடிகிறது.[114]

வடநூல்களில் பேசப்படும் 'வார்த்தா சாஸ்திரத்தையும்' பரிமேலழகர் கூறுவது எண்ணத்தக்கது.[115] 'உழவு, பசுக்காவல், வாணிகம் என்னும் வார்த்தையுமாம்' (512) என்பது அவர் உரை. இதனால் அவர்தம் வடமொழிப் பொருள்நூற் புலமையும் நன்கு புலனாகும்.

### காக்கும் முறை

ஈட்டிய பொருளைக் காப்பதற்குரிய நெறியாகப் பரிமேலழகர் இரு குறட்பாக்களின் உரைகளிலும் கீழ்வரும் செய்தியைக் குறிப்பர் :

> 'காத்தல் - தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும்; பிறர் என்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினாரை'[116]

பகைவர், கள்வர் முதலானோரிடத்திருந்து இடையூறுகள் வருவனபோலவே அரசனுக்குத் தன் சுற்றத்தாரிடமிருந்தும், தன்கீழ்ப் பணி செய்வாரிடமிருந்தும் பொருளைக் காவாத வகையில் இடையூறுகள் வரலாம் என்று கருதும் பரிமேலழகரின் உரைநுட்பம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

**வகுத்தல்**

வகுத்தல் (385) என்பதற்குச் செலவிடுதல் என்பது பொருள். வள்ளுவர் வகுத்தல் என்று மட்டுமே பொதுப்படக் கூறுகிறார். இதற்குப் பரிமேலழகரின் பொருள் விளக்கம் அவர்தம் பொருளியல் புலமையை நன்கு காட்டுவதாக அமைந்துள்ளது:

> "காத்தவற்றை **அறம், பொருள், இன்பங்களின்** பொருட்டு விடுத்தல்.
>
> கடவுளர் அந்தணர் வறியோர் என்றிவர்க்கும் புகழிற்கும் கொடுத்தலை **அறப் பொருட்டாகவும்,**
>
> யானை, குதிரை, படை, நாடு, அரண் என்ற இவற்றிற்கும் பகையொடு கூடலின் பிரிக்கப்படுவார்க்கும், தன்னிற் பிரிதலின் கூட்டப்படுவோர்க்கும் கொடுத்தலைப் **பொருட்பொருட்டாகவும்,**
>
> மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலிய செய்தற்கும், ஐம்புலன்களால் நுகர்வனவற்றிற்கும் கொடுத்தலை **இன்பப் பொருட்டாகவும்** கொள்க".

இதனை,

1. கடவுளுக்கும் மக்களுக்குமென—அறத்துறைச் செலவு
2. உள்நாட்டுக் காவலுக்கும்
   வெளிநாட்டு உறவுக்கும் என—பொருட்டுறைச்செலவு
3. தக்க சூழலை அமைத்துப்
   புலனின்பத்திற்கென—இன்பத்துறைச் செலவு

என வகுத்துக்காட்டும் பாங்கு உரையாசிரியரின் பொருளியற் போக்கினைப் பண்டை நெறியோடு பிணைக்கும் நுட்பத்தை உணர்த்தும்.

இவை பொதுமக்கள் யாவர்க்கும் பொருந்தும் வகையில் கூறிய பரிமேலழகர் அரசர்க்கெனச் சிறப்பாகக் கூறுமிடத்துத் தன் செலவு, எதிர்கால வைப்புநிதி, கொடை எனக்கூறி அவற்றிற்குரிய அளவினைக் கூறுவதும் குறிப்பிடத்தக்கது.[117]

## சமயமும் பொருளியலும்

வள்ளுவர் கடவுள் வாழ்த்தில் இறைவனை எண்குணத்தான் (9), வேண்டுதல் வேண்டாமையிலான் (4), தனக்குவமை இல்லாதான் (7), மலர்மிசை ஏகினான் (3) எனப் பண்பு, செயல் அடிப்படையில் சுட்டுவர். உருவத்தையும் பெயரையும் சுட்டாது கடவுள் வாழ்த்தின் பயன்கூறும் போதுங்கூட நிலமிசை நீடு வாழ்வார் (3), அடிசேர்ந் தார்க்கு[118] யாண்டும் இடும்பையில (4), மனக் கவலையை மாற்றலாம் (7), பிறவிக்கடலைக் கடக்கலாம் (8) என யாவருக்கும்ஒத்த பயனையே கூறுவர். ஆனால் பரிமேலழகரின் உரையால் பல்வேறு சமயக் கருத்துக்களையும், வதுத்தக் கருத்துக் களையும் அறிய முடிகிறது.

## ஏற்புடைக் கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்தினை 'ஏற்புடைக் கடவுள் வாழ்த்து' என்பார் பரிமேலழகர். சத்துவம், இராசதம், தாமதம் முதலிய முக்குணங்களால் காத்தல், படைத்தல், அழித்தல் ஆகிய முத் தொழில்களுக்குரிய அரி, அயன், அரன் ஆகிய முக் கடவுளரையும்[119] வள்ளுவர் பொதுப்பட வாழ்த்தினார் என்பது பரிமேலழகரின் கருத்தாகும். இதனால் கடவுள் வாழ்த் தினைப் பரிமேலழகர் இந்து சமயப் பார்வையோடு நோக் கினார் என்பது புலனாகும்.

எண்குணத்தான் (9) என்னும் தொடருக்குத் தன்வயத்த னாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய எண்குணங்களையுடையவன் என்று சைவ ஆகமத் திற் கூறப்பட்டதைக் குறிப்பிடுவர் பரிமேலழகர்.

மேலும் இவ்வுரையில் இவ்வெண்குணங்கள் 'கடையிலா அறிவை முதலாக உடையன' எனவும் உரைப்பாருமுளர்[120] எனப் பிற சமயக் கொள்கையைச் சுட்டுவர். இதனால் சமண

சமயச் சார்பான கருத்துக்களைக் குறளுரைக்குப் பிறர் கூறு வதையும் பரிமேலழகர் மறைக்காமல் எடுத்துரைப்பர் என்பது புலனாகிறது,

'மலர்மிசை ஏகினான்' என்னும் தொடருக்குப்'பூமேனடந் தான்' என்று வேறு கடவுளருக்கு ஏற்றிச் சொல்வாருமுளர் என்று கூறுவதால் இவர்தம் பிற சமய அறிவு வெளிப்படுகிறது.

*சாங்கியம்*

உலகம் ஐம்புலன்களையும் ஆராய்ந்தாளும் ஞானிகள் வயத்தது (27) என்பர் வள்ளுவர். பரிமேலழகர் இதனைச் சாங்கிய வழி நின்று,

> "அவற்றின் (சுவை, ஒளி, ஊறு, ஓசை) கூறுபாடாவன: பூதங்கட்கு முதலாகிய அவை தாமைந்தும், அவற்றின் கண் தோன்றிய அப்பூதங்களைந்தும் அவற்றின் கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங் களைந்தும் ஆக இருபதுமாம். வகைதெரிவான்கட்டு என உடம்பொடு புணர்த்ததனால் தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற்கருவியாகிய மான் அகங்கார மனங்களும் அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றாம். தத்துவம் இருபத்தைந்தனையுந் தெரிதலாவது மூலப் பகுதியொன்றிற்றோன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகாதென்வும்,அதன்கட்டோன்றிய மானும், அதன் கட்டோன்றிய அகங்காரமும், அதன் கட்டோன்றிய தன்மாத்திரைகளுமாகிய ஏழுந்தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும்,தங்கட்டோன்று வனவற்றை நோக்கப் பகுதியாதலுமுடையவெனவும், அவற்றின்கட்டோன்றிய மனமும், ஞானேந்திரியங் களும், கன்மேந்திரியங்களும், பூதங்களுமாகிய பதினாறும் தங்கட்டோன்றுவன வின்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகாவெனவும், புருடன் தானொன் றிற்றோன்றாமையானுந் தன்கட்டோன்றுவனவின்மை யானும் இரண்டும் அல்லனெனவுஞ் சாங்கிய நூலுள் ஓதியவற்றான் ஆராய்தல்"

என விரிவாக விளக்குவர். இதனால் அவர் அத்துறையில் பெற்ற மெய்ப் பொருள் அறிவு புலப்படும்.

### ஆருகத நெறி

பரிமேலழகர் ஆருகதக் கொள்கைகளையும் அறிந்தவர். அதில் அவர்கள் 'தருமத் தியானம்' எனக் கூறுவதைப் பிற மதத்தினரும் நன்கு உணரும் வண்ணம், "உயிர்களை அளவை களால் அளந்து நல்வினை தீவினைகளால் ஏற்படும் விளைவு களையும் உணர்ந்து அதற்குரிய யோக ஞானங்களைச் செய்து வீடு பேறு அடைதலை ஆருகதர் 'தருமத் தியானம்' (286) என்பர்" என்று அவர் எழுதும் குறிப்புரை இதற்குத் தக்க சான்றாகும்.

மேலும் 'சார்பு கெட ஒழுகுதலைச் சமணர் உவர்ப்பு' என்பர் (359) என்று பரிமேலழகர் எழுதுவதாலும் அவர்தம் சமண சமயப் புலமை நன்கு தெளிவாகும்.

### வைசேடிக நெறி

அறுவகைப் பொருள் என்பது வைசேடிகர் வழக்கு. அதனைப் பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என விரித்துக் காட்டுவார்.[121]

இதனால் பிறர் மதச் சார்பான சொற்றொடர்களை எடுத்துக் கூறுதலும், அவற்றிற்குரிய விளக்கங்களைப் பிற மதத்தினரும் தெளிவாக உணரும்வண்ணம் விளக்குதலும் பரிமேலழகர் உரையினின்றும் நன்கு புலனாகின்றன.

### சமயங்களின் ஒத்த இயல்பு

ஒன்றையொன்று ஒவ்வாத சமயங்கள் பல [122] ஆயினும் அவை மெய்ப்பொருளைக் கூறுவதில் ஒத்த துணிபொருளை எடுத்துரைப்பதே வள்ளுவர் கருத்து என்பதைப் பரிமேலழகர் வலியுறுத்துவர். இதனை, 'தந்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களில் வழுவாதொழுகினால் அறம் வளரும்; அறம் வளரப் பாவந்தேயும்; பாவந்தேய அறியாமை நீங்கும்; அறியாமை நீங்க இது நித்தியம், இது அநித்தியம் என்னும் பகுத்தறிவும் அழியுந்தன்மையையுடைய இம்மை மறுமை யின்பங்களில் வெறுப்பும் பிறவித் துன்பங்களும் தோன்றும். தோன்றவே பிறவிக்குக் காரணமாகிய யோக முயற்சி உண்டாகும். அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப் பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய நான் என்பதுமாகிய மமகாரமும், அகங்காரமும் நீங்கும். எனவே இவ்விரண்டு

பற்றுக்களையும் வெறுத்தல் வேண்டும். இவையே ஒன்றை யொன்றொவ்வாத சமய நூல்கள் எல்லாவற்றிற்கும் ஒத்த துணிபாம்'' என்னும் உரைப்பகுதியினின்றும் அறிய லாம்.[123]

உடம்பு நீங்கிப் போகும் காலத்தில் அடுத்த வினையும், அவ்வினை காட்டும் கதிநிமித்தங்களும், அக்கதியில் அவ் அவாவும் உயிரினிடத்து வந்து தோன்ற, அறிவை மோகம் மறைக்க, அவ்வுயிரை அவ் அவாவானது அக்கதியினிடத்துக் கொண்டு செல்லுமாதலால் அவாவைப் பிறப்பீனும் வித்து என்றார். இக்கருத்து எல்லாச் சமயங்கட்கும் ஒத்தது என்று கூறுவர் பரிமேலழகர்.[124]

ஒன்றையொன்று ஒவ்வாத சமய நெறிகள் எல்லாவற்றை யும் ஆராய்ந்தாலும் அறத்திற்குத் துணையாக வருவது அருளுடைமைதான் என்பர் பரிமேலழகர்.[125]

இக்கூற்றுக்களால் பரிமேலழகர் பிற சமயக் கருத்துக் களையும் அறிந்து தம் உரைவளத்திற்கு நன்கு பயன்படுத்திக் கொண்டார் என்பது தெளிவாம்.

**துறவு**

பல நாடுகளிலும் பண்டைக்காலத்தே துறவறம் போற்றப் பட்டுள்ளது.[126] துறவின் மூலம் ஆன்ம அறிவும் வீடு பேறும் கிட்டும் என்பது பண்டையோர் நம்பிக்கை. 'இல்லறத்தின் வழுவாது ஒழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடு பேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம்'[127] என்று பரிமேலழகர் துறவறத்திற்கு இலக்கணம் கூறுவர்.

வள்ளுவரின் துறவு அதிகாரத்தில் வெளிப்படையாகக் காணாத விரத ஞானங்களைப் பரிமேலழகர் உரைத் திறத்தால் புலப்படுத்துவர். பின்னர் விரதத்தை விளக்கும் வகையில் தம் வல்லமைக்கு ஏற்ப இன்ன அறங்களைச் செய்வதையும் இன்ன பாவங்களைத் தவிர்வதையும் சுட்டுவர். இவற்றின் கீழ், 'அருளுடைமை முதலாக 9 அதிகாரங்களையும் அடக்கி இவற்றோடு துறவறத்திற்கு உள்ள இயைபை அவ்வவ் அதிகாரங்களின் பெயர்க்காரணத்தில் சுட்டுவர்.

தேசிகரிடம் உபதேச மொழிகளைப் பெற்று, கேள்வி, விமரிசம், பாவனை வாயிலாக முத்தியை அடைவது (356) பரிமேலழகர் காட்டும் நெறியாகும். பலர்பக்கலிலும் பலகாலும் பயில்வது கேள்வி (356) எனவும், அங்ஙனம் கேட்ட உபதேச மொழிப் பொருளை அளவைகளாலும்,பொருந்தும் வழிகளாலும் தெளிவாக ஆராய்ந்து முதற்பொருளை உணர்வது விமரிசம் (357) எனவும், உயிர் தன் அவிச்சை கெட்டுச் செம்பொரு ளோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல் 'பாவனை' (358) எனவும் பரிமேலழகர் கூறுவர். பாவனைக்குச் 'சமாதி' எனவும் 'சுக்கிலத் தியானம்' எனவும் பெயர் உள்ளமையைச் சுட்டுவதின் வாயிலாக மெய்ப்பொருள் துறையில் விளங்கும் பல்வேறு ஒரு பொருள் தொடர்களைப் பரிமேலழகர் தம் உரையில் குறிப்பதை அறியமுடிகிறது.

வீடு பேறு எய்துதற்குரிய தவநெறியில்,செயற்கு எளியவை இவை, அரியவை இவை எனப் பின்வருமாறு தொகுத் துரைப்பர்:

> **எளியவாவன :**
> மனம் வேண்டியவாறே அதனைப் பொறி வழிகளாற் புலன்களிற் பிறத்தலும் வெஃகலும் வெகுடலும் முதலாயின
>
> **அரியவாவன:**
> இயம நியம முதலிய எண்வகை யோக உறுப்புக்கள்[128].

இங்கு இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தி யாகாரம், தாரணை, தியானம், சமாதி முதலிய எண்வகை யோகங்களும் செய்தற்கு அரியன என்று கூறுவது கருதற்பாலது.

நீத்தார் பெருமையாக "நீர்பலகால் மூழ்கல் முதலாய நாலிரு வழக்கிற்றாபதபக்கம் என்பாருமுளர்' என்னும் பிறர் கருத்தினைச் சுட்டி அவை நியமத்துள்ளே அடங்கும்; எனவே 'நீத்தார் பெருமைக்கு அவை ஏலாமை யறிக' என்றும் கூறுவர்.

பரிமேலழகரின் உரையினின்றும் சமய மெய்ப்பொருள் கருத்துக்களைத் தொகுத்து ஆராயும்போது அவர் சைவ, வைணவ வேறுபாடு கருதாமல் அவற்றின் கருத்துக்களையும் தம் உரையில் இணைத்துச் சமயப் பொதுமையை வெளிப் படுத்தும் நிலையில் வழிபடு கடவுள் என்ற விளக்கத்தை அமைத்துள்ளார். இப் பொது நெறியைச் சுட்டுவதுடன்,

இதற்கு உட்பட்ட சைவ, சமயக் கருத்துக்களுடன் இதற்கு மாறான சமணம் போன்ற புறச் சமயக் கொள்கைகளையும் தம் உரையில் பயன்படுத்தியுள்ளமை எண்ணுதற்குரியது.

எனவே ஒன்றையொன்று ஒவ்வாச் சமயங்களுள் விளங்குகின்ற ஒத்த இயல்புகளையும் எடுத்துக் காட்டுவதால், பரிமேலழகர் சமயப் பொதுமை நெறியில் நின்று உரைவிளக்கம் கண்டார் என்பதும் புலனாகின்றது.

## அளவை இயல்

மனிதனின் சிந்தனைத் திறனையும், ஆராய்ச்சி உணர்வையும், கருத்துக்களையும் நிரந்தினிது கிளக்கும் சொல்வன்மையினையும் பெரிதும் வளர்த்துச் செம்மையுறச் செய்ய வல்லது[129] அளவை இயலாகும். அளவை இயலை ஆங்கிலத்தில் 'லாஜிக்' (LOGIC) என்பர். இச்சொல், மொழி, சிந்தனை என இரு பொருள்படும் 'லாகோஸ்' (Logos) என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்தது இதிலிருந்தும் சிந்தனைக்கும் மொழிக்கும் உள்ள தொடர்பை அறியலாம் என்பர்.[130]

காட்சி, அனுமானம், ஆகமம் என்னும் மூவகையே அளவைகளுள் முதன்மையானது[131] இவ் அளவை நூற்புலமையில் சிறந்தவராகத் திகழ்ந்தவர் வள்ளுவர் என்பதை அறிஞர் நன்கு நிறுவியுள்ளனர்.[132] எனவே அந்நெறியில் செல்லும் குறள் உரைகாரரான பரிமேலழகருடைய உரையினின்றும் அவர்தம் அளவை இயல் புலமைக்குச் சான்றுகள் பல காண முடியும்.

## அளவையின் இலக்கணம்

அளவையைப் பற்றி இலக்கணம் கூறுமுகத்தான் 'உயிர் முதலியவற்றை அளத்தலாவது காட்சி முதலாகச் சொல்லப்பட்ட அளவைகளான் உயிர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வருகின்ற நல்வினை தீவினைக்குற்ற விளைவுகளையும், அவற்றான் அது நாற்கதியுட் பிறந்திறந்து வருதலையும், அவற்றையொழித்தற்குரிய யோகஞானங்களையும், எய்தும் வீட்டினையும் அளந்து உள்ளவாறறிதல்' (286) என்று பரிமேலழகர் கூறுவர்,

இதனால் நாற்கதியில் பிறக்கும் உயிர் இரு வினைகளினின்றும் நீங்கவும் யோகஞான நெறியில் சென்று வீடுபேறு எய்தவும் அளவை துணைபுரிகிறது என்பது பரிமேலழகர் கருத்தாகும்.

## மூவகை அளவை

'நல்லாற்றான் நாடி அருளாள்க' (242) என்னும் குறட்பாத் தொடருக்கு உரை எழுதும்போது பரிமேலழகர், 'அளவைகளானும் பொருந்துமாற்றானும் நன்றான நெறியிலே நின்று, நமக்குத் துணையாம் அறம் யாதென்றாராய்ந்து அருளுடையராக' என்று குறிப்பார் மேலும் அதன் விசேடவுரையில் அளவையின் வகை, பொறி, குறி, கருத்து என்பவற்றால் காட்சி, அனுமானம், ஆகமம் என அளவைகள் வகையை மூவகைப்படுத்துவார். மேலும் உவமை, அருத்தாபத்தி, இன்மை ஆகிய இவற்றையும் அளவையெனக் கருதுவார் கருத்தையும் எடுத்துரைப்பர். ஆயினும் பரிமேலழகர் பின்னதை முன்னதில் அடக்கி மூன்றெனவே கூறும் கொள்கையுடையர்.[133] இக்கருத்தைத் தருக்க சங்கிரகம், விருத்தி ரத்னாவலி ஆகிய நூல்களில் காணும் கருத்தோடு ஒப்பிட்டுக் காண்பர் இக்கால அறிஞர்கள்.[134]

மெய்யுணர்தலில் விபரீத ஐயங்கள் பற்றிக் குறிப்பிடுவார்.[135] விபரீதத்தை விளக்கும்போது பரிமேலழகர் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் உணர்வு என்று கூறி, 'மறுபிறப்பும், இருவினைப் பயன்களும் கடவுளும் இல்லையெனவும், மற்றும் இப்படிப்பட்டவைகளையும் சொல்லுகிற மயக்க நூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல், என்று மேலும் விளக்குகிறார். இதற்குச் சான்று கூறித் துணியும் நெறியில், குற்றியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் எனத் தம் அளவையியல் புலமையால் குறளின் உரைக்கு நுட்பம் சேர்ப்பது உளங்கொளத் தக்கது.

## அருத்தாபத்தி

கருதலளவையுள் அடங்கும் அருத்தாபத்தியைப் பல இடங்களில் பரிமேலழகர் சுட்டுவர்.[136]

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் குறட்பாவில், 'அஃதிலார்' என்றமையின் மக்களாய் என்பதும், மக்களாய்ப் பிறவாமையென்ற அருத்தாபத்தியான் விலங்காய்ப் பிறத்தல் என்பதும் பெற்றாம் என்று உரை எழுதுவர் பரிமேலழகர்.

'பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை' (811) என்னும் குறட்பாத் தொடருக்குப் பரிமேலழகர் 'காதல் மிகுதியாற் பருகுவார் போன்றாதாயினுந் தீக்குண முடையார்' என்று பொருளுரைத்து, 'நற்குணமில்லாரெனவே தீக்குணமுடையார்' என்று விளக்கி, அப்பொருள் அருத்தாபத்தியான் வந்தது என அளவை நுட்பம் மிளிர உரை எழுதுவர்.

'கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும், விரும்புங் கணவரால் விரும்பப்படாராயிற் தீவினையாட்டியர்' என்று கூறுவர் பரிமேலழகர். வள்ளுவர் குறளில் 'கெழீஇன்மை நல்வினையின்மை' என்றே கூறுவர்(1194). ஆனால் உரைகாரர் பரிமேலழகர் அளவையியற் புலமைக்கண் கொண்டு 'அருத்தாபத்தியால் தீவினையுடைமையாயிற்று' என்று கூறுவது உரைக்கு நுட்பத்தைச் சேர்க்கிறது எனலாம்.

### அனுமான அளவை

காட்சி அளவைக்கு எய்தாத பண்புகளை அனுமான அளவையால் அறியலாம் என்பது பரிமேலழகர் கருத்து.[137] இவ்வாறே வேறு சில குறட்பாக்களின் உரைகளிலும் இவர் அனுமான அளவையைச் சுட்டுவது எண்ணுதற்குரியது.[138]

### உவம அளவை

மூன்று அளவை வகை பரிமேலழகருக்கு உடன்பாடு.[139] பிறர் வழிநின்று ஊன் தின்றவரது மனம் தீங்கு நினைத்தலைப் 'படைகொண்டார் நெஞ்சம்போல்' (253) என்னும் உவம அளவையாலும் நிறுவுவர்.

### ஆகமம், காட்சி, கருத்து அளவைகள்

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை (37)

என்னும் குறட்பாவில் 'என என்னும் எச்சத்தால் சொல் ஆகிய ஆகம அளவையும்,பொறுத்தானோடு ஊர்ந்தானிடை என்றதனால் காட்சி அளவையும்[140] பெற்றாம்' என்றும் விசேட உரை தருவர். இதனால் குறளின் பொருளை அளவை இயல் கண்கொண்டு உரைகாணும் பரிமேலழகரின் நெறி நன்கு புலப்படுகின்றது.

அமைச்சர் முதலாயினாரைப் பிறப்பு, குணம் அறிவென்பனவற்றையும் செயலையும் காட்சி, கருத்து, ஆகமம் என்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளியலாம் என்பர்.[141]

மேலும் இக்குறிப்புகளின் வாயிலாக அவர் தரும் அளவை இலக்கணமும், அளவையின் பயனும்,அதன் வகைகளும், உரை விளக்கத்திற்கு அளவை நூலறிவைப் பயன்படுத்தும் திறனும், பரிமேலழகருக்கு மூவகை அளவையே உடன்பாடென்பதும், உவமை போன்ற பிற அளவைகளை உரையில் கையாள்வது பிறர் மதம் மேற்கொளல் என்னும் கொள்கையின்பாற்பட்டது எனவும் அறிகிறோம். அளவைகள் அமைச்சர் முதலியோரை அறிந்துகொள்ளப் பயன்படும் கருவி என்பதையும் அவர் உணர்த்துவது ஈண்டு உளங்கொளத்தக்கது.

### மருத்துவ இயல்

மருந்து என்னும் அதிகாரத்தில் வள்ளுவர், அச்சொல்லை மிகப் பரந்த பொருளிலேயே கையாண்டுள்ளார் மருந்து என்னும் சொல் மருந்துப் பொருளையும், நோய் தணிக்கும் முறையையும், நோய் வராமற் காக்கும் முறையையும் குறிக்கும்.[142] பரிமேலழகரும் இவ்வதிகாரப் பொருள் விளக்கங்களில் நூலாசிரியரை ஒட்டியே அச்சொல்லைப் பரந்த பொருளில் வழங்குவதை நன்கு விளக்குவர்.[143]

இவ் அதிகாரத்தின் தோற்றுவாயிலேயே மக்களுக்குப் பிணிகள் வரும் காரணத்தை ஆராய்ந்த பரிமேலழகர், பழவினையானும், உணவு, செயல்களது ஒவ்வாமையானும் பிணிகள் வரும் என்பர். 'நோய்கள் பழவினையான் வருவது' என்னும் கருத்தைப் பரிமேலழகர் தம் விளக்கவுரையில் கூறுவது எண்ணுதற்குரியது.

### ஆயுள் வேதம்

மிகினும் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று (941)

என்ற குறட்பாவுக்கு உரை எழுதிய பரிமேலழகர், ''உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கு ஒத்தவளவினன்றி அதனின் மிகுமாயினும், குறையுமாயினும் ஆயுள் வேதமுடையாரால் வாதம் முதலாக எண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத் துன்பம் செய்யும்'' என்பர். ஆயுள் வேதத்தில் கூறப்படும் கருத்துக்களை இங்கே அவர் சுட்டுவது உளங்கொளத்தக்கது. அவ்வாறே வாதப்பகுதி, பித்தப்பகுதி, ஐப்பகுதி என மூன்று பகுப்புகளையும் கூறி விளக்குகின்றார்.[14] இறுதியாக யாக்கை கட்கு இயல்பாய நோய் மூவகைத்து என்றும் அவை துன்பஞ் செய்தற்குக் காரணம் இருவகைத்து என்றும் பகுத்தும் தொகுத்தும் கூறுவர். உணவு, தொழில், ஆகியன அளவோடிருப்பதே உடல்நலத்திற்கேற்றது.

போதிய உணவை உட்கொள்ளாததினாலும் அல்லது உணவில் போதிய ஊட்டம் இன்மையாலும் மிகுதியான உணவினால் ஏற்படும் உடற் குறைகளையும், நோய்களையும் இக்காலத்தில் மருத்துவ அறிஞர் நன்கு ஆய்ந்து சீரான சத்துணவுகளை உண்ண வேண்டும் என்று கூறுவதும் இங்குப் பரிமேலழகர் கருத்தோடு ஒப்பிட்டு எண்ணத்தக்கது.

பரிமேலழகர் உரையில், உண்ட உணவு செரித்த தன்மையைச் சில குறிகளால் அறிந்து கொள்ளலாம் என்பர். அவையாவன: யாக்கை நொய்ம்மை, தேக்கின் தூய்மை, கரணங்கள் தொழிற்கு உரியவாதல்; பசிமிகுதல் என இவை முதலாயின (942). யாக்கை நொய்ம்மை என்பது உடம்பு இலேசாக இருத்தல்; தேக்கின் தூய்மை என்பது உணவு செரித்த நிலையில் ஏப்பம் தூய்மையாக இருத்தல்; கரணங்கள் தொழிற்கு உரியவாதல் என்பது உறுப்புக்கள் தொழிற்படுதல். இக்குறிப்புக்களால் பரிமேலழகரின் உடலியல் அறிவு உரை விளக்கத்திற்குத் துணையாகும் பான்மையினை அறிய இயலுகின்றது

நன்கு பசித்தபின் உண்ண வேண்டும் என்று குறிப்பிடும் பரிமேலழகர்' 'உண்டது அற்றாலும் அதன் பயனாக இரதம் அறாதலாகலான் அதுவும் அறல் வேண்டுமென்பார் 'மிகப் பசித்து' என்றார் என்று விளக்கம் தருவர் (944). மாறு கொள்ளாத உணவுகள் உண்ண வேண்டும் என்று கூறித் தம் உரையில் அவை பற்றி விளக்கமும் தருவர் ;

> ''மாறுகொள்ளாமையாவது உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள் ளாமையும், சுவை வீரியங்களாற்றம்முள் மாறுகொள் ளாமையுமாம். அவையான முறையே வாத பித்த ஐகளானாய பகுதிக்கு அடாதவற்றைச் செய்வனவாக லும், பெரும்பொழுது, சிறுபொழுது என்னுங் காலவேறு பாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்காகாமையும், தேனு நெய்யுந் தம்முளளவொத்து நஞ்சாதல் போல் வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்ட வாற்றால் துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின்''

என்பது அவர் தரும் விளக்கவுரை.

இவ் உரையில் வாதப்பகுதி, பித்தப்பகுதி, சிலேத்துமப் பகுதி (ஐ) ஆகியவற்றிற்குப் பொருந்தாத உணவுகள், ஒரு பருவத்திற்குரிய உணவு இன்னொரு பருவத்திற்கு ஆகாமை, தேனும் நெய்யும் தம்முள் அளவொத்து நஞ்சாகும் நிலை முதலானவற்றைக் குறிப்பிடுதல் குறிப்பிடத்தக்கது.

மருத்துவன் நோய் இன்னது என்பதனையும் தோன்றிய காரணத்தையும், அது தீர்க்கும் வழிமுறைகளையும் அறிந்து பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறைமையினின்றும் தப்பாது மருந்து தரல் வேண்டும் (948) என்பர். நோய் தோன்றுதற்குக் காரணம் உணவு - செயல் என்றும், இவற்றை ஆயுள் வேதமுடையார் 'நிதானம்' என்று கூறுவர் என்றும் மருத்துவ நூலினின்றும் மேற்கோள் காட்டுவர்.

இவர் காலத்தில் நோயைத் தீர்த்தற்குப் பயன்பட்ட முறை களையும் இவருடைய உரையால் அறியமுடிகிறது. உதிரங் களைதல், அறுத்தல், சுடுதல் முதலான மருத்துவ முறைகளை யும் (948) சுட்டுவர்.

நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், மருத்துவன் சொற்படி சிகிச்சை செய்வோர், மருந்து ஆகிய நான்கும் மருந்தினுடைய கூறுகள் என்றார் வள்ளுவர்.

> உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று
> அப்பானாற் கூற்றே மருந்து (950)

என்பது குறட்பா. இதற்குப் பரிமேலழகர் எழுதிய உரை விளக்கத்தில் இவர் அறிந்திருந்த மருத்துவப் புலமை நன்கு புலனாகிறது. உற்றவன் வகை நான்கு, தீர்ப்பான் வகை நான்கு, மருந்தின் வகை நான்கு, இயற்றுவான் (உழைச் செல்லான்) வகை நான்கு என இந்நான்கு கூறுகளை மேலும் பரிமேலழகர் பகுத்து ஆராய்வார்.

**உற்றவன் வகை நான்கு**

1. பொருளுடைமை
2. மருத்துவன்வழி நிற்றல்
3. நோய்நிலையுணர்த்தல் வன்மை
4. மருந்துத் துன்பம் பொறுத்தல்

நோய் தீர்த்தற்குப் பொருள் வேண்டிய இன்றியமையா நிலையினை முதற்கண் சுட்டுவர். பொருளுடைமை (இருவருக்கும்) நோயாளிக்கும், மருத்துவருக்கும், மனநிறைவைத் தரும். மருத்துவன்வழி நிற்காதவரும், தமக்கு வந்த நோயின் அறிகுறிகளைத் தெளிவாக உணர்த்தாதவரும் ஆகிய நோயாளிகளால் மருத்துவருக்குத் துன்பமே. நோய்த்துன்பம், மருந்துத் துன்பம் பொறாது மருத்துவ இல்லத்தை விட்டுச் செல்லும் நோயாளிகளும் உளர் இவற்றையெல்லாம் மனத்துள் கொண்டு பரிமேலழகர் வகுத்துக் கூறிய இந்நான்கும் இன்றும் எம்மருத்துவ முறைக்கும் ஏற்றனவே எனலாம்.

**தீர்ப்பான் வகை நான்கு**

1. நோய்கண்டு அஞ்சாமை
2. ஆசிரியனை வழிபட்டு ஓதிய கல்வியும் நுண்ணறிவுமுடைமை
3. பலகாலும் தீர்த்து வருதல்
4. மன, மொழி, மெய்கள் தூயனாதல்

இவற்றுள் முதல் குறிப்பு, மருத்துவனுக்கு வேண்டிய மனத் திண்மையைச் சுட்டும். மருத்துவனின் நுண்ணறிவும் அவர்தம் ஆசிரிய வழிபாடும் ஒருங்கிணைந்து செல்வன என்பது பரிமேலழகரின் கருத்து. பலகாலும் நோய்தீர்த்த பட்டறிவையும், மருத்துவருக்கு மனமொழிகள் தூய்மையாக இருக்க வேண்டிய உயர்ந்த உளநிலையையும் இறுதியாகக் குறிக்கின்றார்.

நோயாளியின் உடல்நிலையை நன்கு ஆராயாது பொரு ளையே குறிக்கோளாகக் கொண்டு விளங்கும் மருத்துவராக இருத்தல் கூடாது என்பதனையே 'மனமொழிதூயனாதல்' என்ற பெயரால் சுட்டுகிறார் எனலாம்.

இன்றைய அறிஞர் உலகம் மன மொழியில் தூய்மையற்ற முறையில் ஒழுகும் மருத்துவர்களைக் கண்டிப்பதைக் காணும் போது பரிமேலழகர் காட்டிய தூய்மை நெறியின் இன்றியமை யாமையை நன்கு உணரலாம்.

மருந்தின் வகை நான்கு

1. பல பிணிகட்கும் ஏற்றல்
2. சுவை வீரியம் விளைவாற்றல்களால் மேம்படுதல்
3. எளிதின் எய்தப்படுதல்
4. பகுதியொடு பொருந்துதல்

முதல் மூன்று குறிப்புகளால் மருந்து பல பிணிகளுக்கும் ஏற்றதாகவும், சுவை, சத்து, விளைவுடையதாகவும், எளிதில் கிடைப்பதாகவும் இருத்தல் வேண்டும் என்பது பரிமேலழ கருடைய கருத்துக்களாகத் தெரியவருகின்றன.

பகுதியொடு பொருந்துதல் என்பது மருந்து உடலுக்கு ஏற்றதாக உள்ளதா என்பதை அறிதல். இக்காலத்திலும் பென்சிலின் போன்ற மருந்துகள் சிலருக்கு ஏலாமை இங்கு நினைவுகூர்தற்குரியது. ஒரு நோயாளிக்குப் பலனளிக்கும் மருந்து அதே நோய் பெற்ற இன்னொருவருக்குப் பலனளிப்ப தில்லை என இன்றும் மருத்துவர் கூறுவர்.[145] இந்நுட் பத்தைப் பரிமேலழகரின் உரையாலும் உணர முடிகிறது.

இயற்றுவான் வகை நான்கு

1. ஆதுரன்மாட்டு அன்புடைமை
2. மனமொழி மெய்கள் தூயவாதல்
3 சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை
4. அறிவுடைமை

மருத்துவன் சொற்படி நோயாளிக்கு மருந்து தரும் உதவி யாளரை இங்குக் குறிப்பிடுகின்றார் பரிமேலழகர். அன்புடை மையும், தூய தொண்டுள்ளமும் இன்று மருத்துவப் பணியா ளருக்கு வலியுறுத்தப்படுவது நினைவு கூரத்தக்கது.[146] மருத் துவர் இல்லாத நிலையில் அவர் சொல்லிச் சென்ற முறையைப்

பின்பற்றும் திறனும், மருத்துவர் இல்லாச்சூழலில் தான் எங்ஙனம் பணியாற்ற வேண்டும் என்னும் அறிவுடைமையும் இப்பணியாளர்க்குப் பெரிதும் தேவை வள்ளுவரின் குறள் மொழிச் சிந்தனையின் விளக்கமாக மருந்தின் நான்கு கூறு களைப் பரிமேலழகர் கூறியிருப்பது அவர்தம் மருத்துவப் புலமைக்குச் சான்றாகும்.

## உளவியல்

உளவியல் உள்ளத்தின் செயல்களை அகமுகமாக ஆராய் வது. உள்ளச் செயல்கள் உணர்ச்சி, மனக்கிளர்ச்சி, புலன் காட்சி, கற்பனை முதலியவற்றை அடிப்படையாகக் கொண் டது. படைப்போன், உள்ளச் செயல்களை ஆயும் இயல் பினைக் கொண்டவனாக இருப்பது இயற்கையே. நுட்பமாகப் பிறர் உள்ளத்தைக் கண்டும் அது குறித்து உள்ளத்தில் நன்கு சிந்தித்தும் இலக்கியத்தைப் படைக்க அவனுக்கு உளவியல் பார்வை தேவைப்படுகிறது.

இலக்கியத்தை ஆயும் திறனாய்வாளனுக்கும் பொருள் களை விளக்கவும், படைப்பாளனின் உள்ளத்தை உணரவும் உளவியல் பெரிதும் பயன்படுகிறது என்பர் திறனாய்வறிஞர்.[117]

சிறப்பாகப் பொருட்பால் - குறிப்பறிதல், காமத்துப்பால் - குறிப்பறிதல் அதிகாரங்கள் உளவியல் நோக்கினவாம். மன் னரைச் சேர்ந்தொழுகுவார் அவன் உளநோக்கறிந்து செயற் படலைப் பொருட்பாலும், இன்ப நோக்கினைத் தலைவி அறிந்து அதற்கேற்ப ஒழுகுதலைக் காமத்துப்பாலும் உணர்த் தும் அறத்துப்பாலில் 'விருந்தோம்பலில்' முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்தினை உளவியல் பார்வையோடு கூறியுள்ளார். இங்ஙனம் உளவியல் பாங்கில் கூறிய கருத்துக் களுக்குப் பரிமேலழகரின் உரை மேலும் ஒளியூட்டுவதைப் பல இடங்களிலும் காணுகிறோம்.

குறிப்பறிதல் என்பதற்குப் பொருட்பாலுக்கு ஏற்றவண்ணம் 'அரசர் கருதியதனை அவர் கூறாமல் அறிதல்' என்று உரை எழுதியுள்ளார்.[118] கூறாததை, எங்ஙனம் அமைச்சர் அறிகிறார் என்பதை, வேந்தர் தம் நோக்கு வேறுபாட்டின் தன்மையை உணர்ந்து, செயலாற்றுவதாகப் பரிமேலழகர் சுட்டுவர். மேலும் அந்நோக்கு வேறுபாட்டினை வெறுத்த நோக்கமும் உவந்த நோக்கமும் ஆகப் பகுத்துக் காட்டுவார் (709).

உளவியலின் துணை கொண்டு பிறர் கருத்தை அறிதல் எளிது. அதற்குரிய கருவிகளாகப் பரிமேலழகர் காட்டுவன : இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பனவாம். இவற்றில் வெளிப்படையாகப் புலப்படாத இங்கிதத்தைக் குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில் என்றும், ஆகாரத்தைக், குறிப்பின்றி நிகழும் வேறுபாடு என்றும் குறிப்பர்.[149]

மக்களால் வருந்துன்பத்தைப் போக்குவதற்குக் 'குணம், இங்கிதம், ஆகாரம், செயல் ஆகியவற்றை அறிதல் வேண்டும் என்பர். இவை தீமை செய்வாரின் உளம் பற்றி நிகழ்வன ஆகும். பரிமேலழகர் உளவியல் புலமையோடு இங்கு உரை விளக்கம் எழுதியமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது

தனி மனிதன் அல்லது அரசன் வினையாற்றும்போது அதனைத் தொடக்கத்தில் பிறர் அறியாவண்ணம் தொடர்ந்து செய்து, முடிவின்கண் புலப்படுமாறு செய்ய வேண்டும் (663) என்ற கருத்து, மேலும் விளக்கம் பெறுமாறு,

> மறைத்துச் செய்வதாவது-அங்கம் ஐந்தும் எண்ணியவாறு பிறரறியாமலும், தான் அறிந்ததுவும் தன் இங்கிதம் வடிவு செயல் சொற்களான் அவர் உய்த்துணராமல் அடக்கிச் செய்தல்

என விரித்துரைப்பர்.

பரிமேலழகர் காமத்துப்பாலில் ஒவ்வொரு குறட்பாவின் கீழும் கூற்று விளக்கத்தைத் தந்திருப்பது, தலைவன் தலைவியரின் உள்ளத்தை ஓர்ந்து கூறிய உளவியல் குறிப்புரைகள் ஆகும்.

**உழவு**

வள்ளுவர் உழவுத் தொழிலுக்கு உரியோர் யார் எனச் சுட்டவில்லை. ஆனால் பரிமேலழகர் உழவு பெரும்பான்மை வேளாளர்க்கு[150] உரியது என்றும், சிறுபான்மை வணிகர்க்கு உரியது என்றும் கூறுவர். செய்விக்குங்கால் ஏனையோர்க்கு உரித்து என்றும் கூறுவர்[151]

உழவுத்தொழிலைச் செய்வோர் ஒரு பிரிவாகவும் அதனைச் செய்விப்போர் மற்றொரு பிரிவாகவும் தாம் வாழ்ந்த சமுதாயத்தில் இருந்த பிரிவைக் கொண்டு பரிமேலழகர் பகுத்துக் காட்டுவர். இங்கு இளம்பூரணர் கொண்ட கருத்தும் கருதத்தக்கது.[152]

உழவுத்தொழில் செய்யும் முறைகளாக வள்ளுவர் எரு இடுதலையும் (1037). பயிர் காப்பையும் (1038) கூறுவர், காத்தல் என்பதற்குப் பரிமேலழகர் தரும் விசேடவுரை (1038) உழவுத்தொழிலை அவர் உணர்ந்த பான்மையினை நன்கு சுட்டும்.

''காத்தல் — பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமல் காத்தல்'' என்பது அவர் தரும் உரைவிளக்கமாகும்.

நிலத்திற்குத் தானே சென்று உழுதொழில் செய்ய வேண்டும் என்பது 'பிறரை ஏவியிராது தானே சேறல் வேண்டும் என்பது போதரக் கிழவனென்றார்' என்று எழுதும் குறிப்புரையால் (1039) புலனாகிறது.

அரசு வருவாயில் உழவையும் ஒரு பகுதியாகப் பரிமேலழகர் குறிப்பது (512) இங்கு எண்ணத்தக்கது.

உழவுத்தொழிலால் வறுமை நீக்கப்படும் என்ற கருத்தை 'உழவு' அதிகாரத்திலேயே 'நல்குரவின் தோற்றுவாயாகக் கூறுவதும் உளங்கொளத்தக்கது.

இதனால் உழவுத்தொழில் செய்வோர் இருவகையர் என்பதும், உழவில் காத்தல் தொழிலை விலங்கு கொண்டு விளக்குவதும், அரசு வருவாய்க்கு உரிய இத்தொழில் வறுமையைப் போக்கும் சிறப்புடைத்து என்பதும் பரிமேலழகரின் கருத்துக்களாக அவர்தம் உரையிலிருந்து அறிகிறோம். மேலும் அக்கால உழவர் சமுதாயம், அரசியல், வருவாய்க்காக உழவினை நம்பிய நிலை, சமுதாயத்தில் வறுமையைப் போக்குதற்குரிய தலையாய தொழிற்சிறப்பு முதலாயின பற்றிய பரிமேலழகரின் கருத்து வெளிப்படுகின்றது.

இசை

வள்ளுவர் இசை, கூத்துக்கலை தொடர்பான செய்திகளை ஆறு குறட்பாக்களில் கூறுவர்.[168] பரிமேலழகரின் இசை பற்றிய அறிவு, குறள் விளக்கத்திற்குப் பயன்படுவது 573ஆம் குறட்பாவில் மட்டுமே ஆகும்.

இக்குறளுரையில்,

'' பண்கள் : பாலையாழ் முதலிய நூற்று மூன்று ;

பாடற்றொழில் : யாழின்கண் வார்தல் முதலிய எட்டும், பண்ணல் முதலிய எட்டும் மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னும் ஐந்தும் பெருவண்ணம், இடை வண்ணம், வனப்புவண்ணம் முத லிய வண்ணங்கள் எழுபத்தாறு மாம் ''

என்று இசை பற்றிய கருத்துக்களைக் கூறுவர். இக்கருத்துக் களால் பண், வண்ணம் ஆகியவற்றின் தொழிலையும் தெளி வாக உணர முடிகிறது.

இசை பற்றிப் பரிமேலழகர் ஒரே குறட்பாவில் உரைவிளக் கம் கூறியிருப்பினும், பண், வண்ணம் பற்றிய வரையறுத்த எண்ணிக்கையை உணர்த்தும் நுட்பம் குறிப்பிடத்தக்கது.

## குறிப்புகள்

1. மாணிக்கம், டாக்டர் வ. சுப., 'உரைநெறிகள்': தமிழியல் ஓர் அகநோக்கு - டாக்டர் தா. ஏ. ஞான மூர்த்தி மணிவிழா மலர், ப. 24
2. திருவள்ளுவமாலை, 29.
3. 'இங்ஙனம் உரையாசிரியர் எடுத்துக்காட்டும் மேற் கோள் பாடல்களால் பல நன்மைகள் விளைகின்றன. பழைய நூல்களைப் பதிப்பிக்கும்போது இப்பாடல்கள் பெரிதும் துணைபுரிகின்றன. உரையைக் கொண்டு மூலத்தையும் மூலத்தைக் கொண்டு உரையையும் பல சமயங்களில் அறிந்துகொண்டு செம்மையாகப் பதிப் பிக்க இவை துணைபுரிகின்றன' என்பர் டாக்டர் உ. வே சா.

   — சாமிநாதையர், உ. வே , சங்கத்தமிழும் பிற் காலத் தமிழும், ப. 174.
4. தொல்,. பொருள்,. மரபியல் 650, யாப்பருங்கலப் பாயிர மேற்கோளும் இதனைக் கூறும்
5. தாமோதரன், டாக்டர் அ, திருக்குறள் மேற்கோள் விளக்கம், ப. 20.
6. எடுத்தாண்ட மேற்கோள்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப இம்முறை அமைந்துள்ளது.
7. குறள் 39, 64, 72, 100, 110, 207, 231, 234, 384, 395, 399, 546, 612, 773, (இருமுறை), 785, 893, 925. 948, 970, 989, 1029, 1034, 1090, 1165, 1313, அறத்துப்பால் உரைப்பாயிரம், அறன் வலியுறுத்தல் தோற்றுவாய் அரசியல் தோற்றுவாய்.
8. புறநானூறு, 10.
9. புறநானூறு, 188.
10. புறநானூறு, 380.
11. குறள் 14?, 157, 187. 205, 293, 455, 829. 929, 1 4 11?2, 1221, 1293 1301. பண்புடைமை தோற்றுவாய், பசப்புறு பருவரல் தோற்றுவாய் நிறையழிதல் தோற்றுவாய்.
12. கலித்தொகை, நெய்தல் 16,
13. கலித்தொகை, பாலை 3.

14. குறள் 144, 167, 187, 205, 829, 929, 1301.
15. குறள் 1109, 1120, 1461.
16. அகநானூறு, 12.
17. குறள் 401. 580:
18. நற்றிணை, 3
19. நற்றிணை, 355.
20. குறள் 1250, 1255
21. குறுந்தொகை, கடவுள் வாழ்த்து.
22. குறள் 120; 1032
23. பட்டினப்பாலை, 209 - 210.
24. குறள் 17, 23.
25: பரிபாடல், 20
26. நெடுநல்வாடை, 184 - 185.
27. குறள் 432.
28. பதிற்றுப்பத்து, 22.
29. குறள் 841.
30. பொருநராற்றுப்படை, 77.
31 குறள் 275, 276, 320, 373, 384, 407, 437, 450, 624, 698, 731, 739, 771, 898, 905, 1030, 1182.
32. சீவக சிந்தாமணி, 2261.
33. Gnanamurthy, Dr. T. E., *A Critical Study of Civaka Cintamani*, P. 151.
34. வீராசாமி, டாக்டர் தா. வே., வெற்றியின் இருமுகம், ப. 99.
35 குறள் 9, 159, 547, 743, 1034, 1235, 1255, அன்புடைமை தோற்றுவாய்.
36. சிலப். கொலை. 71 - 73.
37. சிலப். அடை. 208 - 216.
38. குறள் 543, 1043.
39. மணிமேகலை, 22: 208 - 209.
40. மணிமேகலை, 11: 76.
41. குறள் 773.
42. கம்ப. யுத்த. முதற்போர் 255.
43. வளையாபதி, 49.

45, நாலடி 197.
46. நாலடி அறன் வலி, 6·
44. குறள் 7, 87, 88, 96, 157. 200, 224, 270, 272, 305. 330, 391, 401, 425, 593, 615, 787, 797, 895, 971, 1069, 1070.
47. குறள் 77, 121. 548, 536,
48. நான்மணிக்கடிகை, 15.
49. நான்மணிக்கடிகை, 82.
50 குறள் 3, 102.
51. பழமொழி, 3.
52. பழமொழி, 102,
53. குறள் 1.
54. திரிகடுகம், 1,
55. குறள் 349, 370, இறைமாட்சி அதி. தோற்றுவாய்.
56. திருவாய்மொழி. 78 : 6.
57. திருவாய்மொழி. 34 : 8.
58. குறள் 277.
59, திருக்கோவையார், 322.
60. குறள் 576.
61. முத்தொள்ளாயிரம், 39,
62. குறள் 392.
63 குறள் 118, 384, 432, 565, 76', 764 766, 771, 772, 773, 774, 960.
64. புறப்பொருள் வெண்பாமாலை, வாகை. 22.
65. புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சி. 12.
66. புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி. 3.
67. புறப்பொருள் வெண்பாமாலை, தும்பை. 16.
68. குறள், 3, 26, 377, 402, 899, 900, 1043.
69. தொல். சொல் 241.
70. தொல். சொல். 33.
71. குறள் 402, 960.
72. குறள் 1099.
73. இறையனார் அகப்பொருள், நூ. 7, உரைமேற்கோள்.

74. குறள் 62, 111, 291, 392, 732, 1058: 12 9 (பாடல்கள் தனியே தரப்பட்டுள்ளன).
75. பெருந்தொகை 1513
76. குறள் 1, 38, 139. 141, 242, 359. 360, 361, 370, 381, 434, 467, 501, 525, 550, 631 633, 636, 638, 648, 687, 732 762, 757, 890, 921, 924. 933' 961, 993, 1101. 1318, 1330,

அறத்துப்பால் உரைப்பாயிரம், மெய்யுணர்தல் தோற்றுவாய், குற்றம்கடிதல் தோற்றுவாய். செங்கோன்மை தோற்றுவாய், களவியல் தோற்று வாய், காமத்துப்பால் முடிவுரை.
77. குறள் 141, பெண்டிரை. [ஸ்வகீயா, பரகீய, ஸாதாரணா என்று மூன்று வகையாகப் பிரித்தலையும், பிறர்மனை நயத்தலைப் பற்றிப் பாரதாரிக பிரகரணத்தில் கூறியிருத் தலையும் வாத்ஸ்யாயனத்தில் காணலாம்

வை. மு. கோ. குறிப்புரை. ப. 100.
78. மெய்யுணர்தல், தோற்றுவாய்.
78.அ. Kane, P. V., *History of Dharma Sastra*, Vol. II, Part I. pp. 148-149.
79. Kangle R. P., *The Kautiliya Artha Sastra* (Part II) (Translation) pp. 20-22
80 மௌலம் - மூலபலம் - வை. மு. கோ. குறிப்புரை, குறள், 732
81. குறள் 732.
82. குறள் 1330,
83. தொல், பொருள் 273.
84 புறம். 183
85 குறள் 400 உரை.
86 காமத்துப்பால், தோற்றுவாய்.
87. அரிஸ்டாட்டில், அரசியல் (மொ. பெ. ஸி. எஸ். சுப்பிர மணியம்), ப. 5.
88. Altekar, A. S., *State and Government in Ancient India*, P. 1.
89. சுப்பிரமணியன், டாக்டர் சோ., (வள்ளுவர் கண்ட அரசியலும் மனுவும்), வள்ளுவர் வகுத்த அரசியல் ப. 94.

90. Ghoshal, U. N., *A History of Indian Political Ideas*, P 27.

91. திருவாய்மொழி 4 : 4 : 8.

92. அரசியல் — முன்னுரை..

93. புறநானூறு, 186.

94. மணிமேகலை, துயிலெழுப்பிய காதை, 11—12.

95. பெருங்கதை, இலாவாண காண்டம், அவலந்தீர்ந்தது, 17—18.

96. குறள் 388, கல்வி, தோற்றுவாய்.

97. கல்வி, தோற்றுவாய்.

98. அங்கவியல், தோற்றுவாய்.

99. சொல்வன்மை, தோற்றுவாய்.

100. பெரியாரைத் துணைக்கோடல், தோற்றுவாய்,

101. 'வள்ளுவர், பெரியார் பணியைத் தெளிவுபடக் கூறாத போது, பரிமேலழகர் விளக்கம் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. ஆனால் இயற்கையைக்கட்டுப்படுத்தல்; சாந்தி செய்தல் ஆகிய மந்திர தந்திரங்களில் வள்ளுவர்க்கு நம்பிக்கை உண்டா என்பது ஐயமே. குறளில் இவற்றுக்கு இடம் இல்லை. பரிமேலழகர் பெரியார் என்பார் புரோகிதரும் எனக் கொண்டதால் இத்தகைய விளக்கங்களைச் சொல்ல நேர்ந்தது' என்றும், இங்குப் பரிமேலழகர் அர்த்த சாஸ்திர மரபினைப் பின்பற்றி இவற்றை விளக்குகிறார் என்றும் கூறுவர். — முருகரத்தனம், டாக்டர் தி., குறள் கூறும் இறைமாட்சி, ப 94—95.

102. ஒற்றாடல், தோற்றுவாய்.

103. தூது, தோற்றுவாய்.

104. Like Ambassadors of modern day equipped with full powers, See Oppenhieum; P. 780.

105. Like envoys with special powers, Ministers Pleni-Potentiary - *Satow's Guide to Diplomative Practice*, P. 162—170.

106. Olai, Like de, Affairs
104 to 106 குறிப்புக்கள் — *The Year Book of the Legal Studies*, Vol. 12—13, 76—77. '*Diplomacy of the Ancient Tamils*' P. 60-61 - Prof. A. Palaniswamy.

107. பழந்தமிழ் இலக்கியங்களில் பொருளியல் பற்றி ஆய்ந்த நூல்கள், கட்டுரைகளுள் சில :

1. நடராஜன், டாக்டர் பா., வள்ளுவர் தந்த பொருளியல்.
2. அருணாசலம், அ., வள்ளுவர் வகுத்த பொருள் வாழ்வு.
3. முருகரத்தனம், டாக்டர் தி., குறள் கண்ட பொருள்வாழ்வு.
4. மீனாட்சிசுந்தரன், தெ. பொ.. 'பொருள்நூற் கருத்துக்கள்' (கட்டுரை) திருக்குறள் கனிகள்.

108. Marshell, Alfred, *Principles of Economics*, P.1.

109. குறள் 751 - 753.

110. குறள் 754 — 756.

111. குறள் 757 — 760.

112 முருகரத்தனம், டாக்டர் தி., குறள் கண்ட பொருள் வாழ்வு, பக். 69.

113. 'உல்கு' : சுங்க வருவாய் என்பது பட்டினப்பாலையாலும், பாணாற்றுப்படையாலும் அறிய இயலும்,

'வைகல்தோறும் அசைவின்றி
உல்கு செயக் குறைபடாத'
- பட்டினப்பாலை 119 - 136
'உல்குடைப் பெருவழி' — பெரும்பாண். 81.

114. முருகரத்தனம், டாக்டர் தி., குறள் கண்ட பொருள் வாழ்வு, ப. 85.

115. கதிரேசன் செட்டியார், மு., பொருணூல் (மொ. பெ.) ப. 74

116. குறள், 385 உரை, 512 உரை.

117 " எல்லைக்கு ஏற்ப ஈதலாவது. ஒன்றான எல்லையை நான்கு கூறாக்கி, அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி, ஒன்றனை மேல் இடர் வந்துழி அது நீக்குதற் பொருட்டு வைப்பாக்கி, நின்ற ஒன்றனை ஈதல். பிறரும் 'வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்' (திரிகடுகம் 21) என்றார் "

—குறள் 477ஆம் உரை.

118. கடவுளுக்கு அடியென்று கூறப்பெறுவன திருவருளும் ஞானமுமாகிய பண்புகளே என்பர்.

— தண்டபாணி தேசிகர், ச., திருக்குறளில்

சமத்துவம் - சமுதாயச் சமத்துவம் (கட்டுரை), திருக்குறள் கருத்தரங்கு, ப. 7

119. கடவுள் வாழ்த்து அதிகாரத்தின் 1. 2, 4, 5, 7, 10-வது எண்ணுள்ள குறள் முதற் கடவுளது வாழ்த்தும், 3-வது எண்ணுள்ள குறள் அயனது வாழ்த்தும், 6, 8வது எண்ணுள்ள குறள் அரியினது வாழ்த்தும், 9வது எண்ணுள்ள குறள் அரனது வாழ்த்துமாம்
— வடிவேலு செட்டியார், கோ.. திருக்குறள், அறத்துப்பால் பக். 7.

120. 'கடையிலா அறிவு - சமணர் கொள்கையுமாம்'
மேலும் காண்க - *சீவக சிந்தாமணி*, 2817, உரை.

121. குறள் 307 உரை — வைசேடிகர் கணாதரதுநியாய மதத்தை அனுசரித்தவர்
- வடிவேலு செட்டியார், கோ, குறள் 307 சிறப்புரை.

122. குறள் 242.

123. குறள் 353ஆம் உரையிலும் ஒருவாற்றாற் பிறர் மதங் களைந்து தம்மத நிறுத்தல் எல்லா சமயங்கட்கும் இயல்பு என்று கூறுவதும் இவண் கருதத்தக்கது.

124. குறள் 361 உரை.

125. குறள் 242 உரை.

126. *Encyclopeadia Britannica*, Vol. 15, P. 687.

127. துறவற இயல், தோற்றுவாய்.

128 குறள் 26. உரை, குறள் 359 உரை

129. முருகவேள், ந ரா., *சிவஞான சித்தியார் தருக்க இயல் விளக்கம்*, ப. 7.

130. மகாதேவன், டாக்டர் டி எம் பி., சண்முகசுந்தரம் டாக்டர் வே, *தர்க்க விஞ்ஞான முறைகள்*, ப 10.

131. அளவை (பிரமாணம்) எனப்படுவது, காண்டல், கருதல், உரை, இன்மை, பொருட்பேறு, ஒப்புமை என ஆறு வகைப்படும் என்பர். ஒரு சிலர் இவற்றிற்கு மேலும் ஒழிபு, உண்மை, உலகுரை, இயல்பு என நான்கு அளவைகளைக் கொள்வர் மற்றும் சிலர் இப்பத்துக்கு மேலும் அளவைகள் உள எனக் கொள்வர். ஆயினும் இவைகள் யாவும் இம்மூன்றின் கண்ணேயே அடங்கும்.
*சிவஞான சித்தியார் சுபக்கம்*, 7.

இவை பற்றி மேலும் விளக்கமாக ' மணிமேகலை யிலும் காணலாம்.

— மணிமேகலை 27 : 9 - 13.

132. முருகவேள், ந. ரா , சிவஞான சித்தியார் தருக்க இயல் விளக்கம் ப. 7

133. குறள் 242, பரிமேலழகர் உரை.

134. குறள் 242, கோ. வடிவேலு செட்டியார் உரை, அறத் துப்பால், பக் 239 - 251.

135 குறள் 351, பரிமேலழகர் உரை.

136 குறள் 236, 242 256, 811, 851, 853 1194 1316.

137. குறள் 71.

138. குறள் 71 242, 316, 318, 1232 - கருதலளவையெனி னும் அனுமானமெனினும் ஒக்கும்.

139. குறள் 242 உரை.

140. காட்சியளவை பற்றிய குறிப்புகளைப் பின்வரும் குறட் பாக்களின் உரைகளாலும் அறியலாம்: 37, 71, 281, 316, 363, 503

141. தெரிந்துதெளிதல், தோற்றுவாய்.

142. 'இப்பொருள்பட இக்கால மருத்துவ நூலாரும் Medicine என்ற ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்துவதாகக் கூறுவர் '.

— காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமுதாயம் ப 105.

143. குறள் 950 உரை.

144. வாதம் : வாதம், பித்தம், ஐயம் என்னும் இம்மூன் றும் தமிழ் மருத்துவத்தில், முக்குற்றம் எனப் படும் வாயுவை ஆதாரமாகக் கொண்டு நெருப்பு, நீர் ஆகியவற்றுடன் சேர்ந்து இயங்கும் சக்தி வாதமாகும்... –

பித்தம் : உடம்பிற்குச் சூட்டினைத்தரும் உணவு செரிமானமடைவதற்கும், இரத்த உற்பத் திக்கும், உடம்பின் சதை மூலத்திற்கும் காரணமாக இருக்கிறது......

ஐயம் : ஐயம் என்பது நீர், சளி, சவ்வு, சளித்திர வம் இவைகளை உண்டாக்கும். மூட்டு களை வலுப்படுத்தும் .....

வாதம், பித்தம், ஐயம் எனும் இம்மூன்றும்

உடலில் $1 : \frac{1}{2} : \frac{1}{4}$ என்ற அளவில் இயங்கும் பொழுது உடல் நோயற்று இருக்கும். இவற்றில் அளவு மாறுபடும்போது உடல் நோயால் பாதிக்கப்படும்.

— க. வெங்கடேசன், மருத்துவ அறிவியல், (தமிழில் அறிவியல் கருத்துகள்), ப. 68.

145. அருணாசலம், டாக்டர் பி., 'எனது அனுபவத்திலே (கட்டுரை), **கல்கி, தீபாவளி மலர்** 1955

146. அமெரிக்க ஆசிரியர் டாக்டர் லாயிட் டக்லஸ் (LLOYD C DOUGLAS) 'மருத்துவமனையை நிலைக்களனாகக் கொண்டு தம் நூல்களில் மருத்துவரும் அங்குப் பணியாற்றுபவரும், நோயாளிகளும், நன்கு அன்போடு ஒத்துழைப்பதால் விளையும் நலன்களைச் சுட்டிச் செல்வர். மேலும் இந்நூல்கள் பற்றிய செய்தியினைச் செல்வி காமாட்சி சீனிவாசன் அவர்கள் எழுதிய '**குறள் கூறும் சமுதாயம்**' (ப. 110—111) நூலில் விரிவாகக் காணலாம்.

147. ரெனிவெல்லாக், ஆஸ்டின்வாரன், **இலக்கியக் கொள்கை** (மொ. பெ. குளோறியா சுந்தரமதி) இலக்கியமும் உள இயலும், ப. 104—125.

148. குறிப்பறிதல் (பொருள்), அதிகாரத் தோற்றுவாய்.

149. குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில் - முகம், கண் கை முதலிய உறுப்புக்களின் செய்கையால் குறிப்பாகத் தெரிவிப்பது

ஆகாரம் - அவரவருடைய குறிப்பில்லாமலே தானாகவே முகத்திலும் உடம்பிலும் தோன்றும் வேறுபாடு.

— குறள் 710, வை. மு கோ விளக்கம் குறிப்புரை:

150. வேளாளர் என்னும் சொல் வெள்ளாளர் என்னும் சொல்லின் திரிபே, வெள்ளத்தை ஆள்பவர் வேளாளர் என்பர். சிலர் வேள்வி என்னும் சொல்லினின்று இச்சொல் பிறந்தது என்பர்.

Pillai, K. K., *A Social History of the Tamils*, Part I. P. 283.

151 உழவு. அதிகாரத் தோற்றுவாய்.

152. தொல். பொருள், மரபு 73.

153. குறள் 66, 279, 332, 573, 1020, 1058.

# 3

# பரிமேலழகர் உரை இயல்புகளுள் பொதுநெறி

## பொது நெறி

பரிமேலழகரின் உரைப்போக்கிலிருந்து பொதுவாக அவர் சில வரையறைக்குட்பட்ட நெறிகளை மேற்கொண்டுள்ளதாக அறிய முடிகிறது. அவற்றைச் சான்றுகளோடு காண்போம்.

## அறத்துப்பால் உரைப்பாயிரம்

பரிமேலழகர் தம் உரைத்தொடக்கமாக அறத்துப்பால் உரைப்பாயிரம் கூறி, நூல்களால் கூறப்படும் அறம், பொருள், இன்பம் ஆகிய பொருட்பாகுபாடுகளை விளக்குகின்றார் இதனை 'இந்திரன் முதலிய இறையவர் பதங்கள் .. ..' என்று தொடங்கும் உரைப்பாயிரம் நன்கு விளக்கும்.

## இயல் விளக்கம்

ஒவ்வொரு பாலைப் பற்றியும் விளக்கவுரை தந்து, பின்னர் இயல்கள் குறித்து ஆராய்வார். சில இயல்களில் இத்துணை அதிகாரங்கள் இன்ன பொருள் பேசுவதாக வரையறுத்து உரைப்பார். சான்றாக,

> 'இனி இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் எடுத்துக் கொண்டார். அது தன் துணைக் காரணமாய அரசனீதி கூறவே அடங்கும். அதனை, அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூவகைப்படுத்து, மலர்தலையுலகிற்குயிரெனச் சிறந்த அரசனதியல்பு இருபத்தைந்து அதிகாரத்தான் கூறுவான் தொடங்கி முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்''[1]

என்னும் பகுதியைக் காணலாம்.

இவ்வியல் விளக்கத்திலிருந்து பெறப்படுவன :

1. பொருட்பாலின் சிறப்பும் இல்லறத்தின் இயைபும்
2. பொருளுள் அரசனீதி அடங்கும் முறை
3. பொருட்பாலின் மூவகை
4. மூவகையுள்ளும் முதல் இயலாகிய அரசியலுள் பேசப்படும் முதற்பொருள்
5. முதற்பொருளில் பேசப்படும் அதிகாரங்களின் எண்ணிக்கை வரையறை

ஆகியவையாம்

இவற்றால் இயல் விளக்கத்திலேயே குறள் கூறும் பொருட் சிறப்பு, வைப்புமுறைப் பாகுபாடு, ஒருபொருள் பற்றி உரைக்கும் அதிகாரங்களின் எண்ணிக்கை ஆகியவற்றைப் பற்றிச் சுருங்க உரைக்க வேண்டும் என்னும் பரிமேலழகரின் உரைக் கொள்கை புலனாகின்றது எனவே இயல் விளக்கத்தை அதிகாரப் பொருள் அடைவு உரைக்கும் ஒரு முன்னுரைச் செறிவாகப் பரிமேலழகர் கருதியிருக்கிறார்

இந்நெறியைப் பரிமேலழகர் எங்ஙனம் பின்பற்றியுள்ளார் என்பதைக் கீழ்க்காணும் அடைவு விளக்கம் கொண்டு அறியலாம்.

| வ, எண். | இயல் | விளக்கம் கூறியமை | அதிகார எண்ணிக்கை குறிப்பிடல் |
|---|---|---|---|
| | அறம் | | |
| 1. | பாயிரம் | த | த |
| 2. | இல்லறவியல் | த | த |
| 3 | துறவறவியல் | ச | த |
| | (அ) விரதம் | ச | த |
| | (ஆ) ஞானம் | ச | ச |
| 4. | ஊழ் | ச | ச |

| வ எண். | இயல் | விளக்கம் கூறியமை | அதிகார எண்ணிக்கை குறிப்பிடல் |
|---|---|---|---|
| | **பொருள்** | | |
| 1. | அரசியல் | ச | ச |
| 2. | அங்கவியல் | ச | ச |
| 3. | ஒழிபியல் | ச | ச |
| | **காமம்** | | |
| 1. | களவியல் | ச | ச |
| 2. | கற்பியல் | த | ச |

(ச : அமைந்துள்ள நிலை த : அமையா நிலை)

இதனைக் காணும்போது பரிமேலழகர் பெரும்பாலும் இயல் விளக்க உரைநெறியில் ஒரு வரையறை செய்து கொண்டாலும் பாயிரம், இல்லறவியல் இரண்டிற்கும் இம்முறையைப் பின்பற்ற வில்லை என்பதும், துறவற இயல் விளக்கத்தில் அதிகார எண்ணிக்கை வரையறை கூறவில்லை என்பதும் கருதத் தக்கன. ஆனால் பெரும்பான்மை இயல் விளக்கங்களில் இவ்விரு நெறிகளையும் பின்பற்றியுள்ளார் என்பது எண்ணு தற்குரியது.

## அதிகாரத் தோற்றுவாய்

பரிமேலழகர் குறளின் எல்லா அதிகாரங்களுக்கும் தோற்று வாய் (விளக்கவுரை) கூறியுள்ளார். இத்தோற்றுவாய் விளக் கங்களின் முதன்மை இயல்புகளாக,

1 அதிகாரத்தின் பொருளை விளக்குதல்

2 முன்பின் அதிகார இயைபு (அதிகார முறைமை)

ஆகிய இரண்டையும் குறிப்பிடலாம். மேலும் சில அதிகாரத் தோற்றுவாயில் தாம் கூறும் விளக்கத்திற்குச் சான்றாக மேற் கோள் செய்யுளையும் எடுத்துக்காட்டி விளக்குவது குறிப்பிடத் தக்கது.[2] சில அதிகாரத் தோற்றுவாய்களில் இலக்கண நுட்பம் காட்டி விள்க்குவர்.[3]

பின்வரும் விளக்க அடைவில் அவை அமைந்திருக்கும் பான்மையைக் காணலாம்:

# அதிகாரத் தோற்றுவாய் விளக்க அடைவு

| வ. எண். (1) | அதிகாரத்தின் பெயர் (2) | அதிகாரப் பொருள் விளக்கம் (3) | | | அதிகார முறைமை (4) | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | தலைப்புப் பொருளை விளக்குதல் (அ) | இலக்கிய மேற்கோள் காட்டல் (ஆ) | இலக்கண நுட்பம் (இ) | வைக்கப்பட்டது எனல் (அ) பின் | முன் | இறுதி | இதனானே விளங்குமீ எனல் (ஆ) | முன் உள்ள அதிகாரத்தில் இப்பொருள் அடங்காமை எனல் (இ) |
| 1. | கடவுள் வாழ்த்து | ச | த | த | த | த | த | த | த |
| 2. | வான் சிறப்பு | ச | த | த | த | த | த | ச | த |
| 3. | நீத்தார் பெருமை | ச | த | த | ச | த | த | த | த |
| 4. | அறன் வலியுறுத்தல் | ச | புறம். 31 | த | த | த | த | ச | த |
| 5 | இல்வாழ்க்கை | ச | த | த | ச | த | த | த | த |
| 6. | வாழ்க்கைத் துணைநலம் | ச | த | த | த | த | த | ச | த |
| 7. | புதல்வரைப் பெறுதல் | ச | த | த | த | த | த | த | த |
| 8. | அன்புடைமை | ச | சிலம்பு 16. 71—73 குறள் 757 | த | ச | த | த | த | த |
| 9. | விருந்தோம்பல் | ச | த | த | ச | த | த | த | த |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10. | இனியவை கூறல் | ச | த | த | ச | த | த | த | த |
| 11. | செய்ந்நன்றியறிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 12. | நடுவு நிலைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 13. | அடக்கமுடைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 14. | ஒழுக்கமுடைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 15. | பிறனில் விழையாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 16. | பொறையுடைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 17. | அழுக்காறாமை | | குறள் 35 | ச | ச | த | த | த | த |
| 18. | வெஃகாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 19. | புறங்கூறாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 20. | பயனில சொல்லாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 21. | தீவினையச்சம் | ச | த | த | ச | த | த | த | த |
| 22. | ஒப்புரவறிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 23 | ஈகை | ச | த | த | ச | த | த | த | த |
| 24. | புகழ் | ச | த | த | ச | த | த | த | த |
| 25. | அருளுடைமை | ச | த | த | த | ச | த | த | த |
| 26. | புலால் மறுத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 27. | தவம் | ச | த | த | ச | த | த | த | த |
| 28. | கூடாவொழுக்கம் | ச | த | த | ச | த | த | த | த |
| 29. | கள்ளாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 30. | வாய்மை | ச | த | த | ச | த | த | த | த |
| 31. | வெகுளாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 32. | இன்னா செய்யாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 33. | கொல்லாமை | ச | த | த | த | த | ச | த | த |
| 34. | நிலையாமை | ச | த | த | த | ச | த | த | த |

ச : அமைந்துள்ள நிலை    த : அமையா நிலை

| (1) | (2) | (3) (அ) | (3) (ஆ) | (3) (இ) | (4) (அ) பின் | முன் | இறுதி | (4) (ஆ) | (4) (இ) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 35. | துறவு | ச | த | த | த | த | த | ச | த |
| 36. | மெய்யுணர்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 37. | அவாவறுத்தல் | ச | த | த | த | த | த | ச | த |
| 38 | ஊழ் | ச | த | ச | த | த | ச | த | த |
| 39 | இறைமாட்சி | ச | திருவாய்மொழி (34ம் திருப் பதிகம் 8) | த | த | த | த | த | த |
| 40. | கல்வி | ச | த | த | ச | த | த | த | த |
| 41 | கல்லாமை | ச | த | த | ச | த | த | த | ச |
| 42. | கேள்வி | ச | த | த | ச | த | த | த | த |
| 43. | அறிவு | ச | த | த | த | த | த | ச | த |
| 44. | குற்றங்கடிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 45. | பெரியாரைத் துணைக்கோடல் | ச | த | த | த | த | த | ச | த |
| 46. | சிற்றினஞ்சேராமை | ச | புறம். 29 | த | ச | த | த | த | த |
| 47. | தெரிந்து செயல்வகை | ச | த | த | ச | த | த | த | த |
| 48. | வலியறிதல் | ச | த | த | த | த | த | ச | த |
| 49. | காலமறிதல் | ச | த | த | த | த | த | ச | த |
| 50. | இடனறிதல் | ச | த | த | த | த | த | ச | த |
| 51. | தெரிந்துதெளிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 52. | தெரிந்து வினையாடல் | ச | த | த | த | த | த | ச | த |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 53 | சுற்றந்தழால் | ச | த | த | ச | த | த | த | த |
| 54. | பொச்சாவாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 55. | செங்கோன்மை | ச | த | த | ச | த | த | த | த |
| 56. | கொடுங்கோன்மை | ச | த | ச | ச | ந | த | த | த |
| 57. | வெருவந்த செய்யாமை | ச | த | த | ச | த | த | த | த |
| 58, | கண்ணோட்டம் | ச | த | த | ச | த | த | த | த |
| 59. | ஒற்றாடல் | ச | த | த | த | ச | த | த | த |
| 60. | ஊக்கமுடைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 61: | ம்டியின்மை | ச | த | த | ச | த | த | த | த |
| 62. | ஆள்வினையுடைமை | ச | த | த | ச | த | த | த | த |
| 63. | இடுக்கணழியாமை | ச | த | த | த | த | த | ச | த |
| 64. | அமைச்சு | ச | த | த | த | ச | த | த | த |
| 65. | சொல்வன்மை | ச | ச | த | ச | த | த | த | த |
| 66. | வினைத்தூய்மை | ச | த | த | ச | த | த | த | த |
| 67. | வினைத்திட்பம் | ச | த | த | த | த | த | ச | த |
| 68. | வினைசெயல்வகை | ச | த | த | த | த | ந | ச | த |
| 69. | தூது | ச | த | த | ச | த | த | த | த |
| 70. | மன்னரைச் சேர்ந்தொழுகல் | ச | குறள் 681 | த | ச | த | த | த | த |
| 71 | குறிப்பறிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 72 | அவையறிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 73. | அவையஞ்சாமை | ச | த | த | த | த | த | ச | த |
| 74. | நாடு | ச | த | த | த | த | த | த | த |
| 75 | அரண் | ச | த | த | த | த | த | த | த |
| 76. | பொருள் செயல்வகை | ச | த | த | த | த | த | த | த |

| (1) | (2) | (3) (அ) | (3) (ஆ) | (3) (இ) | (4) (அ) பின் | (4) (அ) முன் | (4) (அ) இறுதி | (4) (ஆ) | (4) (இ) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 77. | படைமாட்சி | ச | த | த | த | த | த | த | த |
| 78. | படைச்செருக்கு | ச | த | த | த | த | த | ச | த |
| 79. | நட்பு | ச | த | த | த | ச | த | ச | த |
| 80. | நட்பாராய்தல் | ச | த | த | த | த | த | ச | த |
| 81. | பழைமை | ச | த | ச | ச | த | த | த | த |
| 82. | தீ நட்பு | ச | த | த | ச | த | த | ச | த |
| 83 | கூடா நட்பு | ச | த | த | த | த | த | த | த |
| 84 | பேதைமை | ச | த | த | த | ச | த | த | த |
| 85. | புல்லறிவாண்மை | ச | த | த | த | த | த | த | த |
| 86. | இகல் | ச | த | த | த | ச | த | த | த |
| 87. | பகைமாட்சி | ச | த | த | ச | த | த | த | த |
| 88. | பகைத்திறன் தெரிதல் | ச | த | ச | ச | த | த | த | த |
| 89. | உட்பகை | ச | த | த | ச | த | த | த் | த |
| 90, | பெரியாரைப் பிழையாமை | ச | த | ச | த | த | ச | ச | த |
| 91. | பெண்வழிச் சேறல் | ச | த | த | த | ச | த | த | த |
| 92. | வரைவின் மகளிர் | ச | த | த | ச | த | த | த | த |
| 93. | கள்ளுண்ணாமை | ச | த | த | த | த | த | த | த |
| 94. | சூது | ச | த | த | த | ச | த | த | த |
| 95, | மருந்து | ச | த | த | த | த | த | த | த |
| 96. | குடிமை | ச | த | த | த | ச | த | த | த |
| 97. | மானம் | ச | த | த | த | ச | த | த | த |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 98. | பெருமை | ச | த | த | ச | த | த | த | த |
| 99. | சான்றாண்மை | ச | த | த | ச | த | த | த | த |
| 100. | பண்புடைமை | ச | ச | த | த | த | த | ச | த |
| 101. | நன்றியில் செல்வம் | ச | த | த | த | த | த | த | த |
| 102. | நாணுடைமை | ச | த | த | த | த | த | ச | த |
| 103. | குடிசெயல்வகை | ச | த | த | ச | த | த | த | த |
| 104. | உழவு | ச | த | த | ச | த | த | த | த |
| 105 | நல்குரவு | ச | த | த | த | த | த | த | த |
| 106. | இரவு | ச | த | த | த | த | த | ச | த |
| 107, | இரவச்சம் | ச | த | த | த | த | த | ச | த |
| 108. | கயமை | ச | த | த | ச | த | த | த | த |
| 109. | தகையணங்குறுத்தல் | ச | த | த | த | ச | த | த | த |
| 110. | குறிப்பறிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 111. | புணர்ச்சி மகிழ்தல் | ச | த | த | த | த | த | ச | த |
| 112, | நலம் புனைந்துரைத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 113. | காதற் சிறப்புரைத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 114 | நாணுத்துறவுரைத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 115. | அலரறிவுறுத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 116. | பிரிவாற்றாமை | ச | த | த | த | த | த | த | த |
| 117. | படர்மெலிந்திரங்கல் | ச | த | த | த | த | த | ச | த |
| 118. | கண் விதுப்பழிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 119. | பசப்புறு பருவரல் | ச | கலி. குறி. 4 | த | ச | த | த | த | த |
| 120. | தனிப்படர் மிகுதி | ச | த | ச | த | த | த | த | த |
| 121. | நினைந்தவர் புலம்பல் | ச | த | ச | ச | த | த | த | த |
| 122. | கனவு நிலையுரைத்தல் | ச | த | த | ச | த | த | த | த |

| (1) | (2) | (3) (அ) | (3) (ஆ) | (3) (இ) | (4) (அ) பின் | (4) (அ) முன் | (4) (அ) இறுதி | (4) (ஆ) | (4) (இ) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 123. | பொழுது கண்டிரங்கல் | ச | பழமொழி 3 | த | ச | த | த | த | த |
| 124. | உறுப்பு நலனழிதல் | ச | த | த | ச | த | த | த | த |
| 125. | நெஞ்சொடு கிளத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 126. | நிறையழிதல் | ச | கலி. நெய். 15 | த | ச | த | த | த | த |
| 127. | அவர்வயின் விதும்பல் | ச | த | ச | ச | த | த | த | த |
| 128. | குறிப்பறிவுறுத்தல் | ச | த | த | ச | த | த | த | த |
| 129. | புணர்ச்சி விதும்பல் | ச | த | த | ச | த | த | த | த |
| 130. | நெஞ்சொடு புலத்தல் | ச | த | த | த | த | த | ச | த |
| 131. | புலவி | ச | த | த | த | த | த | ச | த |
| 132. | புலவி நுணுக்கம் | ச | த | த | த | த | த | ச | த |
| 133. | ஊடலுவகை | ச | த | த | த | த | த | ச | த |

ச : அமைந்துள்ள நிலை    த : அமையா நிலை

**பொருள் விளக்கம்**

பரிமேலழகர் அதிகாரத்தின் பொருளை விரிவாக விளக்கு வதனை,

> 'பொறையுடைமை — அஃதாவது காரணம் பற்றியாதல் மடமையானாதல் தமக்கு மிகை செய்தவழித் தாமும் அதனை, அவன்கட் செய்யாது பொறுத்தலை உடையராதல்'[4]

என்னும் விளக்கத்தால் அறியலாம். மிகச் சுருக்கமான தோற்று வாய்க்குச் சான்றாக 'நல்குரவு' அதிகாரத்தைக் குறிப்பிடலாம். 'அஃதாவது நுகரப்படுவன யாவுமில்லாமை' என்னும் ஒரு தொடரிலேயே தம் தோற்றுவாய் விளக்கத்தை முடித்துக் கொள்வர் பரிமேலழகர்.

**விளக்கநிலை வகை**

இதனால் அதிகாரத் தோற்றுவாய் விளக்கங்களில் பரிமேலழகர் விளக்கமாகவும் சுருக்கமாகவும் தோற்றுவாய் செய்தார் என்பதும் இவ்விரு வகையில் விளக்கநிலை வகை யினையே பெரிதும் பின்பற்றினார் என்பதும் பெறப்படுகின்றன.

அன்புடைமை அதிகாரத் தோற்றுவாயில், 'அஃதாவது அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர் புடையார்கண் காதலுடையனாதல்' என **அதிகாரப் பொருள் விளக்கமும்**

'அதிகார முறைமையும் இதனானே விளங்கும்' என்பதால் **முன்பின் அதிகார இயைபும்,**

'வாழ்க்கைத்துணை மேல் அன்பில்வழி இல்லறம் இனிது நடவாமை', 'அறவோர்க்களித்தலும் அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலுமிழந்த என்னை, என்பதனாலும் அதனால் அருள் பிறத்தல் 'அருளென்னும் அன்பீன் குழவி' என்பதனாலும் அறிக' என்று கூறுவதால் தன் உரை விளக்கத்திற்குச் சான்றாக **மேற்கோள் செய்யுள் எடுத்தாளும் உரை** நெறியும் புலப்படுகின்றன

இவ்வதிகாரத்தின் தோற்றுவாயில் முறையே அதிகாரப் பொருள் விளக்கம், அதிகார முறைமை, அதிகாரப் பொருள் மேற்கோள் செய்யுளால் விளக்கும் நெறி ஆகிய மூன்றும் இடம் பெற்று விளங்குவது எண்ணுதற்குரியது.

**இலக்கண நுட்பம்**

மேலும் சொற்களை விரித்துக் காட்டியும் (அதி,85) இரட்டுற மொழிதலால் பொருள் கூறியும் (அதி 88), பகுதி விகுதி பிரித்துக்காட்டியும் [அதி 17], ஒன்றன் பெயரைப் பிறிதொன்றற்காகியது என்று சுட்டியும் [81] அவர் அதிகாரப் பொருள் விரித்துரைக்கும்போது இலக்கண நுட்பம் கூறிப் பொருள் கொள்ளும் நெறியும் வெளிப்படுகின்றது. ஓர் அதிகாரத்தின் இறுதிக் குறட்பா உரையிலேயே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் விளக்கம் தரும் நெறியும் ஈரிடங்களில் காணப் படுகின்றது.

வாழ்க்கைத் துணைநலம் அதிகாரத்தின் இறுதிக் குறட்பா வான 'மங்கலமென்ப மனைமாட்சி' என்னும் (6 ) குறளுக்கு உரைகூறிப் பின், 'இதனால் வாழ்க்கைத் துணைக்கு ஆவதோ ரணிநலங் கூறி வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது' என்று எழுதுவர். அடுத்த அதிகாரத்தில், அதிகார முறைமை மேலே பெறப்பட்டது, என்று அதற்கேற்ப இயைபு கூறுவதும் எண்ணுதற்குரியது [5]

இம்முறையினை மிக அருகிய நிலையில் பரிமேலழகர் கையாண்டுள்ளார்.

**இயைபு கூறப்படாமை**

ஓரிடத்தில் பின்வரும் அதிகாரத்திற்கு இயைபு கூறிவரும் அதிகாரத்தில் முன் இயைபு கூறப்படாமையும் குறிப்பிடத் தக்கது.[6]

**அதிகார அடைவு**

ஓர் அதிகாரத்தில் கூறப்படும் பொருள்களைக் காரண காரியத் தொடர்புபடுத்தித் தொகுப்புரை தரும் அதிகார அடைவு முறை பரிமேலழகர் உரையில் வரன்முறையோடு காணப்படுகின்றது.

நூற் பயிற்சி

அதிகாரப் பாடல்களைச் சுட்டிக்காட்டிப் பொருள்களைக் கூறுபடுத்திக் காட்டும் முறையினைக் குறளின் அனைத்து அதிகாரத்திற்கும் அவர் தொகுத்துத் தந்திருப்பது, நூலினைப் பன்முறை படித்துணர்ந்த நுட்பத்தை நன்கு வெளிப்படுத்துகிறது

அடைவு — உரைநெறி

சான்றாக 'அடக்கமுடைமை' அதிகாரத்தில் காணும் 'கருத்துக்களை அவர் தொகுத்து வரையறை செய்ததைக் குறிப்பிடலாம். 'அடக்கமுடைமை' அதிகாரத் தோற்றுவாயில் 'மெய், மொழி, மனங்கள் தீநெறிக்கண் செல்லாது அடங்குதலுடையனாதல்' எனப் பொருள் எழுதுவர். இவ்வுரை விளக்கத்தை முறையே அவர் அடைவிலும் நிரலே பொருத்திப் பார்த்திருக்கும் நெறியினை,

| | |
|---|---|
| ஐந்து பாட்டானும் பொதுவகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது | (1—5) |
| இதனால் மெய்யடக்கம் கூறப்பட்டது | ( 6) |
| மூன்று பாட்டானும் மொழியடக்கங் கூறப்பட்டது | (7—9) |
| இதனால் மனவடக்கங் கூறப்பட்டது | (—10) |

என்னும் கருத்துத் தொகுப்புரையால் அறியலாம். இந்நால் வகையின்கீழ் பத்துக் குறட்பாக்களின் கருத்துரைகளையும் அடைவுபடுத்திக் காட்டுகிறார். இவ்வாறே அவர் 133 அதிகாரங்களுக்கும் அடைவு தந்திருப்பதால் இங்ஙனம் அடைவு தருதலை ஓர் உரைநெறியாகவே கொண்டார் எனலாம்.

கூற்றுநிலை

அறத்துப்பாலுக்கும் பொருட்பாலுக்கும் கருத்துத் தொகுப்பைக் குறள் உரையின் இறுதியில் கூறும் பரிமேலழகர் காமத்துப்பாலில் குறளின் முன்னர் இத்தொகுப்பினைத் தந்துள்ளார். இது அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் கையாண்ட முறைக்கு மாறுபட்டது இதற்குக் காரணம் காமத்துப்பாலைக் கூற்றுநிலையாகக் கொண்டு உரை எழுதியமையின் விளைவு எனலாம்,

**கருத்து வகைமை**

பத்துக் குறள்களில் காணும் கருத்துக்களைப் பெரும் பான்மை நிலையில் ஒன்பது தலைப்பிலும், சிறுபான்மை நிலையில் இரண்டு தலைப்பிலும் வகுத்துக் காட்டுகிறார். இப்போக்கைக் கீழ்க்காணும் அடைவு விளக்கம் காட்டும்:

| | கருத்து வகைமை | குறள் அதிகார எண்கள் | மொத்தம் |
|---|---|---|---|
| அ | 9 | 4, 6, 37, 108, 111 114 | (6) |
| ஆ | 8 | 11, 12, 36, 46, 67, 117 | (6) |
| இ | 7 | 1, 7. 41, 48 49, 59, 72, 77, 81 82, 84, 88, 107, 112, 113, 119 | ( 6) |
| ஈ | 6 | 3, 9, 10, 26, 29, 31, 33, 35, 40, 90, 93, 98, 109, 110, 121 | (15) |
| உ | 5 | 22, 30, 32, 43, 44, 52, 54, 55, 57, 58 62, 65, 68, 79, 83, 85, 89, 95, 102, 103, 115, 116, 120, 122, 123, 125, 126, 128, 131 | (29) |
| ஊ | 4 | 5, 13, 14, 19, 24 25, 27, 28, 42, 45, 47, 51, 53 56, 63, 64, 71, 73, 74, 80, 86, 91, 96, 101, 104, 106, 118, 124, 127, 133 | (31) |
| எ | 3 | 8, 16, 17, 18, 20, 21 23, 34, 38, 39, 50, 60, 61, 66, 69, 70, 75, 76, 87, 92, 94, 97, 99, 100, 105, 129, 130 132 | (28) |
| ஏ | 2 | 2, 15 | (2) |

இதனால் நான்கு வகைத் தலைப்புக்களில் அதிகாரப் பொருளைப் பரிமேலழகர் கண்டது மிகுதியாக உள்ளது. இருவகையாகப் பிரித்தல் இரண்டே அதிகாரங்களில் காணப் படுகின்றது. மிகப் பெருகிய அளவிலும் (அ, ஆ பிரிவுகள்) மிகச் சுருங்கிய அளவிலும் (ஏ) பகுப்பதை அரிதாகக் கையாள்கின்றார்.

அதிகாரப் பொருளை வகைப்படுத்துவதில் மிகைபடு வகைமையையோ குறைபடு வகைமையையோ அவர் கையாள வில்லை. எனவே தகுமுறை வகைமையையே பேரளவில் கையாண்டுள்ளார் என அறிகிறோம்.

## உறுப்பு நெறிப்படுத்திய ஆய்வு

நூல் முழுமையையும் பன்முறை நுட்பமாகக் கற்று, ஆழ்ந்து சிந்தித்து முன்பின் முரண்பாடின்றி ஒரு நோக்கில் வைத்து உறுப்பு நெறிப்படுத்தி (Systematic) ஆராய்ந்தவர்[7] என்பதும் இவ்வதிகார அடைவுப் பொருள் தொகுப்பால் நன்கு புலனாகும்.

## குறட்பா வைப்புமுறை

### தொன்மை

குறள் உரையாசிரியர் ஒவ்வொருவரும் குறள் வைப்பு முறையில் வேறுபடுகின்றனர்.[8] வள்ளுவர் வைப்பு முறை எது என இப்போது துணிய இயலாது. உரையாசிரியருள் மணக் குடவர் உரையே மிகப் பழமையானது.[9] எனவே வள்ளுவரது வைப்பு முறையை உணர்தற்கு மணக்குடவர் உரையே பெரிதும் துணையாகலாம்.[10]

### படிமுறை மனவளர்ச்சி

ஆனால், பரிமேலழகர் குறட்பா வைப்பு முறையில் மணக் குடவரினின்றும் மாறுபட்டுள்ளார். இம்முறையே பெரிதும் பொருத்தம் உடையதாக இருக்கலாம் என அறிஞர் கருதுவர். 'அகர முதல னகர இறுவாய்த் தமிழ் நெடுங்கணக்கு முறையில் அமைந்த பரிமேலழகரின் குறள் வைப்பினைப் போற்றுவதோடு இவர்தம் வைப்பு முறை '*படிமுறை மனவளர்ச்சி*' விளங்க அமைந்திருப்பதாகவும் கருதுவர்.[11]

சான்றாக நாணுடைமை அதிகாரத்தினைக் (102) காண் போம்.

| குறள் | பரிமே-லழகர் | மணக்-குடவர் | பரிப்-பெருமாள் | பரிதி-யார் | காலிங்-கர் |
|---|---|---|---|---|---|
| கருமத்தால் நாணுதல் | 1 | 9 | 9 | 5 | 4 |
| ஊனுடை எச்சம் | 2 | 1 | 1 | 1 | 1 |
| ஊனைக் குறித்த | 3 | 2 | 2 | 2 | 2 |
| அணியன்றோ நாணுடைமை | 4 | 4 | 5 | 3 | 6 |
| பிறர்பழியும் தம்பழியும் | 5 | 10 | 10 | 6 | 7 |
| நாண்வேலி கொள்ளாது | 6 | 8 | 4 | 10 | 10 |
| நாணால் உயிரை | 7 | 3 | 3 | 8 | 8 |
| பிறர் நாணத்தக்கது | 8 | 5 | 6 | 9 | 3 |
| குலஞ்சுடுங் கொள்கை | 9 | 6 | 7 | 7 | 9 |
| நாணகத்தில்லார் | 10 | 7 | 8 | 4 | 5 |

பரிமேலழகருடைய வைப்புமுறையில்,

1. நாணினது இலக்கணம் — 101
2. நாணுடைமையின் சிறப்பு — 102 — 104
3. நாணுடையார் சிறப்பு — 105
4. நாணுடையார் செயல் — 106 — 107
5. நாணில்லாதவரது இழிவு — 108 — 110

என வரன்முறையாக வைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. இவ்வைப்பு முறையில் ஓர் ஒழுங்கு நெறி இருப்பதை அறிய இயலும்.

ஏனைய வைப்பு முறைகளிலும் ஓர் ஒழுங்கு முறை இருப்பதைக் குறள் வைப்பு முறை அடைவால் நன்கு தெளியலாம்.[12]

சொல் வருவித்தல்

கவிஞர்கள் சொற்சுருக்கம் கருதித் திட்பமாகவும் நுட்பமாகவும் தம் கருத்தைப் பாடலாகப் படைக்கின்றார்கள். பொருள் காண்போர் நுட்பமுடன் அச்சொற்களை விரித்துப் பொருள் கண்டாலன்றிப் பாடலின் கருத்தும், கவிஞரின் நோக்கமும் புலப்படா.

**சுருங்கிய யாப்பு**

வள்ளுவர் எடுத்துக் கொண்ட பாவகையான குறள் வெண்பா திட்ப நுட்பம் செறிந்த சூத்திரம் போன்ற சுருங்கிய யாப்புடையது. இச்சுருக்கத்தால் நூல் ஆழமும், அழுத்தமும், செறிவும், சுரப்பும், நயமும் பல நுட்பதிட்பங்களும் பெற்றது.[13]

இத்தகைய பா அமைப்புடைய குறளுக்கு உரை காண்போர், வள்ளுவர் கருத்தை நன்குவிளக்கிக் கொள்வதற்குச் சொற் பொருள்களை வருவித்து உரை காண வேண்டிய நுட்பம் வாய்ந்தவர்களாக இருத்தல் வேண்டும். எனவே, சிறந்த நூல்களுக்குப் பொழிப்பு அல்லது பதவுரை எழுதுங் காலை உரையாசிரியர் ஏற்புடைச் சொற்களை வருவித்து எழுதுவர்.[14]

பரிமேலழகர் சொல், பொருள் வருவித்து எழுதுதலை உரை நெறியாகக் கொண்ட பாங்கினை,

'அதிகாரத்தான் வந்தது'[15]
'அதிகாரத்தாற் பெற்றாம்'[16]
'வருவிக்கப்பட்டன'[17]

என்று உரையிடையே எழுதும் தொடர்களால் அறியலாம்.

இதனால் சொல் வருவித்துப் பொருள் கொள்ளுதற்கு அவ்வப் பொருள் பற்றிய அதிகாரத்தைப் பரிமேலழகர் காரணமாகக் கொண்டார் என்பது புலனாகின்றது.

அதிகாரப் பெயரைக் கொண்டு சொற்களை வருவித்து எழுதும் போது பரிமேலழகர் அதிகாரப் பெயரைச் சுட்டியும் சுட்டாமலும் எழுதுவது உண்டு. சான்றாக, 'நல்லவையெல்லாம் தீயவாம்' (375) என்னும் குறட்பாவில் 'ஊழான் என்பது அதிகாரத்தான் பெற்றாம்' என ஊழ் என்னும் அதிகாரப் பெயரைச் சுட்டுவார்.

இவ்வாறே 'தூதென்பது அதிகாரத்தான் வந்தது' என்று தூது (687) அதிகாரத்திலேயே கூறுவார்.

'ஒன்றாக நல்லது கொல்லாமை' (323) என்னும் குறட்பாத் தொடருக்கு 'நூலோர் தொகுத்த அறங்களுள் தன்னோடிணைப்

பதின்றித் தானேயாக நல்லது கொல்லாது' என்று பொழிப் புரையில் கூறி, விசேடவுரையில் 'நூலோர் தொகுத்த அறங்கள் என்பது அதிகாரத்தான் வந்தது' என்கிறார். இங்கு நூலோர் தொகுத்த அறங்கள் என்பது இதற்கு முன் குறட்பாவில் வரும் தொடராகும். எனவே பரிமேலழகர் முதல் குறட்பாவில் அமைந்த சொல்லை அடுத்த குறட்பாவில் வருவித்து உரை எழுதும் போக்கும் தென்படுகின்றது.[18]

ஒரு குறட்பாவிலேயே அக்குறட்பா விளக்கத்திற்காக வருவித்த சொல் பற்றிய குறிப்பையும், அடுத்த குறட்பாவிற் கான சொல்லையும் வருவித்துப் பொருள் உரைத்தல் பற்றிய குறிப்பையும் சுட்டுவது சொற்சுருக்கத்தைக் காட்டுவ தோடன்றிக் கூறியது கூறலைத் தவிர்க்கும் உளப்பாங்கையும் நன்கு புலப்படுத்தும். இது 186 ஆம் குறளுரையில் வரும், ''புறத்தென்பது அதிகாரத்தாற் பெற்றாம்; இது வருகின்ற வற்றிற்கு மொக்கும்'' என எழுதும் உரையால் தெளிவாகிறது.

அதிகாரப் பெயரில் அமைந்த சொற்களேயன்றி அதிகாரப் பெயருக்குத் தொடர்புடைய பொருள்களையும் வருவித்து எழுதும் நெறிக்குச் சான்றாகத் ' தீயள வின்றித் தெரியான் ' (947) என்னுங் குறட்பாவின் விளக்கவுரையில், தெரியாமை வினைக்குச் செயப்படு பொருள்கள் அதிகாரத்தான் வந்தன ' என்று எழுதுவார். இங்குச் செயப்படு பொருள்களாக வருவிக் கப்பட்டவை - ' தன் பகுதி ', ' அதற்கு ஏற்ற உணவு ', ' காலம் ' என்பவையாம், இவை ' மருந்து ' என்னும் அவ் வதிகாரப் பெயருக்கு இயைபுடைய பொருள்களாம்.

இதனால் அதிகாரப் பெயருடன் இயைபு கூறியவற்றுள் ளும் பெயர் வருவித்து எழுதுதலை இவர்தம் உரைநெறியாகக் கொள்ளலாம்.

**அவாய் நிலை**

பரிமேலழகர் ' அவாய் நிலையான் வந்தது ' எனச் சொற் களை வருவித்துப் பொருளுரைக்கும் நெறி 29 இடங்களில் காணப்படுகிறது.[19]

அவ்வாய் நிலை என்பது ஒரு சொல் மற்றொரு சொல்லை வேண்டி நிற்றலைக் குறிப்பதாகும்.[20]

'பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம் அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப் பெய்து முன் கெடுத்தாற்போல எடுப்பதூஉம் இவையெல்லாம் வல்லது மழை' (15) என்னும் குறட்பாக் கருத்துரையில் வல்லது என்பது அவாய் நிலையான் வந்தது' என்பர்

'அவாய் நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப்பட்டது' (415) எனவும், 'நீதி நூல் என்பது அவாய் நிலையான் வந்தது' (825) எனவும் சுட்டுவர்.

இதனால் சொல்லையும், உவமையடையால் பொருளடையையும், நூலையும் அவாய் நிலையால் வருவித்துப் பொருளுரைத்து விளக்கும் பரிமேலழகரின் உரைப்பாங்கு தெளிவாகின்றது.

### விதப்புக் கிளவி

புலவர் தம்படைப்புக்களில் ஒவ்வொரு சொல்லையும் காரணம் கருதியே அமைப்பர். சொற்களைத் தொகவைத்தும், வெளிப்படையாக வைத்தும், முறை மாறி வைத்தும் பல்வேறு நுட்பங்களை உணர்த்துவர். இந்நுட்பங்களைப் பொருள் காண்போர் ஆய்ந்து கண்டாலன்றி அப்பாடல்களுக்கு நல்விளக்கம் தர இயலாது. பாடும் புலவர், உள்ளத்தில் ஓர் குறிப்பு வைத்தே இவற்றை அமைத்திருப்பார் ஆதலின் இவை தேவையற்றன என எளிதில் நீக்கிவிட முடியாது. அவை ஆராய்ந்து காணத்தக்கன.

இவ்வகையில் புலவர் சிறப்புப் பொருள் கருதிச் சில சொற்களைப் பாடல்களில் அமைப்பது 'விதப்புக் கிளவி, எனப்படும். விதப்பு என்பது சிறப்பித்து எடுத்துச் சொல்வதைக் குறிக்கும். 'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்' [21] என்பர். இதனை மிகுதிப் பொருள் தருவதாகவும் கொள்வர். மேலும் பிற்கால இலக்கணிகள் இதனைச் சிறப்பு விதியாகக் கூறியுள்ளனர். [22]

இச்சிறப்பு விதியைப் பயன்படுத்தி உரையாசிரியர்கள் நூலினகத்துச் சுருங்கிய வடிவில் காணும் தொடருக்குப் பொருள் காணும் நெறியில் சொல்லையும் தொடரையும் வருவித்துக் கொள்வதால் பயில்வோர் நூலின் பொருளை நன்கு அறிய முடிகிறது. உரையாசிரியர் பரிமேலழகர் இதனை 'தாற்பரியம்' (139) என்பர்.

இம்முறையைப் பரிமேலழகர் பல இடங்களில் எடுத்தாண்டு பொருள் விளக்கம் கூறியுள்ளார். சில சான்றுகளைக் காண் போம்:

இன்சொல்லுக்கு இலக்கணம் கூறும்போது,

> இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
> செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் (91)

என்பர் வள்ளுவர்.

இக்குறட்பாவில் 'செம்பொருள் கண்டார் சொல்' என்று கூறினாலே அமையும். 'வாய்' என்னும் சொல் வேண்டாதது என எண்ணக்கூடும். ஆனால் பரிமேலழகர் இச்சொல்லின் நுட்பத்தை உணர்ந்து,

> வாய் என வேண்டாது கூறினார், தீயசொற் பயிலா என்பது அறிவித்தற்கு

என உரை விளக்கம் தருவர். இதனால் 'செம்பொருள் கண்டார் வாய் தீயசொற் பயிலா' என்னும் சிறப்புப் பொருளை உணர்ந்த பரிமேலழகரின் உரைத்திறம் வெளிப்படுகின்றது.

இங்ஙனமே மற்றொரு குறளில் (139) 'வாய்' என்று சொல்லைத் திருவள்ளுவர் ஆண்டமைக்குச் சிறப்புப் பொருள் காண்பார் பரிமேலழகர்.

> ''நல்ல சொற்கள் பயின்றது' எனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு''

என்று விளக்கம் கூறுவர்.

'நாணுடைப் பெண்' (907) எனப் பெண்ணுக்கு அடையினைத் தொடர் வடிவில் கொடுத்துச் சிறப்பிப்பர் வள்ளுவர். பெண் என்ற மாத்திரத்தில் நாணுடைமை பெறப்படுமாதலால், பெண் என்ற சொல்லுக்கு 'நாணுடை' என்ற அடைமொழி வேண்டுவதன்றாம்.

புலவர் வேண்டாத ஒன்றைக் கூறுதல், வேண்டிய ஒன்றைப் பெற வைத்தற்கு ஆகுமாதலால் பரிமேலழகர் இதனை நன்குணர்ந்து,

'நாணுடைப்பெண்' என வேண்டா கூறியது அவளேவல் செய்வானது நாணின்மை முடித்தற்காதலின், அம்மறுதலைத் தொழில் வருவிக்கப்பட்டது'

என விளக்கம் தருவர்.

இந்நெறியினைப் பின்பற்றிப் பரிமேலழகர் மேலும் பல குறட்பாக்களுக்கு உரை காண்பதைக் காணலாம். [28]

இதனால் தனித்தனிச் சொற்களையும், தொடர்களையும் நுட்பமாக ஆராய்ந்து இச்சொல் அல்லாது இத்தொடர் இன்ன காரணத்திற்காக வைக்கப்பட்டுள்ளது எனத் தெளிந்து பொருள் கூறும் உரைநெறி தெளிவாகின்றது.

இதில் தொடரை விடச் சொல் பற்றியே மிகுதியும் தம் சிறப்புப் பொருளைப் பரிமேலழகர் கூறிச் செல்வது குறிப்பிடத் தக்கது.

அரும்பொருள் விளக்கம்

பரிமேலழகரின் உரைப் போக்கில் காணும் அரும்பொருள் விளக்கத் திறனைப் பல வகையாகப் பகுத்துக் காண இயலும்.

இதற்கென அவர்தம் உரையில் அரும்பொருள் கூறிய 286 இடங்களைக் கொண்டு (பின்னிணைப்பில் காண்க) சொற்பொருள் கூறும் முறையையும் விளக்கம் காணும் நெறியையும் பின் வருமாறு தொகுத்துக் காண முடிகிறது.

'அந்தணர்' (30) என்ற சொல்லுக்கு 'அழகிய தட்பத்தை உடையார்' எனச் சொற்பொருள் விரிப்பர்.

'அச்சு' (667) என்பதை 'உருள் கோத்த மரமாக' உருவ விளக்கம் தருவர்.

'அணங்கு' (918) என்ற சொல்லின் பொருளைக் 'காம நெறியால் உயிர் கொள்ளும் தெய்வ மகள்' எனப் பொருளுக் குரிய செயல் விளக்கம் சுட்டிப் பொருள் காண்பர்.

'அரங்கு' (401) என்பதற்கு 'வகுத்த தானம்' என இட விளக்கமும், 'இகழ்தல்' (151) என்பதற்கு 'மிகையாயின செய்தலும் சொல்லுதலும்' என வினை விளக்கமும் காட்டுவர்.

'வழு' (712) என்பதன் வகையைச் சொல்வழுவும் பொருள்வழுவும் எனக்காட்டி, 'பேடி' (727) என்பதற்குப் 'பெண்ணியல்பு மிக்கு ஆணியல்பும் உடையவள்' எனத் தன்மை சுட்டுவர்.

'நோக்கு' என்ற சொற்கு அமைந்த அடைகளான 'மட' (1089), 'பொது' (1099) என்ற சொற்களுக்கேற்ப முறையே 'வெருவுதலையுடைய' எனவும், 'யாவர்மாட்டும் ஒருதன்மைத் தாய' எனவும் நோக்கின் வேறுபாட்டைப் புலப்படுத்துவர்.

'வெண்மை' (844) என்ற சொல்லுக்கு 'இளமை' என்று பொருள் கூறி அதனை மேலும் விளக்கும் வகையில், 'அதாவது அறிவு முதிராமை' என்று பொருளுரைப்பர்.

'தானே கெடுதல்' (443) என்ற செயலை விளக்கப் 'பாகனில்லாத யானை போல நெறியல்லா நெறிச் சென்று கெடுதல்' என உவமை கூறி, அதன் வினை விளைவையும் விளக்கியுரைப்பர்.

இங்ஙனமே வினாத்தொடர் வாயிலாக, 'இக்குடியில் உள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்புறுவேன் யானோ?' என மானத்திற்கு (1028) விளக்கம் தருவர்.

குறளில் காணும் எண் (560), குழுவினர் (731) போன்ற தொகைகளை விரித்துரைப்பார்.

சிறப்பாக 'நாண்' என்ற சொல்லை விளக்குமிடத்து,

1. இழிதொழில்களில் மனம் செல்லாமை (502)
2. இழிவாயின செய்தற்கண் விலக்குவது (1133)
3. எஞ்ஞான்றும் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார் போன்று ஒடுங்குதல் (1297)
4. பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல் (1257)
5. பழி பாவங்களின் மடங்குதல் (951)

என மனத்தின் செயல்களை நேர்முறையிலும், எதிர்மறை முறையிலும் காட்டுவது எண்ணி மகிழ்தற்குரியது.

இங்ஙனம் அரும்பொருள் உரைக்கச் சொல்லை விரித்து, வகைப்படுத்தி, அநமை சுட்டிப் பொது நெறியிலும் சிறப்பு நெறியிலும், இன்ன பிற துறையிலும் பொருள் கூறும் பாங்கையும், விளக்க உரையினைப் பண்பு, உருவம், செயல், இடம், தொகை, உவமை, வினா ஆகியவற்றினை நிலைக்களனாகக் கொண்டு அரும் பொருள் உரை கூறும் பாங்கையும் காண்கிறோம்.

அருந்தொடர் நயம்

நூலாசிரியரின் உள்ளக் கருத்தை ஆழ அகழ்ந்து கண்டு உரைநயம் கூறுவது உரைநெறிகளுள் ஒன்றாம். இவ்வகையில் குறளின் தொடர்களுக்கு உரை நயம் தரும் விதத்தைச் சில சான்றுகளோடு காண்போம் ,

*தீயவை தீய பயத்தலால் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்* (202)

என்னும் குறளில் ' *தீயினும்* அஞ்சப்படும் ' என்னும் தொடருக்குச் சுட்டும் பரிமேலழகரின் நயம் பின்வருமாறு :

" பிறிதொரு காலத்தும் பிறிதொரு தேயத்தும் பிறிதொரு உடம்பினுஞ் சென்று சுடுதல் *தீக்கின்மையின் தீயினும்* அஞ்சப்படும் என்றார் "

இங்குத் *தீக்கும்*, *தீயவற்றிற்கும்* உள்ள வேறுபாட்டைப் பரிமேலழகர் நுட்பமாக விளக்குந்திறன் குறிப்பிடத்தக்கது.

'*தீயினாற்* சுட்ட புண்', 'நாவினாற் சுட்ட வடு' என்னும் குறட்பாத் தொடர்களுக்கு (129) 'ஆறிப் போதலால் *தீயினாற்* சுட்டதனைப் புண்' என்றும், ஆறாது கிடத்தலின் நாவினாற் சுட்டதனை 'வடு' என்றுங் கூறினார் என்று புண், வடு என்ற சொற்களைக் கொண்டு சிறப்புரை காண்பர்:

'எப்பொருள்', 'யார் யார் வாய்' (423) என்னுந் தொடர்களுக்குப் பரிமேலழகர்,

" குணங்கள் மூன்றும் மாறி மாறி வருதல் யாவர்க்கும் உண்மையின் உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும், உறுதிப் பொருள் பகைவர் வாயினும், கெடு பொருள் நட்டார்

வாயினும் கேட்கப்படுதலான் 'எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்' என்றார்''.

என்று நயம்பட விளக்கமாகக் கூறுவர்.

'காமத் துன்பத்தைப் பொறாது நோனா உடம்பும் உயிரும் நாணினை நீக்கி மடலேறக் கருதின' (1132) என்பர் வள்ளுவர். இங்குப் பரிமேலழகர் 'உடம்பும் உயிரும்' என்பதற்கு,

'அறிவு, நிறை, ஓர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும், நாண் நீங்காது நின்றது. அதுவும் இப்பொழுது நீங்கிற்று என்பான் 'உடம்பும் உயிரும்' என்றான்'

என்று கூறும் போது நாணின் பண்பைத் தனித்துச் சுட்டுவது உளவியல் விருந்தாகும்.

'கணை கொடிது யாழ் கோடு செவ்விது' (279) என்னும் குறட்பாத் தொடருக்கு 'வடிவாற் செவ்விதாயினும் செயலாற் கொடிது' எனவும், 'யாழ் கோட்டால் வளைந்ததாயினும் செயலாற் செவ்விது' எனப் பொருள்களின் வடிவும் செயலும் பற்றிய அறிவின் துணை கொண்டு உரை கூறுவது குறிப்பிடத் தக்கது.

'பேராண்மை' (148) எனப் பிறர் மனையை நோக்காத இயல்பினுக்குப் பரிமேலழகர்,

புறப்பகைகளையடக்கும் ஆண்மை உடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மை என்றான்'

என் ஆண்மையின் பகைகளைப் புற அகநிலையில் வைத்துக் காட்டும் அருமை எண்ணத்தக்கது.

இவ்வாறு பரிமேலழகர் இன்னும் பல குறட்பாக்களுக்கு உரைநயம் எழுதி விளக்குவதைக் காணலாம்.[24]

இங்ஙனம், தொடர்களில் காணும் அருமையின் அடிப் படையை உலகியல் பொருள்களின் வடிவு, பண்பு, செயல் ஆகியவற்றை நுனித்துக் காண்பதன் வாயிலாகப் பரிமேலழகர் உரை நுட்பம் புலப்படுகிறது.

**உவமை விளக்கம்**

எண்ணியதை எண்ணியாங்கு உணர்த்துவதற்கு உவமைகள் பெரிதும் துணையாகின்றன. புலவர்களின் கற்பனைப் படைப்பிலும் உவமை தனி இடம் பெற்றுத் திகழ்கிறது. பொதுவாகச் செய்யுள்களிலேயே உவமையும் உருவகமும் மிகுதியாகப் பயின்றுவரும் என்றாலும் உரைநடையிலும் நடை சிறக்கக் கருத்து இனிது புலனாக இவற்றைக் கையாளுகின்றனர்.

இவ்வகையில் பரிமேலழகரின் உவமைகள் வள்ளுவரின் கருத்துக்களை மேலும் விளக்கும் விளக்கங்களாகத் திகழ்கின்றன. பரிமேலழகரின் உவமை விளக்கங்களை இருவகையாகப் பாகுபடுத்தலாம் :

1. வள்ளுவர் படைத்த உவமைகளுக்குத் தம் உரையால் மேலும் விளக்கந் தருதல்
2. கருத்து விளக்கங்களுக்காகத் தாமே தம் உரையில் அரிய உவமைகளைப் பெய்து விளக்குதல்.

இவற்றுள் முதல் வகை நான்காம் இயலுள் அணியிலக்கணச் செய்திகள் என்னும் தலைப்பின் கீழ் ஆராயப்பட்டுள்ளது. இனிப் பரிமேலழகர் உவமை காட்டி விளக்கியவற்றைக் காண்போம்.

பரிமேலழகர் பயன்படுத்திய உவமைகளை இருவகையாகப் பகுக்கலாம்.

1. பழமொழி உவமைகள்
2. மரபு உவமைகள்

**பழமொழி உவமைகள்**

பழமொழிகள் மக்களின் அனுபவ மொழிகள். இவை ஒரு வகையில் அகப்பொருள் துறையில் வழங்கும் உள்ளுறை போலவும், புறப்பொருள் துறையில் விளங்கும் பிறிதுமொழிதலணி போலவும் பொருளும் செறிவும் பெற்றுத் திகழ்வன.

'கல்வி தாம் இன்புறுவதற்குக் காரணமாவது மட்டுமன்றிப் பிறர் மகிழ்தற்கும் காரணமாய் அமைவதால் கற்றோர் 'கரும்பு

அயிறற்குக் கூலி போலத் தாம் இன்புறுதற்கு உலகு இன்புறு தல் பிறவாற்றான் இன்மையின் அதனையே காமுறுவர் என்றுங் கூறினார் ' (399) என்று பழமொழித் தொடரை உரைவிளக் கத்தில் பயன்படுத்துவர்.

இங்குக் 'கரும்பு தின்னக் கூலியா?' என்னும் நாட்டுப் பழமொழி இலக்கியப் புலமை வடிவம் பெற்று உரை விளக்கத் திற்குப் பயன்பட்ட பான்மையை அறிய முடிகிறது.

இவ்வாறே 'மழைத்துளி போல வந்து' ஈண்டி எல்லா அறிவுகளை உளவாக்கல் (416) என்னும் உவமை 'பலதுளி பெருவெள்ளம்' என்னும் பழமொழியின் சுருக்க வடிவமாய் விளங்குகிறது.

'விறகு பெற்ற தழல்போல' (343) 'காட்டுத் தீ முன்னர் பஞ்சுத்துய் போலும்' (360) ஆகிய உவமைகள், 'எரிகின்ற நெருப்பினுள் எண்ணெய் வார்த்தது போல' என்னும் பழமொழியின் நிழல் பெற்ற வடிவ விளக்கங்களாகக் காணப் படுகின்றமை குறிப்பிடத்தக்கது

**மரபு உவமைகள்**

பேதையாரின் நட்பினை ஒழித்து நீங்காவிடில் அவரைச் சார்ந்தோரும் அழிவர் (797) என்பதை, "நட்பு ஒழிந்தாலும் நீங்காக்கால் 'வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போலத் தீங்கு வரும்' " என நாலடியாரின் இலக்கியத் தொடரையே மரபுவமையாக்கி[25] விளக்குவது எண்ணுதற் குரியது.

'மலர்தலுங் கூம்பலுமில்லாத அறிவினுக்கு' (425) 'கயப்பூப் போல வேறுபடாத கோட்டுப்பூவை' உவமையாக்குவர்.[26]

இன்னாத காய்களுக்கு 'காஞ்சிரங்காய் போல (100) நஞ்சாவனவற்றை' எனக் காயை உவமை கூறி விளக்குவர்.

கல்லாதவனுடைய அறிவுடைமை ஒரோவழி நன்றாயிருப் பினும் அறிவுடையோர் அதனை 'ஏரலெழுத்துப் போல்வதோர்' விழுக்காடு என எண்ணி மதியாரெனப் பழமொழி நானூற்றுத் தொடரை உவமையாகக் கொண்டு விளக்குவர்.[27]

அருளோடும் அன்போடும் வாராத பொருளீட்டம் 'பசுமட் கலத்துள் நீர்போலச்' செய்தானையும் அழிக்கும், எனக் குறளையே (755) உவமையாக்கி உரை விளக்கம் கூறும் நெறி சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

இதனால் நாலடியில் வரும், மரம், பூ ஆகியவற்றையும், காஞ்சிரங்காயையும், பழமொழியில் வரும் நந்து இட்ட கோடு ஆகிய இயற்கைச் செய்தியையும் தம் உவமை விளக்கத்திற்கு நிலைக்களனாக்கிக் குறளை விளக்கிய பரிமேலழகரின் உரை நெறி புலனாகின்றது.

அதிகன் ஔவைக்கீந்த நெல்லிக்கனி பற்றிய வரலாற்றுச் செய்தியை [28] வள்ளுவரின் கருத்து விளக்கத்திற்கு (100) உவமையாக்குவர்.

வினை வகையால் வேறாகிய மாந்தர்க்குச் (514) சிந்தாமணிக் காப்பிய மாந்தருள் ஒருவனான கட்டியங்காரனின் செயலை உவமை சுட்டி விளக்கம் காட்டுவர்.

தவமுடையோர் சினத்தின் ஆற்றலுக்குச் சிவன் திரிபுரம் அழித்த செய்தியையும் (900), பிறனில் விழைந்தவர் சிறுமை எய்துவதை 'இந்திரன் போல (144) எல்லாப் பெருமையும் இழக்கும்' எனப் புராணச் செய்தியையும் தம் உவமை விளக்கத்திற்குப் பயன்படுத்துவர் பரிமேலழகர்.

'வினைகள் போல் (398) உயிரின்கட்கிடந்து' கல்வியும் உயிர்கள் செல்லுமிடத்துச் செல்லும் என மெய்ப்பொருள் வழிநின்று உவமை காட்டுவர்.

தொன்றுதொட்டு வருகின்ற பழங்குடிக்குச் 'சேர சோழ பாண்டியர் போல' (955) என மக்கள் மரபினை உவமையாக்குவர்.

அரணாகிய காப்பினை இழந்தால் 'கடல் நடுவண் உடைகலத்தார் போன்று ஏமங்காணாது இறுவர்' (741) என மக்களின் அவல நிலையின உவமையாக்கி விளக்கம் காட்டுவர்.

பிழைகள் நினைவுக்கு வருதலைக் 'கடன் கொண்டான் தோன்றக் கடன் தோன்றுமாறு போல' (693) என மக்கள்

இயல்பினை நிலைக்களனாகக் கொண்டு உவம விளக்கம் தருவர்.

இங்ஙனம், மக்கள் மரபினையும் மக்கள் இயல்பினையும் வள்ளுவரின் குறள் விளக்கத்திற்கு உவமை கூறி விளக்கம் காட்டும் பரிமேலழகரின் உரைநெறி புலனாகின்றது.

நெறியல்லா நெறிச் சென்று கெடுவோரைப் 'பாகனில்லாத யானை போல'க் (448) கெடுவர் எனவும், மனத்தைப் புலம் அறிந்து செலுத்தும் அறிவினைக் 'குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன் போல' (422) எனவும் உவமை காட்டி ஒப்பிடுவர்.

கண்ணோட்டமில்லாதவரிடத்து வாழும் குடிமக்கள் புலியை அடைந்த புல்வாயினம் போல்வர் (571) என்பர்.

இதனால் யானை, குதிரை, புலி ஆகிய விலங்குகளைக் களனாகக் கொண்டு உவமை விளக்கம் செய்த நெறி புலனாகின்றது.

பரிமேலழகர் பயன்படுத்திய உவமைகளைத் தொகுத்துப் பார்க்கும் போது (காண்க பக். 143-144) அவர் குறளைவிளக்குதற்காக எடுத்தாண்ட உவமைகளின் நுட்பமும், உரைநெறிப் பாங்கும் புலனாகின்றன. தெய்வம், மெய்ப்பொருள், இயற்கை, சங்க இலக்கியச் செய்திகள், காப்பியச் செய்திகள், மக்களின் தொழில், பண்பு, பழமொழிகள், விலங்கு முதலானவற்றை நிலைக்களனாகக் கொண்டு உரை விளக்கம் செய்த பான்மை தெளிவாகின்றது. பரிமேலழகரின் உவமை விளக்கங்களால் வள்ளுவர் உணர்த்த விழைந்த கருத்து மேலும் விளக்கம் பெற்று அவை பயில்வார்க்குப் பெரிதும் துணையாக அமைந்து உள்ளன என்பது நன்கு புலனாகின்றது.

## பரிமேலழகர் உவமை விளக்கம்

(அகர நிரல்)

| எண் | உவமை | பொருள் | குறள் உரை |
|---|---|---|---|
| 1. | இந்திரன் போல | பிறனில் விழைந்தான் அடையும் சிறுமை | 144 |
| 2. | ஏரலெழுத்துப்போல | கல்லாதான் ஒட்பம் | 404 |
| 3. | ஔவை உண்ட நெல்லிக்கனி போல | இனிய காய்கள் | 100 |
| 4. | கட்டியங்காரன் போல | வினைவகையால் வேறாகும் மாந்தர் | 514 |
| 5. | கடல் நடுவண் உடை கலத்தார் போன்று ஏமங் காணாது இறுவர் | அரணை இழந்தவர் அழிதல் | 741 |
| 6. | கடன் கொண்டான் தோன்றக் கடன் தோன்றுமாறு போல | அரிய பிழைகள் செய்தவனைக் காணுந்தோறும் அப்பிழைகள் நினைவுக்கு வருதல் | 693 |
| 7. | கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப் பூப் போல ஒருநிலை | நிலையான நட்புணர்வு உடையார் | 425 |
| 8. | கரும்பு அயிறற்குக் கூலிபோல | தாமின்புறுவதற்கு உலகு இன்புறல் | 399 |
| 9. | காஞ்சிரங்காய் போல நஞ்சாவனவற்றை | இன்னாத காய்கள் | 100 |
| 10 | காட்டுத்தீ முன்னர் பஞ்சுத்துய் போலும் | ஞானயோகத்தின் முன்னர்க் காமம் வெகுளி மயக்கம் மூன்றும் கெடல் | 360 |
| 11. | குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன் போல | மனத்தைப் புலமறிந்து செலுத்தும் அறிவு | 422 |
| 12. | சேர சோழ பாண்டியர் போல | தொன்றுதொட்டு வருகின்ற பழங்குடி | 955 |
| 13. | திரிபுரம் போல அழிதல் | தவமுடையோரின் சினத்திற்கு அரணுடையோரும் அழிதல் | 900 |

| எண் | உவமை | பொருள் | குறள் உரை |
|---|---|---|---|
| 14. | தூ வெள்ளறுவைக்கண் மாசு போல | ஈபவர் ஈதலில் குறைகாட்டின் அவரிடத்துச் சேரும் பழி | 1051 |
| 15. | நெருப்பிற் கொடியது பிறிதின்மை பற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக என்றாற் போல | மடியை மடியாகவே கருதுதல் | 602 |
| 16. | பசுமட் கலத்துள் நீர் போல செய்தானையுங் கொண்டு இறத்தல் | தீயவழியில் தேடிய பொருள் ஈட்டியவனோடும் சேர்ந்து அழிதல் | 755 |
| 17. | பாகனில்லாத யானை போல நெறியல்லா நெறிச்சென்று கெடுதல் | பெரியாரைத் துணைக் கொள்ளாத மன்னனும் அவ்வாறே கெடுதல் | 448 |
| 18. | புலியை அடைந்த புல் வாயினம் போல | கண்ணோட்டமில்லாதவரிடத்து வாழும் குடிகளின் நிலை | 571 |
| 19. | மழைத்துளி போல | கேள்வியறிவு சிறிது சிறிதாகச் சேர்ந்து வளர்தல் | 416 |
| 20. | விறகு பெற்ற தழல் போல | மனம் பொருள்கள் மேல் செல்லுதல் | 343 |
| 21. | வினைகள் போல உயிரின்கட் கிடத்தல் | கல்வியும் உயிர் செல்லுமிடத்துச் செல்லுதல் | 393 |
| 22 | வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போல | அறிவிலாருடன் உள்ள தொடர்பு சேர்த்தாரையும் அழித்தல் | 797 |

பாட பேதம் காட்டல்

குறள் உரையுள் பரிமேலழகர் ஏனைய உரையாசிரியர் கூறும் பாடவேறுபாடுகளையும் காட்டுவார். மொத்தம் 48 இடங்களில் பரிமேலழகர் தம் பாட வேறுபாடுகளைக் குறள் உரையுள் சுட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[29] சான்றாகச் சிலவற்றைக் காண்போம் :

'செய்யாமற் செய்த உதவி' (101) என்றும் பாடத்திற்குப் பிறர் கொண்டுள்ள 'செய்யாமைச் செய்த உதவி' என்பதைச் சுட்டி அதற்குப் பொருள் கூறி விளக்கும் உரைநெறியும் அவர்தம் உரையில் காணப்படுகின்றது.

'ஊணுடை எச்சம்' (1012) என்பதனை 'அச்சம்' என்று பாடமோதுவாரும் உளர் என்பர்.

'எல்லாம் ஒருங்கு கெடும்' (1055) என்பதனை, 'முழுதுங் கெடுமென்று பாடமோதி எஞ்சாமற் கெடுமென்று உரைப்பாருமுளர்' என்பர்

எனவே சில இடங்களில் பிறர் கொள்ளும் பாடத்தைச் சுட்டியும், சில இடங்களில் பிறர் பாடம், அதற்குரிய பொருள் ஆகிய இரண்டையும் கூறிச் செல்லும் இருவகை நிலையும் அவருடைய உரையால் தெளிவாகின்றன.

தம்முடைய உரையில் எடுத்துக்காட்டிய பாடவேறுபாடுகள் பொருந்தாதவை பற்றி எட்டு இடங்களில் பரிமேலழகர் குறிப்பிடுவார்.[30] பிற இடங்கள் அவருக்கு ஏற்புடையனவாகத் தெரிகின்றன.

இதனால் பிறர் பாடங்களையும் அவர் நுட்பமாக ஆய்ந்து தம் உரையில் குறிப்பிட்டமையால் மூல பாடங்களைத் தேர்வதில் அவருக்கிருந்த நுட்பமான புலமை புலப்படுகின்றது.[31]

பாடங் காணும் திறத்தில் பரிமேலழகர் சிறந்த புலமை உடையவர் என்பதைப் பரிபாடலின் உரைப்பாயிரம் கூறுவதும் இங்கு உளங்கொளத்தக்கது.[32].

### பிறர் உரை மறுப்பும் ஏற்பும்

பரிமேலழகர் உரைக்கு முன்னரேயே திருக்குறளுக்குப் பல உரைகள் தோன்றியிருந்தமையால் அக்கருத்துக்களைத் தம் மனத்துள் கொண்டு அவற்றின் வன்மை மென்மைகளைத் தம் திறனாய்வு நோக்கோடு மதிப்பீடு செய்து மறுக்க வேண்டிய இடத்தில் மறுத்தும், ஏற்க வேண்டிய இடத்தில் ஏற்றுக்

கொண்டும், சில இடங்களில் நொதுமல் நிலையில் பிறர் உரைகளைக் கூறிச் செல்வதும் இவருக்கு இயல்பாயிற்று.[33]

திருக்குறள் அறத்துப்பாலில் 29 இடங்களிலும், பொருட்பாலில் 75 இடங்களிலும், காமத்துப்பாலில் 26 இடங்களிலும் பிறர் உரைகளைச் சுட்டுவர் பரிமேலழகர்.[34]

அறிஞர்கள் நூல்களுக்கு உரை எழுதும்போது தத்தம் காலத்திற்குத் தக, புலமைப் போக்கிற்கும் பார்வைக்கும் தக, கருத்து வேறுபாடுகள் எழுவது இயற்கை. முன்பு எழுதப்பட்ட கருத்துக்கு மாறாகப் புதிய நோக்கில் உரை காண்பது, உரை காண்போருடைய புதிய நோக்கினையும், அவர்தம் கொள்கைத் திறத்தினையும் உலகுக்கு உணர்த்துவதாக அமைகின்றது. பாடலின் சொல்லும், தொடரும், உரைகாரரின் சமய இலக்கியப் பார்வையும், சமூகச் சூழலும் இவ்வகை மாறுபட்ட கருத்துக்களுக்கு இடமளிக்கின்றன.

பொதுவாக உரையாசிரியர்கள் மூல நூலாசிரியரைக் குறை காண்பதில்லை. முதல் நூல் கண்ட முனைவனை அவர்கள் போற்றினர். நூலாசிரியர் குற்றம் செய்யமாட்டார் என்று எண்ணினார்களே தவிர, தங்களைப் போன்ற உரையாசிரியர்கள் தவறு செய்ய மாட்டார்கள் என்று அவர்கள் கருதினாரல்லர். உரை எழுதப் புகுந்த நூலை நன்கு கற்றனர்; பின்னர் அந்நூலுக்குப் பிறர் எழுதிய உரைகளையும் துறைபோகப் பயின்றனர். அவற்றை உரைகல்லில் இட்டனர். முன்னர் எழுந்த உரைகளினின்று மாறுபட்டுத் தாம் காணும் சிறப்புப் பொருளை உலகுக்கு உணர்த்தத் துணிந்தனர். அதன் விளைவாகப் புத்துரைகள் எழுந்தன. வேறு உரையாசிரியனின் கருத்து ஒவ்வாத இடத்துக்குத் தக்க காரணம் காட்டி மிகப் பண்போடும் நாகரிகத்தோடும் மறுக்கத் துணிந்தனர். தன்னுரையும் அவர் உரையும் பொருந்தும் இடங்களில் இரண்டையும் கூறினர். அவர் கூற்றுக்கு விளக்கம் தந்து அமைதி காண இயலுமாயின் அவ்வாறு செய்யவும் தவறினாரல்லர்.[35]

பரிமேலழகர் குறளுரையில் பிற உரையாசிரியர் குறிப்புக்களைச் சுட்டும் இடங்களை இனிக் காண்போம்:

பரிமேலழகர், பிறர் உரையை மறுக்கும்போது மிக நாகரிகமாகத் தம் கருத்துக்களை வெளிப்படுத்துவார். தம்முடைய மறுப்புக்களில் எந்த உரையாசிரியர் பெயரையும் சுட்டாது

அவர்களுடைய கருத்துக்களையே தம் மறுப்புகளுக்கு உரிய தாக்கிக் கொள்வது அவர்தம் திறனாய்வு உள்ளத்தை நன்கு புலப்படுத்துகின்றது. இதனால் கருத்தை மறுப்பது பரிமேலழகர் கொள்கையே அல்லாமல் தனிப்பட்ட முறையில் ஒரு குறிப்பிட்ட உரையாசிரியரை மறுப்பதும் பழிப்பதும் அவர் கருத்தன்று.

பிறர் உரைகளில் தாம் ஏற்கும் கருத்துக்களை வெளிப்படையாகச் சுட்டி ஏற்பார். அதனைக் கீழ்வரும் தொடர்களால் அறியலாம் :

| | |
|---|---|
| உரைப்பாருமுளர் | (721, 723) |
| உரைப்பாருமாயினார் | (995) |
| உரைப்பினுமமையும் | (82, 1001, 1116) |
| பிறரெல்லாம் உரைத்தார் | (817) |

மேலும்,

| | |
|---|---|
| 'பாடமோதுவாருமுளர்' | (816, 943) |
| 'என்பதூஉம் பாடம்' | (1139) |

என்னும் தொடர்கள் பிற உரையாசிரியர்கள் குறளில் ஏற்றுக் கொண்ட பாட வேறுபாட்டையும் தாம் ஏற்றுக்கொண்டதற்கான சான்றுகள் ஆகும்.

இவற்றில் பொருந்தாத பாடவேறுபாட்டையும் அவர் மறுக்கத் தயங்கினாரில்லை. இதனை அறிய,

'அது பாடமன்மை அறிக' (979, 1161)

என்னும் பரிமேலழகரின் தொடர் நன்கு வெளிக்காட்டும்.

பரிமேலழகர் பிறருடைய குறளுரையை நன்கு பயின்று அவற்றுடன் மாறுபடும் நிலையில் தன் கருத்தை வெளிப்படையாகத் தெரிவிக்கின்றார். உரையாசிரியரும் நூலாசிரியரும் மாறுபடும் போக்கை

'மாறுகொள உரைத்தார்' (817)

எனவும், ஆசிரியர் கூறிய இலக்கிய இலக்கண அடிப்படைப் பொருளோடு அவர் மாறுபடும்போது,

'பொருட்டொடர்பு படாமல் உரைத்தார்' (870)

எனவும், அம்மாறுமாட்டைக் குறளின் பாடத்தைக் கொண்டு காட்டும்போது,

'அஃது உரையன்று என்பதற்குப் பாடமே கரியாயிற்று' (208)

எனவும் மூவகையாகக் கூறுகின்றார்.

இனி உரையாசிரியர் கூறிய உரை வழிநின்று அவர்தம் உரையை மறுக்கும்போது, அதில் பொருட்சிறப்பின்மையைச் சுட்டி,

'ஓர் பொருட் சிறப்பில்லாமை அறிக' (1043)

எனவும்,

'அவ்வுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று' (1268)

எனவும் கூறி உரையாசிரியர் நூலாசிரியரினின்றும் விலகிச் செல்வதை;

'தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்' (501)

என வன்மையாகவும் கூறி அவர்தம் அறியாமையை அதற்குச் சுட்டுவர்.

உரையாசிரியர்கள் தம் பொருந்தா உரையை நிலை நாட்ட விரும்புவதையும், அதனைக் குறளோடு இயைக்கும் போது அது இயையாமல் போவதுகண்டு அவர்கள் இடர் உறுவதையும் காட்டுவர் (632).

இவ்வாறு உரையாசிரியர் உரைவழி நின்று அவர் உரையை மூவகையாக மறுப்பார் பரிமேலழகர்.

எனவே உரை மறுப்புக் கூறும்போது நூலாசிரியர் வழி நின்றும், உரையாசிரியர் வழிநின்றும் அறுவகையாக மறுப்பர்.

நொதுமல் நெறியில்நின்று பிறர் கூறிச் செல்லும் உரையை,

'அறவாழி என்பதனைத் தரும சக்கரமாக்கி அதனை யுடைய அந்தணர் என்றுரைப்பாருமுளர்' (3)

என்று குறிப்பிடுவதால் தெரியலாம். இந்நெறியைப் பின்பற்றிக் கூறுவதை மேலும் பல குறட்பாக்களிலும் காணலாம்.[36]

இவ்வறுவகை நெறியில் காணும் பரிமேலழகர் உரை மறுக்கும் திறத்தை ஒரு சான்று கொண்டு காண்போம் :

சலத்தால் பொருள்செய்தே மாக்கல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று

என்னும் குறட்பாவில் 'ஏமாத்தல் ' என்று பரிமேலழகர், பாடங்கொண்டு, ஏமஞ்செய்தல் என்று பொருள் தருவர். ஆனால் பிற உரையாசிரியர்கள் (மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர்) 'ஏமாத்தல் என்று பாடங் கொள்வர். இதனை மறுத்துப் பரிமேலழகர் தரும் உரை வருமாறு :

''பிறரெல்லாம் 'ஏமாத்தல்' என்று பாடமோதி அதற்கு மகிழ்தல் என்றும், இரீஇயற்று என்பதற்கு - வைத்தாற் போலும் என்றும் உரைத்தார். அவர், அவை தன் வினையும் பிறிதின் வினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர்''

பாடவேறுபாட்டினையும், இலக்கண நுட்பத்தினையும் சுட்டி நயமாகப் பிறர் கருத்தை மறுக்கும் உரைநெறிக்கு இதனைச் சான்றாகக் கொள்ளலாம்.

## முன்னொடு பின் மலையாமை காட்டல்

வள்ளுவர் மிகச் சுருங்கிய சொற்களால் குறளை யாத்திருப்பதால் அரிய கருத்துக்களைச் சொல்லும்போது அவற்றுள் சில முன்பின் முரணாக இருப்பதாக ஐயுறக்கூடும். எனவே பரிமேலழகர் அத்தகைய இடங்களைப் பெரிதும் நினைவிலிருத்தி அவை ஒத்த கருத்துக்களைக் கூறுகின்றன எனத் தம் உரையில் நிறுவுவார்.

வள்ளுவர் ஊழ் அதிகாரத்தில்,

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும் (380)

என ஊழின் வலிமையைச் சுட்டுவார், ஆயின் ஆள்வினையுடைமை அதிகாரத்தில்,

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர் (620)

என முயற்சியின் சிறப்பைக் கூறுவார். இவ்விரு கருத்துக் களையும் நன்கு ஆய்ந்துணர்ந்த பரிமேலழகர் தம்சிறப் புரையில்,

'ஊழ் ஒருகாலாக இருகாலாக அல்லது விலக்கலாகாமையின் பலகால் முயல்வார் பயனெய்துவ ரென்பார் 'உப்பக்கம் காண்பர்' என்றார்'

என இரு குறட்பாக்களும் முன்பின் முரண்படாதிருத்தலைத் தெளிவுபடுத்துவார்.

'ஊழ்' அதிகாரத்தில் வள்ளுவர் 'நுண்ணிய நூல்பல கற்றாலும் உண்மை அறிவே மிகும்' (372) என்பர். கல்வி அதிகாரத்தில் 'தொட்டனைத்தூறும் மணற்கேணி போல் மாந்தர்க்குக் கற்றனைத்தூறும் அறிவு' (390) என்றார். இவ் விரு கருத்துக்களும் ஒன்றோடொன்று மாறுபட்டவையல்ல என்பதைக் காட்டப் பரிமேலழகர்,

'இஃது ஊழ் மாறுகொள்ளா வழியாகலின், மேல் உண்மை யறிவே மிகும்' என்றதனோடு மலையாமை அறிக'

எனத் தம் உரை விளக்கத்தால் நிறுவுவர்.

'வள்ளுவர் பகைவரை வெல்லக் 'காலமறிதல்' வேண்டும் (481) என்பார். குடிசெயல்வகை அதிகாரத்தில், ''குடிசெய் வார் காலத்தை நோக்கிச் சோம்பியிருத்தல் கூடாது' (1028) என்பார். எனவே 'இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது' என்ற தொடரும், 'குடிசெய்வார்க்கில்லை பருவம்' என்ற தொடரும் முரண்பட்டவையோ என எண்ணத் தோன்றும். இதனை நுட்பமாக உணர்ந்த பரிமேலழகர்,

''மேல், 'இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது' என்றது உட்கொண்டு 'இவர்க்கும் வேண் டுமோ ?'' என்று கருதினும், அது கருதற்க என்று மறுத்த வாறு'

எனத் தெளிவு படுத்துவார்.

ஊழ், காலம் பற்றிக் கூறியது போலவே அறங்களில் பொய்யாமை (297) கொல்லாமை (323); செயலில் தூங்குதல் (672) தூங்காமை (383); வினைசெயலில் அஞ்சாமை (382) அஞ்சுதல் (428) பற்றிப் பயில்வோருக்கு ஏற்படும் முரண் கருத்துக்களை மலையாது நீக்கப் பரிமேலழகர் உரை துணை செய்யும்.

## குறளுரையில் குறள் மேற்கோள் காட்டல்

பரிமேலழகர் குறளுரையில் குறளின் சொல் தொடரையும் குறட்பாக் கருத்துக்களையும் 75 இடங்களில்[17] எடுத்தாளுவது தனிச்சிறப்பாகும்.

சான்றாக, 'பசுமட் கலத்துள் நீர்' என்னும் 660ஆம் குறளின் தொடரையே 755ஆம் குறட்பாவில் எடுத்தாளுவர்.

உரம் ஒருவற்கு உள்ளவெறுக்கை (600) என்னும் குறட்பாவில் வரும் 'உரம்' என்னும் சொல் அறிவு எனப் பொருள்படுவதை உரனென்னும் தோட்டியான் (24) என்பதனாலும் அறிக' என உரைநூலையே சான்றுகாட்டி விளக்குவர். இக்குறட்பா 716ஆம் குறட்பா உரையிலும் வருவது உளங்கொளத்தக்கது.

## பிற நெறிகள்

உரையில் பிற நூல்களை மேற்கோள் காட்டி விளக்கலும் இலக்கணக் குறிப்புக்கள் தந்து விளக்கலும் பரிமேலழகர் கொண்டுள்ள பிற உரைநெறிகளாக விளங்குகின்றன.

பிற நூல்களை மேற்கோள் காட்டி விளக்கல் இரண்டாம் இயலில் விரிவாக ஆராயப் பெற்றுள்ளது.

இலக்கணக் குறிப்புக்கள் நான்காம் இயலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**குறிப்புக்கள்**

1. **குறள்,** அரசியல், தோற்றுவாய்.
2. அதிகார எண்கள் : 4, 8, (17), 39, 46, (65), (70), 100, 119, 123, 126, அடைப்புக் குறியில் உள்ள அதிகாரங்களில் குறட்பாக்கள் மேற்கோளாகத் தரப் பட்டுள்ளமையைக் குறிக்கும்.
3. அதிகார எண்கள் ; 38, 56, 81, 85, 88, 90, 121, 127, 132.
4. பொறையுடைமை, தோற்றுவாய்.
5. 1000 — 1001 குறள்களிலும் இம்முறை கையாளப் பட்டுள்ளது.
6. 1040 — 1041.
7. வையாபுரிப் பிள்ளை, ச., **தமிழ்ச்சுடர் மணிகள்,** ப. 199.
8. 'குறட்பா வைப்புமுறை அடைவு விளக்க'த்தைக் காணும்போது உரையாசிரியர் தம் வைப்புமுறை வேறுபாடு நன்கு புலனாகும்.
9. **திருக்குறள் மூலமும் மணக்குடவருரையும்,** திருப் பனந்தாள் காசிமட வெளியீடு, ப. 2.
10. வையாபுரிப் பிள்ளை, ச., **தமிழ்ச்சுடர் மணிகள்,** ப. 111 - 112.
11. பெரியகருப்பன், டாக்டர் இராம., 'குறள் வைப்பு முறை பற்றிய குறிப்பு' இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற மூன்றாவது கருத்தரங்கு - **ஆய்வுக்கோவை,** ப. 365.
12. காண்க : **திருக்குறள் மூலம் ஆராய்ச்சிக் குறிப்புக் களுடன்** (பொதிகைப் பதிப்பகம் வெளியீடு) பக் 141-152.
13. அழகரடிகள், **திருக்குறள் அறம்,** ப. 37.
14. சீனிவாச வரதன், டி., இந்தியப் பல்கலைக்கழகத் தமிழா சிரியர் மன்ற மூன்றாவது கருத்தரங்கு - **ஆய்வுக் கோவை,** ப. 337.
15. 323, 372, 582, 947, 1021, 1088, 1173, 1207, 1236.

16. 186, 375.

17. 697, 722, 1027.

18. குறள் 1285.

19. குறள் 15, 415, 467, 473, 493, 494, 574, 602, 704, 717, 720, 759, 779, 817, 825, 829, 842, 845, 871, 895, 904, 927, 941, 958, 1103, 1124, 1168, 1190.

20. இவ்வாறு வருவித்து முடிப்பதை வடநூலார் அத்யாஹார மென்பர். — வை. மு. கோ. குறிப்புரை, குறள் 15.

21. யாப்பருங்கலக்காரிகை 4, மேற்கோள்.

22. நன்னூல் 165.

23. குறள் 159, 282, 309.

24. குறள் 57, 90, 129, 130, 148, 156, 196, 202, 217, 220, 221, 245, 292, 336, 355, 385, 387, 393, 394, 395, 408, 409, 412, 423, 441, 407, 475, 643, 1041, 1072, 1179.

25. மனத்தான் மறுவிலரேனுந் தாஞ்சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர் - புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனந் தீப்பட்டக் கால் — நாலடி 180.

26. கோட்டுப் பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது
வேட்டதே வேட்டதே நட்பாட்சி - தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரு மில் — நாலடி. 215

27. பழமொழி நானூற்றில் வரும் 'ஆ்றுமோ நந்து உழுத வெல்லாம் கணக்கு' (பழமொழி 245) என்னும் தொடர் எண்ணத்தக்கது.

நான்காம் திருமொழியில் (58 உரை) வியாக்கியான உரைகாரர், "புழுக்குறித்தது எழுத்தானாற்போல இங்ஙனே வாய்த்துக்கொண்டு நிற்கக் கண்டதித்தினை" என்று கூறுவதும், திருவரங்கத்தந்தாதியிலும் (95) 'மானத்து வண்டல் உழ ஓர் எழுத்தின் வடிவுற்ற சீர்மான' என வரும் தொடரும், 'நந்து நாகு வண்டு சென்னடைவழி எழுத்தாய் வந்து வீழினும் வீழும்'

(வை. மு. கோ , குறள் 404, குறிப்புரை மேற்கோள்) என்னும் இலக்கியத் தொடரும் இங்கு இவ் உவமையோடு ஒப்புநோக்கத் தக்கன.

28. **சிறுபாணாற்றுப்படை**, 99 - 103 **புறநானூறு** 91.

29 குறள் 101, 188, 205, 283, 319, 419, 420, 437, 500, 501, 539, 546, 636, 639, 660, 662, 710, 787, 809, 816. 821, 864, 938, 943, 953, 958, 979, 999, 1012, 1013, 1040. 1042, 1052, 1056, 1058, 1081, 1111, 1124 1139, 1161, 1178, 11[illegible]0, 1208 1210, 1232, 1269, 1287, 1301,

30. குறள் 500, 501, 636, 660, 662, 979, 1058, 1161.

31. சண்முகம் பிள்ளை, மு , **திருக்குறள் யாப்பு அமைதியும் பாடவேறுபாடும்**, ப. 112.

32. ‘பாடிய சான்றோர் பீடுநன்கு உணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பும் எழுத்துரு ஒக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்
சிற்றறி வினர்க்குத் தெற்றெனத் தோன்ற
மதியின் தகைப்பு விதியுளி அகற்றி
எல்லையில் சிறப்பின் தொல்லோர் பாடிய
அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்
நீள்நிலங் கடந்தோன் தாள்தொழு மரபின்
பரிமேலழகன் உரிமையின் உணர்ந்தே’

— **பரிபாடல் உரைப்பாயிரம்**

33. ...செவ்வி முப்பாலுக்கு
ஓர் உரையின்றி ஒன்பது சென்றும்
ஐயுறவாக நையுறு காலை
குறட்பாத் தமிழ்மனு நூலிற்கு
விழுப்பொருள் தோன்ற விரித்தினிது உரைத்தனன்
பரிமேலழகன்...

— **திருக்குறள் உரைப்பாயிரம்.**

34. அறம் :
3 8, 9, 79, 82, 101, 144. 167. 188, 205, 208, 213, 223 229, 232, 233 242, 254, 278, 283, 290, 297, 299, 319, 327, 324, 337, 338, 369.

பொருள் :
419, 420, 425, 417, 427, 447, 500, 501, 539, 546, 553. 576, 583, 586, 602, 605, 606, 612, 614, 627, 632, 635, 636, 639, 643, 645, 655, 660, 662, 703, 710, 720, 721, 723, 748, 787, 799, 809, 816, 817, 821, 847, 864, 870, 887, 938, 943, 953, 958, 978, 979, 9.0, 995, 999, 1001, 1006, 1010, 1011, 1012, 1013, 1016, 1021, 1032, 1036, 1037, 1040. 1042, 1043, 10.0, 1052, 1056, 1058, 1069, 1070.

காமம் :
1081, 1082, 1091, 1094, 1103 1111, 1116, 1122, 1139, 1151, 1161, 1178, 1180, 1208, 1210, 1221 (2), 1229 1232, 1267, 1268, 1269, 1287, 1301, 1313.

35. மீனாட்சிசுந்தரம், டாக்டர் கா., பன்மையில் ஒருமை, ப 67.

36. குறள் : 3. 8, 9, 82, 101. 114, 167, 188, 205, 213, 223, 229, 233, 254. 278. 283, 290, 297, 299, 337, 369, 419, 420, 425, 427, 437, 447, 539, 553. 583, 586, 602, 605, 606, 612, 614, 627, 635, 639, 645, 703, 710, 721, 728, 748, 787, 799, 809. 816, 817, 821, 854, 887, 938, 943, 953, 958, 990, 995, 999, 1001. 1006, 1012, 1013, 1016, 1032, 1036 1037, 1040, 1050, 1052, 1056, 1058, 1070, 1081, 1082, 1094, 1111, 1116, 1122 1139, 1151, 1161, 1178, 1180, 1208, 1210, 1221 (2), 1229, 1232, 1267, 1269, 1287, 1301, 1313.

37. **அறத்துப்பால்** (36)

24-600, 716 ; 26-971 ; 28-29 ; 36-37 ; 41-44 ; 43-44 ; 43-(9) ; 43-1107 ; 50 240; 56 59 ; 60-268 : 102-237 ; 111-561 ; 140-644 : 116-135 ; 168-1042 ; 190-(13) ; 196 720 ; 207-208 ; 218 913 ; 222-223 ; 238-240 ; 239-240; 265-263 ; 265-305 ; 268-269 ; 279-144 ; 297-323 ; 300.323 ; 350-(36) ; 356-358 ; 357-358 ; 360-311 ; 361-362 ; 373-393.

**பொருட்பால்** (31)

382-383; 383-40; 383-672 ; 385-477; 385-512; 395-1069 ; 435-1173 ; 445-889 ; 481-1028; 483-484 ; 541-573 ; 542-557 ; 581-19, 22 ; 582-753 ; 595-596 ; 596 290 ; 634 (65); 660-755 ; 681-70 ; 746-747 ; 752-953 ; 757-(8) : 784-1086 ; 802-801 ; 803-801 ; 888-847 ; 906-808 ; 934-939 ; 963-1053; 930-978.

**இன்பத்துப்பால்** (8)

1081-1082 ; 1101 - 1326 ; 1122-1141 : 1128-1127 ; 1131-1132 ; 1275 - 1279 ; 1299-76 ; 13 17 1318

**குறிப்பு :** முதலில் குறிக்கப்பட்டுள்ள எண் மேற்கோளாகக் கொள்ளப்பட்ட குறள் எண்; தொடர்ந்துள்ள எண் அம்மேற்கோள் வரும் குறள் ; அடைப்புக் குறியில் உள்ளது அதிகாரத் தோற்றுவாய்: இவை டாக்டர் அ. தாமோதரன் எழுதிய '**திருக்குறள் மேற்கோள் விளக்கம்**' என்னும் நூலினின்று தொகுக்கப்பெற்றன.

# 4

# பரிமேலழகர் உரை இயல்புகளுள் சிறப்பு நெறி

## இலக்கியத் திறனாய்வு நோக்கு

### *திறனாய்வின் வகைகள்*

கலையின் பழமையைப் போல அதைப் பற்றிய திறனாய்வும் பழமையானது. இலக்கியத்தைப் பொறுத்தவரையில் பாடல் அல்லது கவிதை தோன்றியதுமே அதனைக் கேட்போர் சுவைக்கும் இயல்பிலேயே திறனாய்வு தோற்றம் பெறுகிறது. எனினும் வெளிப்படையாக வளர்ந்து செழித்த நிலையில் இலக்கியத்தைச் சுவைப்பதற்கென அறிஞர்கள் சில நெறி முறைகளை வகுத்துக் கொண்டனர். இந்நெறி முறைகள் பிறதுறைப் புலமையால் மேலும் ஊட்டமும் உரனும் பெற்றுத் திறனாய்வுக் கலையை உருவாக்கின.

திறனாய்வு என்னும் கலைச்சொல்லுக்குப் பல்வேறு வரையறைகள் தரப்படுகின்றன. அவற்றுள், 'ஓர் இலக்கியப் படைப்பின்கண் பொதிந்துள்ள இலக்கியச் சிறப்புக்களையெல்லாம் கலை நுணுக்கத்தின் உதவியால் வெளிப்படுத்துவதே சிறந்த திறனாய்வாகும்'[1] என்பது திறனாய்வாளர் பலருக்கும் ஒப்ப முடிந்த கருத்தாகும்.

மேலைநாடுகளில் மிகத் தொன்றுதொட்டே ஒரு தனிக் கலையாக முறைப்படுத்தப்பட்டு வழங்கி வரும் இக்கலையை மூன்று வகையாகப் பாகுபடுத்தி ஆராய்வது மரபு அவை யாவன :

1. விதிமுறைத் திறனாய்வு (Legislat ve Cri icism)
2. கொள்கைவழித் திறனாய்வு (Theoretical Criticism) (அல்லது முருகியல் திறனாய்வு)
3. விளக்கமுறைத் திறனாய்வு (D scriptive Criticism)

என்பனவாம்[2]

**விதிமுறைத் திறனாய்வு**

அவற்றுள் விதிமுறைத் திறனாய்வு என்பது படைப் போனை நோக்கி இவ்வாறு செய்க, இவ்வாறு செய்யற்க என விதித்துச் சொல்வதாகும். தொல்காப்பியப் பொருளதிகாரம் கூறும் இலக்கியப் படைப்பு விதிகள் இவ்வகைத் திறனாய் வுக்குச் சிறந்த சான்றுகளாகும். விதித்தல் வாய்பாடு இவ் வகைத் திறனாய்வினை எளிதில் புலப்படுத்தும்.[3]

**கொள்கைவழித் திறனாய்வு**

இலக்கியத்தின் தன்மை கூறுகள், படைப்பு முறை என் பன பற்றிய கொள்கைகளை வகுத்துக் கொண்டு அவற்றின் அடிப்படையில் ஒரு படைப்பைத் திறனாய்வு செய்வது கொள்கைவழித் திறனாய்வு எனப்படும். இலக்கிய எழில், இலக்கிய இன்பம் என மனத்தளவால் சார்த்தி உணரப்படும் முருகியல் இன்ப நுகர்ச்சியே இவ்வகைத் திறனாய்வுக்கு அடிப் படையாகும். இவ்வகைத் திறனாய்வு பெரும்பாலும் திற னாய்வு செய்யும் அறிஞர்களை நோக்கியது.

**விளக்க முறைத் திறனாய்வு**

(படைப்புக்கும் நுகர்வோர்க்கும் இடையில் நின்று) நுகர் வோரை நோக்கிப் படைப்பின் சிறப்புக்களை எல்லாம் அவர் தம் கொள்ளுந்திறனுக்கேற்ப விளக்கி உரைத்துச் சுவைக்கச் செய்வது விளக்க முறைத் திறனாய்வு எனப்படும். நுகர் வோரை நோக்குவதும் படைப்பைச் சுவைத்து இன்புறுவ தற்குத் துணைநிற்பதும் இத்திறனாய்வு வகையின் அடிப் படையாகும்.

ஏனைய இரண்டினும் இளையதாயினும் இன்றுவரை பெரு வழக்கில் இருப்பதும் மிக அதிகமான நூல்களைப் பெற்றிருப் பதுமான திரனாய்வு வகை விளக்க முறைத் திறனாய்வே ஆகும்.

நுகர்வோர் தொகையும் தகுதியும் திறனாய்வாளரின் நோக்கமும் சார்பும் எனப் பல்வேறு காரணம் பற்றி இத்திற னாய்வு பல்வேறு கோணங்களைப் பெறலாயிற்று. அறிவியல் வளர்ச்சி; அதன் காரணமாக விளைந்த பன்னாட்டுப் பன் மொழிப் பண்பாட்டு உறவுகள் என்பனவற்றால் இக்கோணங் கள் மேலும் நுல்லியமாகப் பகுபட்டு ஆழ்ந்து விரிந்தன.

மேலும்; படைப்போனின் வாழ்க்கை முறைகள்; விருப்பு வெறுப்புக்கள் ஆகிய தன்வரலாற்றுக் குறிப்புக்கள்;படைப்பைச் செய்வதற்கான அவனுடைய நோக்கங்கள்; அப்படைப்பை நுகர்வோரின் சமுதாயத் தகுதி; இவை எதனையும் கருதாது, படைப்பை மட்டுமே கருதி ஆயும் கொள்கை என நோக்கும் பல்வேறு பார்வைகளாலும் இவ்வகைத் திறனாய்விலிருந்து பல்வேறு கிளைகள் தோன்றின.[4]

இம்மூவகைத் திறனாய்வு நெறிகளுள் விளக்க முறைத் திறனாய்வின் தன்மைகள் நம்முடைய தமிழ் இலக்கிய உரையாசிரியர்களின் நெறி முறைகளோடு பெரும்பாலும் பொருந்துவதைக் காணலாம்.

திறனாய்வு என்ற இலக்கிய ஆய்வு நெறி முறையான (A Formal Discipline) ஒரு கலையாகத் தமிழில் தோன்றி வளர்ந்தது என்பதற்குரிய தெளிவான சான்றுகள் நமக்குக் கிடைத்தில. எனினும் இத்தகைய திறனாய்வுப் பணியைத் தமிழ் இலக்கியவாணர்கள் யாரும் மேற்கொள்ளவில்லை எனக் கருதுவது பொருந்தாது. நம் இலக்கிய உரைகளை நுணுகி ஆயுமிடத்து அதனை இயற்றிய அறிஞர்களும் திறனாய்வாளர்களே எனக் கொள்ளுவதில் பிழையேதுமில்லை எனலாம்.

ஒரு இலக்கியப் படைப்பின்கண் பொதிந்துள்ள இலக்கியச் சிறப்புக்களை எடுத்து விளக்கி,சுவைக்கும் திறனை வளர்த்துக் கற்போர்க்குத் தெளிவும் இலக்கிய இன்பமும் அளிப்பதே சிறந்த திறனாய்வின் பணி என்பர்.[5] இவ்வகை இலக்கியப் பணியைச் செய்வதில் திறனாய்வாளன் ஆசானாக நின்று ஆணையிடுவதை விட விளக்காக நின்று வழிகாட்டுவதே சிறந்த முறை என்பர் அறிஞர்.[6]

வளம் நிறைந்த வற்றாத இலக்கிய மரபும் புலமை மரபும் உள்ளவிடத்து அவற்றைக் காக்கின்ற பண்பும் திறனாய்வாளனுக்குரிய கடமைகளுள் ஒன்று என்பர் டி. எஸ் எலியட்.[7]

மேலும் தொடர்ந்து வரும் இலக்கிய வரலாற்று வளர்ச்சியை உள்ளவாறு உணரும் திறனும், அவற்றுள் சிறந்தன இவை எனத் தெரியும் தகுதியும் அவை போல்வன பிறவற்றைப் பிறிதோரிடத்தும், காலத்தும் கண்டவிடத்துப் பொருத்தி விளக்கும் நுண்மாண் நுழைபுலமும் உடையவராகத் திறனாய்வாளர் இருத்தல் வேண்டும் என்பர்.[8] இத்தகைய விளக்க முறைத் திறனாய்வின் கருவிகளாக ஒப்பாய்வும் பகுப்பாய்வும் விளங்குகின்றன.

திறனாய்வுக்குரிய நூலினைத் துல்லியமாக அளந்து குறை நிறைகளைக் காட்டும் திறமை திறனாய்வாளர்க்கு வேண்டும் என்பர். பெரும்பாலும் உரையாசிரியர்கள் மூல நூலாசிரியரிடம் குறை காணாத நோக்கினையே மேற்கொண்டனர்.

தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் ஊன்றிக் கற்ற உரையாசிரியர்கள் இவை எவ்வகைக் குற்றமும் கொண்டவையல்ல என்ற உறுதி கொண்டனர் தொல்காப்பியம் விதிக்கும் இலக்கணங்களுக்கு ஏற்பவே 'சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன என்ற கருத்து அவர்கள் கருவாக அமைந்தது சங்க இலக்கியங்கள் தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியங்கள் என்று திண்மையாக எண்ணினர். எனவே, உரையாசிரியர்கள் இலக்கண இலக்கியம் ஆக்கிய ஆசிரியர்கள் மீது குற்றம் காண விழையவில்லை.[9]

குற்றமாயவற்றையும் இரண்டாந்தரமாயவற்றையும் கடிந்தொதுக்கும் பணி திறனாய்வாளனின் முதற்பணி அன்று. அது இரண்டாம் தரமான பணியே என்பர் திறனாய்வறிஞர்.[10] நல்ல நூல்களை அவற்றின் புகழுக்கான காரணங்களை ஆய்ந்தறிந்து புகழ்வதே திறனாய்வாளனின் முதற்பணி என்பர். சுருங்கக் கூறின் முதல் தரமான நூலைப் புகழ்ந்து பேசுவதே முதல் தரமான திறனாய்வு என்பதாகும்.

புகழ்ந்து பேசுதல் என்பது அந்நூலின் புகழைத் தானே எடுத்து வகைப்படுத்திக் கூறுதல் எனக் கொள்ளலாகாது. ஆயின் பொருளை விளக்கும் விதத்தில், நூற்பொருள் தெளிவுபட்டுப் படிப்போரின் உள்ளத்தே இலக்கிய இன்பம் விளைய, நூலின் பொருளும் விளங்கும். ஈண்டு நூற்பொருள் என்பது சொற்பொருள் எனக் கொள்ளலாகாது. நூலால் விளையும் பயன் என்பதே கருத்து. இப்பயனைப் படிப்போன் உணர்ந்து இன்பமுறுமாறு (enjoy by understanding) செய்வதுதான் திறனாய்வாளனின் தலையாய கடனாகும். திறனாய்வாளன் புகழ்ந்து கூறுதல் என்பதன் உட்பொருள் இதுவேயாகும். உணர்ந்தின்புறுவோர் வாயிலாக நூலின் சிறப்பு நன்கு பரவுமாகலின் படிப்போர் உணர்ந்து இன்புறச் செய்வதே முதல்தரமான திறனாய்வாளனின் பணியாகும்.

இந்நெறியில் தமிழ் உரையாசிரியர்கள் நல்ல நூல்களைத் தேர்ந்து, பயில்வோருக்கு நூலின் பொருளும் இன்பமும் விளங்குமாறு திறனாய்வுப் பணியினைச் செய்தனர் எனலாம்.

இவ்வகையில் உரையாசிரியர்கள் தோன்றவில்லையானால் பழந்தமிழ் நூல்களின் போக்கை உணரவும், பொருளைத் துய்க்கவும் பெரிதும் இடர் ஏற்பட்டிருக்கக்கூடும்.

இதுவரை சிந்தித்த திறனாய்வு பற்றிய தன்மைகளும் இலக்கணங்களும் எந்த அளவிற்குப் பரிமேலழகரின் உரையில் பொருந்தி உள்ளன என்பதைக் காண்போம் :

## திறனாய்வின் சில கூறுகளும் பரிமேலழகரும்

ஆழ்ந்த வாழ்க்கையனுபவமும் மேற்கொண்ட நூலைப் பற்றிய துறை, தனிநூல் ஆகியவற்றில் மிகுந்த புலமையும் திறனாய்வாளர்க்கு இன்றியமையாததாகும்.

இவ்வகையில் பரிமேலழகரின் குறளுரையினின்று அவருடைய ஆழ்ந்த வாழ்வனுபவம் நமக்குப் புலனாகின்றது. சான்றாக இடும்பையைப் பற்றிய அவர்தம் கருத்தினைக் காண்போம்:

> ''இடும்பையாவது உள்ளத்து ஒரு கோட்பாடன்றிப் பிறிதில்லை என்பதூஉம் அது மாறுபடக் கொள்ள நீங்குமென்பதூஉம்'' (622)

என்னும் குறளுரையில் வரும் பரிமேலழகர் கூற்று அவர் கண்ட வாழ்வனுபவ மொழிகள் ஆகும்

விருந்தோம்பும் நிலையில் பரிமேலழகர் தன் அனுபவம் வெளிப்படும் வகையில் 'செய்மைக்கட் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்ட வழி நன்றாற்றலும்' (90) என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்று அனுபவ நிலைகளை (இன்முகம் காட்டல், இன்சொற் கூறல், விருந்தோம்பல்) வெளிப்படுத்துவார்.

'ஒருநாளை இன்பம்' என்பதை விளக்கும்பொருட்டு. ''அந்நாள் ஒன்றினும் கருதியது முடித்தேம் எனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம்' (156) எனக் கூறும்போது அகத்தே கருதும் கருத்தையும் தருக்கி நிற்கும் அகநிலையையும் அது பொய்யின்பம் என உணரும் உண்மையனுபவமும் புலப்பட உரை வகுப்பார்.

பொருட்பெண்டிரின் பொய்ம்மை முயக்கத்தை,

"பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதானை முயங்குங் கால் அவர் குறிப்பு கூலிக்குப் பிணமெடுப்பார் காணப் படாததோரிடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போடு ஒக்குமெனவே, அகத்தால் அருவராநின்றும் பொருள் நோக்கிப் புறத்தார் தழுவுவர்" (913)

என அப்பெண்டிர் தம் அகநிலைக் குறிப்பை நன்கு காட்டுவது உளங்கொளத் தக்கது.

இவை தன்னனுபவத்தாலும், பிறர் அனுபவத்தாலும், கருத்தளவையாலும் பெற்ற வாழ்க்கையனுபவத்தைக் காட்டுகின்றன.

நீதி இலக்கிய நூலாகிய[11] குறளின்கண் பொதிந்திருக்கும் அறநூல் கருத்துக்களையும், பொருள் நூல் கருத்துக்களையும், இன்பநூல் மரபுகளையும் இருமொழிப் புலமை உணர்வோடு அவர் ஆய்ந்திருக்கும் உரைநெறிமுறை அவர் ஆய்விற்கு மேற்கொண்ட நூலைப் பற்றிய துறைப்புலமையைத் தெளிவாக்கும்.

ஆய்வுக்கு மேற்கொண்ட நூலேயன்றிச் சங்கநூல்கள், காப்பியங்கள், கீழ்க்கணக்கு நூல்கள், சமய, இலக்கண, பிற துறை ஆகிய நூல்களில் அவர் பெற்றிருந்த ஆழ்ந்த புலமையையும் இங்கு எண்ணத்தக்கது. (இயல் 2 இல் இவை பற்றிய விரிவான விளக்கம் காண்க).

எனவே திறனாய்வாளர்க்கு வேண்டிய ஆழ்ந்த வாழ்வனுபவம் மேற்கொண்ட நூலைப் பற்றிய துறைப்புலமை, தனிநூல்களில் ஆழ்ந்த புலமை ஆகியவற்றை உரையாசிரியர் பரிமேலழகரும் பெற்று விளங்கும் பான்மை நன்கு புலப்படுகின்றது.

திறனாய்வின் தலையாய நோக்கம், மேற்கொண்ட இலக்கியத்தைத் தெளிவாகவும் நூற்பொருளைச் சுருக்கமாகவும் விளக்குவதேயாகும். திறனாய்வால் படிப்போர்க்கு நூல் பற்றிய அறிவுத்தெளிவும், அதனால் விளையும் இன்பமும், அதன் காரணமாக நூலினிடத்துக் கூடிய ஆர்வமும் மிகவேண்டும்.

இவ்வகையில் பரிமேலழகர் குறளுரையில் முன்னுரையாகக் கூறும் பால் இயல் விளக்கங்களும், அதிகாரத் தோற்றுவாய் களும் நூற்பொருளைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்கிய பான்மையினைத் தெளிவுறுத்துவன.

சுருங்கிய யாப்பால் தன்னுள் அரும்பொருள்களைச் செறிவுடன் கொண்ட குறளை அவர் தரும் ஆய்வுரையினால் பயில்வோர் உணர்ந்து தெளிவு பெறமுடிகின்றது.

தேயமிடையிட்டவற்றையும் காலமிடையிட்டவற்றையுங் காணும் ஞானக்கண்ணுடைமையிற் கற்றாரைக் 'கண்ணுடைய ரென்பவர்' என்றும், அஃதின்றி நோய் முதலியவற்றால் துன்பஞ் செய்யும் ஊனக்கண்ணே உடைமையிற் கல்லாத வரைப் 'புண்ணுடையர்' என்றும் கூறினார்' (393) என்று கண், புண் ஆகியவற்றிற்குப் பரிமேலழகர் அளிக்கும் சொற் பொருள் நயங்கள் பயில்வோரை இன்புறுத்துவதுடன், இவ் அரிய நுட்பங்கள் மூலநூலை மேலும் ஆர்வத்துடன் அணுகத் துணைபுரிகின்றன.

இங்ஙனம் பரிமேலழகர் தரும் அரிய திறனாய்வுக் குறிப்புக் கள் பயில்வோர்க்குத் தெளிவும் இன்பமும், நூலின்மீது ஆர்வமும் விளைக்கின்றன.

### சிறப்பை விளக்கல்

கலை நுணுக்கத்தில் புதைந்து கிடக்கும் கூறுகளை யெல்லாம் வெளிப்படுத்தல் திறனாய்வாளரின் பணியாகும். படைப்போன் செறிவாகப் படைத்த படைப்புகளின் திட்பமும் நுட்பமும் நோக்கி அவற்றுள் காணக்கிடக்கும் பல்வேறு திறங் களையும் நயம்பட எடுத்துக்கூறும் ஆற்றல் திறனாய்வாள னுக்குத் தேவை.

பரிமேலழகரின் குறட்பா உரையில் இக்கூறுகள் அமைந்த வாற்றைச் சான்று ஒன்றால் காண்போம் :

தலைவனைப் பிரிந்து ஆற்றாது வருந்துகின்ற தலைவி யிடத்துத் தோழி 'தலைவியர் பலரும் பிரிவாற்றியிருப்பர்; அது நீ செய்கின்றிலையே' எனக் கூறுகின்றாள். தலைவி இதற்கு மறுமொழி உரைப்பதாகப் பின்வரும் குறட்பா அமைந்துள்ளது.

அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர் (1160)

தலைவி குறிப்பாக உணர்த்தும் மறுமொழியையும், தலைவியின் ஆற்றாத துன்ப நிலையை ஓசைவகையால் உணர்த்தும் வள்ளுவரின் நுட்பத்தையும் பரிமேலழகர் உரை நன்கு காட்டும் :

> பண்டையிற் சிறப்பத் தலையளி பெற்று இன்புறுகின்ற எல்லைக்கண்ணே அஃது இழந்து துன்புறுதற்கு உடம்படுதல் அரிய தொன்றாகலின் அரியதனைச் செய்தென்றும், செல்லும் தேயத்து அவர்க்கு யாது நிகழுமென்றும் வருந்துணையும் யாம் ஆற்றியிருக்குமாறு என்னென்றும், அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்துமென்றும், இவ்வாற்றானிகழும் கவலை மனத்து நீங்காதாகலான் 'அல்லல் நோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழுங் காமவேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்றலென்றிவை முதலாக வந்து, அதனை வளர்ப்பனவும் ஆற்றல் அரியவாகலின் 'பிரிவாற்றி' என்றும், தங் காதலரையின்றி அமையா மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர் வாழ்வார் ஒருவருமில்லையென்பது குறிப்பால் தோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என்றுங் கூறினாள்...... செய்து நீக்கி ஆற்றியென்பன ஓசைவகையான், அவ்வவற்ற தருமை யுணர நின்றன... யானும் இறந்துபடுவல் என்பது கருத்து.

என்பது அவ்வுரையாகும். தலைவியின் உணர்ச்சியை வள்ளுவர், செய்து, நீக்கி, ஆற்றி என்னும் சொற்களால் அவளுடைய அரிய நிலையைச் சுட்ட, அக்கூறுகளை நன்கு படம் பிடித்துக்காட்டும் வகையில் பரிமேலழகர் உரை அமைந்துள்ளது எண்ணுதற்குரியது.

இத்தகைய அரிய நயங்களை வெளிப்படுத்தும் நெறியில் பரிமேலழகர் உரை விளங்குவதைப் பல அறிஞர்கள் போற்றியுள்ளனர் என்பது ஈண்டு கருதத்தக்கது.[12]

### சுவைக்கும் திறனைப் பெருக்கல்

நூலைப் படிப்போர் திறனாய்வுக் கருத்துக்களை நன்கு உணர்ந்து அவற்றின் வாயிலாக நூலை மேலும் சுவைத்துப் பயிலத் திறனாய்வு துணைநிற்றல் வேண்டும்.

இவ்வகையில், 'சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல்' (118) என்னும் குறட்பாவிற்கு அமைந்த

> ''உவமையடையாகிய சமன் செய்தலும், சீர்தூக்கலும் பொருட்கண்ணும் பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக் கண்ணும் கூட்டிச் சான்றோர் சீர்தூக்கலாவது தொடை விடைகளான் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறு உணர்தலாகவும் ஒருபாற் கோடாமையாவது அவ்வுள்ளவாற்றை மறையாது பகை, நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதலாகவும் உரைக்க''

என்னும் சிறப்புரை உவமை பொருள் அடிப்படையில் அவற்றிற்குத் தனித்தனியே உரைத்த பண்புகளை மற்றவற்றுடன் இணைத்துப் பொதுப்பண்பாக்கி, அதன் வாயிலாக நடுவு நிலையைக் கற்போர் மனங்கொள்ளுமாறு நிலைநாட்டுந் திறனைக் காண்கின்றோம்.

**ஒப்பாய்வு**

தாம் மேற்கொண்ட நூலின் பொருளை இனிது விளக்குதற் பொருட்டுத் திறனாய்வாளன் பிற நூல்களினின்றும் ஒப்புமைப் பகுதிகளைக் காட்டிச் செல்வது உண்டு. தாம் மேற்கொண்ட நூலினுள்ளேயே காணும் ஒப்புமைப் பகுதிகளைத் தொடர் புறுத்திக் காட்டலும் உண்டு.

இருபத்தைந்திற்கு மேற்பட்ட இலக்கிய இலக்கண நூல்களையும், மனு முதலான சில வடமொழி நூல்களையும் தாங்கொண்ட குறளைவிளக்குதற்காக ஒப்புமைப்படுத்திக் காட்டும் தன்மையினால் பரிமேலழகர் இத்தகைய ஒப்பாய்வில் சிறந்து நிற்பதைக் காண்கிறோம்.

சான்றாக,

> அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையர்
> என்பும் உரியர் பிறர்க்கு (72)

என்னும் குறளுரையில்,

> 'தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
> தபுதிகண்டு அஞ்சிச் சீரை புக்கோன்'[11]

என்னும் புறநானூற்றுப் பாடற் பொருண்மையை ஒப்பிட்டு விளக்குவதைக் காணலாம்.

மேலும், 'புணர்ச்சி பழகுதல்' என்னும் குறட்பாவின் (785) விளக்கவுரையில்,

"பலகாற்கண்டும் சொல்லாடியும் மருவுதல், இவ்விரண்டும் இன்றி, கோப்பெருஞ்சோழனுக்கும், பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சி ஒப்பின் அதுவே உடன் உயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும் என்பதாம்."

என்னும் புறநானூற்றுப் பாடற்செய்தியைப் 'புணர்ச்சி'யின் விளக்கத்திற்கு ஒப்பிட்டுக் காட்டுவர்.

வடநூல்களோடு ஒப்பாய்வு செய்தமைக்கு, பரிமேலழகர் குறளுரையில், 'வடநூலாரும் விதனமென உடன் கூறினார் (920) எனக்காமாந்தகத்தினின்று குறிப்பிடுவதையும்,[14] மனுஸ்மிருதியில் கூறப்படும் கருத்தை உரைப்பதையும்[15] சான்றுகளாகக் கொள்ளலாம். மேலும் அர்த்தசாஸ்திரத்தில் வந்துள்ள நால்வகை உபதைகளைக் குறிப்பிடுவதும் கருதத்தக்கது. வள்ளுவர் தம் குறளில் கூறாத **உபதை வகை**களைப் பரிமேலழகர் பின்வருமாறு (50 ) கூறுவர் :

"அவற்றுள், **அற உபதையாவது**, புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரால் 'இவ்வரசன் அறவோன் அன்மையின் இவனைப் போக்கி அறனும் உரிமையும் உடையான் ஒருவனை வைத்தற்கு எண்ணினம், இது தான் யாவர்க்கும் இயைந்தது, நின் கருத்து என்னை' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். **பொருள் உபதையாவது**, சேனைத்தலைவனையும் அவனோடு இயைந்தாரையும் விட்டு, அவரால் 'இவ்வரசன் இவறன் மாலையனாகலின் இவனைப் போக்கிக் கொடையும் உரிமையும்உடையான்ஒருவனை வைத்தற்கு எண்ணினம் இதுதான் யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்து என்னை' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். **இன்ப உபதையாவது**, தொன்றுதொட்டு உரிமையொடு பயின்றாள் ஒரு தவமுது மகளை விட்டு, அவளால் 'உரிமையுள் இன்னாள் நின்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்க வேண்டும் என்று என்னை விடுத்தாள், அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமே யன்றிப் பெரும்

பொருளும் கைகூடும்' எனக் குளுறவோடு சொல்லு வித்தல். அச்ச உபதையாவது, ஒரு நிமித்தத்தின் மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவன் இல் லின்கண் அழைப்பித்து 'இவர் அறைபோவான் எண் ணற்குக் குழீஇயினார்' என்று தான் காவல் செய்து, ஒரு வனால் 'இவ்வரசன் நம்மைக்கொள்வான்' சூழ்கின்றமை யின் அதனை நாம் முற்படச் செய்து நமக்கினிய அரசன் ஒருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்து என்னை 'எனச்சூளுறவோடு சொல்லுவித்தல். இந்நான்கினும் திரிபிலனாயவழி, எதிர்காலத்தும் திரி பிலன் எனக் கருத்தளவையால் தெளியப்படும் என்பதாம். இவ்வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவர் ஓதியது அறியாது பிறரெல்லாம் இதனை 'உயிரெச்சம்' எனப் பாடம் திரித்துத் தந்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார் ''

இதனால் பரிமேலழகர் ஒப்பாய்வு நோக்கோடு குறளை அணுகிய பான்மை புலனாகின்றது.

**குறள் உரையில் குறள் மேற்கோள்**

ஒப்பாய்வு நோக்கோடு குறளையே தம் உரையில் ஒப்புக் காட்டி விளக்கம் தரும் பான்மையும் பரிமேலழகர் உரைநெறி யில் காணப்படுகின்றமை முன்னர்க் காட்டப்பட்டது.

'தம்மோடு பயின்றார் பிறரை இடுக்கண் செய்துழி அவரைக் கண்ணோடி ஒறாதார்க்கு முறை சிதைதல் மேல்' ஓர்ந்து கண்ணோடாது' (541) என்ற முறையிலக் கணத்தானும் பெற்றாம்'

என 541ஆம் குறளை 578ம் குறள் விளக்கவுரைக்குப் பயன் படுத்துவர்.

**பிறர் உரை**

தம் உரையைத் தெளிவுபடுத்துதற்கும் வலியுறுத்துதற்கும் ஏனைய உரையாசிரியர்களை ஒப்பிட்டுக் காட்டும் பாங்கும் பரிமேலழகரிடம் இருப்பதைக் காணலாம். அங்ஙனம் ஒப்பிட்டுக் காட்டும்பொழுது தம் உரைக்கு அரண் செய்வனவற்றை வாளா சுட்டியும், முரண்படுவனவற்றை மறுத்தும் ஒப்பாய்வு செய்வர்.

அரண் செய்வதற்குச் சான்றாக, 799ஆம் குறளுக்கு,

"இனி அவன் தானே ஆக்கிய கேடு, தன்னை அடுங்கால் உள்ளினும் அக்கேட்டினும் சுடும் என்று உரைப்பாரும் உளர்"

என வரும் பிறர் உரையைக் குறிப்பிடுவதைக் கூறலாம்.

தம் உரையோடு முரண்படும் உரையை,

"இனி, இதனை நாள் என்பது ஒரு பொருள்போலத் தோன்றி உயிரை ஈர்வதொரு வாளாம் என்று உரைப்பாரும் உளர், என என்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும் ஒன்றுபோற் காட்டி என்பதற்கு ஒரு பொருட் சிறப்பின்மையானும் அது என்பது குற்றியலுகரம் அன்மையானும் அஃதுரையன்மை அறிக" (334)

என ஒப்பிட்டு மறுப்பதையும் காணலாம்.

இதனால் பரிமேலழகர் பிற நூல்களினின்றும் தாம் உரை எழுத மேற்கொண்ட நூலினின்றும், பிற உரைகாரர் குறிப்பினின்றும் ஒப்புநோக்கித் திறனாய்வு செய்தபான்மை தெளிவாகின்றது.

### பகுப்பாய்வு

தாம் மேற்கொண்ட இலக்கியத்தின் உயிரியத் தன்மையை (Organic Unity) உணர்ந்து, அதன் கூறுகளைப் பாகுபடுத்தி, அவை ஒன்றோடொன்று தொடர்புபட்டுப் பொதுப்பொருண்மைக்கு இயைய விளக்கிநிற்கும் பாங்கினை ஆராய்வது பகுப்பாய்வு எனப்படும்.

இவ்வகையில் பரிமேலழகரும் குறளின் முழுத் தன்மையை உணர்ந்து இயல் பாகுபாட்டையும், ஒவ்வொரு இயலுக்கும் உரிய அதிகாரப் பாகுபாட்டையும், ஒவ்வொரு அதிகாரத்துள்ளும் பொருண்மை பற்றி அமைந்த குறட்பாகுபாட்டையும் தெற்றென உணர்ந்து பகுப்பாய்வு செய்திருப்பதைக் காண்கிறோம்.

இயல் பாகுபாட்டிற்குச் சான்றாக,

"இனி, அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவு என்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதிபயப்ப

> உலகநடையொடு ஒப்பும் ஒவ்வாமையு முடையவாக்கிக் கூறுகின்றார். அக்கைகோளிரண்டனுள்ளும் களவாவது — பிணிமூப் பிறப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மையராய் உருவுந்திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முளொப்புமுடையராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமன்றிப் பால் வகையால் தாமேயெதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை, ஏழதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற் கண் தகையணங்குறுத்தல் கூறுகின்றார்''

என வரும் காமத்துப்பாலிற் களவியல் பகுப்பாய்வுரையைக் கூறலாம்.

இயலுக்குரிய அதிகாரப் பாகுபாட்டுப் பகுப்பாய்வாகப் பரிமேலழகர் அங்கவியலைப் பகுப்பதைச் சான்றாகக் கொள்ள லாம். 'அரசியல் நடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்கள் ஆறனது இயல்பு முப்பத்திரண்டு அதிகாரத்தான் கூறுவான் எடுத்துக்கொண்டு, அவையாறனுள்ளும் காவற் சாகாடு உகைத்தற்கண் அவ்வரசற்கு இணையாய அமைச் சனது இயல்பு பத்து அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்' என அதிகாரப் பாகு பாட்டைப் பகுப்பர்.

ஒவ்வொரு அதிகாரத்துள்ளும் அமைந்த பொருண்மைப் பாகுபாட்டிற்குச் சான்றாக அவாவறுத்தல் அதிகாரத்தில் அவர் பகுத்துத் கூறுவனவற்றைக் காண்போம் :

அவாவறுத்தல் அதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக் களின் கருத்துக்களையும் தொகுத்து,

| | | |
|---|---|---|
| 1 | பிறப்பிற்கு அவா வித்து ஆதல் கூறப் பட்டது | 361 |
| 2. | வேண்டாமையின் சிறப்பு இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது | 362 — 363 |
| 3. | வீட்டிற்குப் பரம்பரையான் அன்றி நேரே ஏது என்பதூஉம் அது வரும்வழி யும் இதனால் கூறப்பட்டன | 364 |

4. அவா அறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும் எதிர்மறை முகத்தானும் கூறப்பட்டது 365

5. அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறம் என்பதூஉம் கூறப்பட்டது 366

6. அவா அறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது 367

7. அவாவே துன்பத்திற்குக் காரணம் என்பது கூறப்பட்டது. 368

8. அவா அறுத்தார் வீட்டின்பம் உடம்பொடு நின்றே எய்துவர் என்பது கூறப்பட்டது 369

9. வீடாவது இது என்பதூஉம், அஃது அவா அறுத்தார்க்கு அப்பொழுதே உளதாம் என்பதும் கூறப்பட்டன 370

என ஒன்பது வகையாகப் பரிமேலழகர் வகைதொகை செய்வர் இப்பகுப்பாய்வில் அதிகாரப் பொருண்மை ஒன்றோடொன்று இயையப் பல்வேறு கூறுகளாகப் பகுத்து விளக்குவதால் பரிமேலழகர் பகுப்பு நெறி நன்கு புலனாகின்றது.

இனி ஒரு குறளின் பொருளை விளக்குமிடத்தும் அப்பொருளின் தன்மைக்கேற்பத் தத்துவம், தருக்கம் முதலிய பிறதுறைப் பொருள்களின் அடிப்படையில் பகுந்து விளக்குவதைக் காணலாம். சான்றாக, 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்' (355) என்னும் குறளுக்கு உரை காணுமிடத்து,

''பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது என்றவாறாயிற்று. அஃதாவது கோச்சேரமான் யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை' என்றவழி, அரசன் என்பதோர் சாதியும், சேரமான் என்பதொரு குடியும், வேழ நோக்கினையுடையான் என்பதோர் வடிவும், சேய் என்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பதோர் சிறப்புப் பெயரும், ஒரு பொருளின்கண் கற்பனை ஆகலின், அவ்வாறு உணராது, நிலம் முதல் உயிர் ஈறாகிய தத்துவங்களின் தொகுதி என உணர்ந்து, அவற்றை நிலம் முதலாகத் தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக் கொண்டு சென்றால், காரண காரியங்கள்

> இரண்டும் இன்றி முடிவாய் நிற்பதனை உணர்தலாம். 'எப்பொருள்' என்ற பொதுமையான், இயங்குதிணையும் நிலைத்திணையும் ஆகிய பொருள்கள்எல்லாம் இவ்வாறே உணரப்படும். இதனான், மெய் உணர்வினது இலக்கணம் கூறப்பட்டது'' (355)

எனச் சாதி, குடி, வடிவு, இயற்பெயர், சிறப்புப் பெயர் எனப் பல்வேறாகத் தத்துவ அடிப்படையில் பகுப்பாய்வு செய்து, மெய்ப்பொருள் காணத் துணைநிற்பர்.

இதுகாறும் கண்டவற்றால் திறனாய்வின் வகைகள் இன்ன என்பதும், திறனாய்வுக் கலையின் இன்றியமையாத அடிப்படைப் பண்புகள் இவை என்பதும், இலக்கிய உரையாசிரியர்கள் பெரும்பாலும் விளக்க முறைத் திறனாய்வு நெறியை மேற்கொண்டனர் என்பதும் அவர்களுள் பரிமேலழகர் குறள் உரை இத்திறனாய்வுப் பண்புகளைக் கொண்டு விளங்குகிறது என்பதும் ஒருவாறு தெளிவாகின்றன,

## இலக்கண நோக்கு

தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும் கூறும் எழுத்து, சொல், பொருள், அணி, இலக்கண மரபுகள் சாலப் பழமை வாய்ந்தவை, மூலநூலுக்கு உரை காணப் புகும் உரையாசிரியர்கள் மூலநூல் தோன்றிய காலத்திற்குப் பல நூற்றாண்டுகட்குப் பின்னே தோன்றியவர்கள். பழைய மரபுகளையும் இலக்கண ஆட்சிகளையும் முற்ற அறிந்தவரே பொருளை நன்கு உணர்வர். எனவே உரையாசிரியர்க்கு இவ்விலக்கண நூல்கள் கூறும் மரபுகளும் திரிபுகளும் பற்றிய அறிவு இன்றியமையாததாகும்.[16] இலக்கண அறிவின் துணைகொண்டே இலக்கியங்களில் அமைந்து கிடக்கும் சொல், தொடர், பொருள் முதலியவற்றின் நுட்பத்தை வெளிப்படுத்த இயலும்.

பரிமேலழகரின் உரைநெறிகளுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது அவர்தம் உரையில் காணப்பெறும் இலக்கணக் குறிப்புகளேயாகும். பொருள்விளக்கத்திற்காக இன்றியமையாத இடங்களிலெல்லாம் இலக்கணக் குறிப்பைச் சுட்டிச் செல்லும் இயல்பு உடையவர். எனவே இவர்தம் உரையை 'இலக்கண உரை' என்றே போற்றிப் பதிப்பித்தவர்களும் உண்டு. 1885ஆம் ஆண்டில் திருக்குறள் பரிமேலழகர் உரையைப்

பதிப்பித்த திரு. முருகேச முதலியார் அவர்கள், 'திருக்குறள் மூலமும் பரிமேலழகர் இலக்கண உரையும்' என்றே தலைப்பிட்டுப் பதிப்பித்தது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.[17]

பரிமேலழகர் தம் உரையுள் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, இறையனாரகப்பொருள் ஆகிய இலக்கண நூல்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டி விளக்கம் தந்திருக்கிறார், எழுத்து, சொல், பொருள், அணியிலக்கணச் செய்திகளைக் கருத்து விளக்கத்திற்காகப் பயன்படுத்தியுள்ளார்,

பரிமேலழகர் உரையில் இவ் இலக்கணச் செய்திகள் குறளின் விளக்கத்திற்குத் துணையாகும் பான்மையை இனி ஆராய்வோம்,

## எழுத்து

முதற் குறளில் 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலை'ச் சுட்டுவார். இதனால் எழுத்தின் தன்மையை ஒலி, மாத்திரை என்னும் கருத்துக்களின் அடிப்படையில் பரிமேலழகர் காண்கிறார்.

மேலும் தமிழ் எழுத்திற்கேயன்றி வட எழுத்திற்கும் அகரம் முதலாதலை இருமொழியில் அமைந்த எழுத்திலக்கண அடிப்படையில் கூறும் கருத்து உளங்கொளத்தக்கது.

அகரச் சுட்டு செய்யுளில் வரும்போது நெடிலாவதைத் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில் உயிர் மயங்கியலில்,

'நீட வருதல் செய்யுளுள் உரித்தே' (5)

என்னும் நூற்பாவால் கூறும். இதற்கு ஏற்ப 'ஆயிடை எனச் சுட்டு நீண்டது' (1179) என்று சுட்டெழுத்து, செய்யுளில் புணரும் இலக்கணத்தைப் பரிமேலழகர் குறிப்பர்.

'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று' (49) என்ற குறளில் அஃது என்ற சுட்டுச் சொல் இல்வாழ்க்கையைப் பிரித்து சேய்மைச் சுட்டின் அடிப்படையில் அஃது என்பது துறவறம் என்பதைச் சுட்டும்

என்ற கருத்துப் புலப்பட 'ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது, இதனால் பிரிக்கப்பட்டது துறவறமாதலின் அஃது என்னும் சுட்டுப் பெயர் அதன்மேல் நின்றது' என்ற இலக்கணக் குறிப்பால் உணர்த்துவர்.

நாள் எனத் தொடங்கும் குறளில் (334) வாளது என்பதற்கு 'வாளினது வாயது' என்று பொருளுரைப்பார் பரிமேலழகர். பிறர் 'வாளாம்' என்றுரைப்பர். இதனை மறுத்தற்கு 'அது' என்பது குற்றியலுகரம் அன்மையானும் அஃதுரையன்மை அறிக' என எழுத்திலக்கணத்தில் குற்றியலுகரம் பற்றிய அறிவு நுட்பத்தைப் பயன்படுத்திப் பொருள் காண்கின்றார்.

மேலும் குற்றியலுகரத்தின் முன் உடம்படுமெய் விகாரத்தால் வருவதைக் குறிப்பார் (764).

இங்ஙனம் ஒலி, எழுத்து, சுட்டு, குற்றியலுகரம் போன்ற எழுத்திலக்கண அறிவைப் பரிமேலழகர் தம் உரைக்கும் பயன்படுத்தி இருப்பினும் இது அருகிய நிலையிலேயே காணப்படுகின்றது எனலாம்.

சொல்

பெயர், இயற்பெயர், சிறப்புப் பெயர் என இருவகையாக விளங்குவதைச் 'சேய் என்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பதோர் சிறப்புப் பெயரும் எனக் (355) காட்டுவதால் அறிகிறாம். இங்குச் சாதி, குடி, வடிவு பற்றிப் பெயர் அமைவதையும் காட்டுவார்.

சொற்கள் அஃறிணை, உயர்திணையைச் சுட்டுவதையும், உயர்திணை சிறப்புடையது என்பதையும் துப்பார்க்கு (12) என்ற குறளுக்கு உரை காணும்போது சுட்டி இரு திணையைப் புலப்படுத்துவார்.

'என்ப' என்ற சொல் 392ஆவது குறளில் 3 இடங்களில் வருகின்றது. அவற்றில் 'எண்ணென்ப', 'ஏனை எழுத்தென்ப' என்னும் தொடர்களில் காணும் இரு 'என்ப' என்னும் சொற்கள் அஃறிணைப் பன்மைப் பெயர், 'கண் என்ப' என்னும் தொடரில் அமைந்த 'என்ப' என்னும் சொல் உயர்திணைப் பன்மை வினை எனப் பரிமேலழகர் குறிப்பதால் ஒரே வடிவில் அமைந்த சொற்களின் இலக்கண ஆட்சி கருதி அவற்றைப் பெயர் என்றும் வினை என்றும் பகுத்துக் காட்டுவார்.

சொல்லின்கண் அமைந்த திணையைக் கருதாமல் அது குறிக்கும் திணையையே மனத்தில் கொண்டு 'வேந்து என்பது (551) உயர்திணைப் பொருட்கண் வந்த அஃறிணைச் சொல்' என அதன் திணை நிலையையும், சொல் நிலையையும் நன்கு பிரித்துக் காட்டுவர்

நான்கு வகைச் சொற்களில் பெயர்ச்சொல் ஒன்று. அதில் ஆண், பெண் ஆகிய இருவரையும் சுட்டும் பொதுப்பெயராக மக்கள் என்ற பெயர்ச்சொல் வழங்கும். ஆயினும் தம் கால உலகியல் வழக்கிற்கேற்ப 'மக்கட்பேற்றில்' மக்கள் என்ற சொல்லுக்கு உரை கூறவந்த பரிமேலழகர் 'மக்கள் என்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது என்று கூறுவதால் பெயர் இலக்கண அடிப்படையை உணர்ந்தே தம் காலத்திற்கு ஏற்ப 'ஒன்றொழி பொதுத்தன்மை' விளக்கும் உரையை வெளிப் படுத்துகிறார். ஊரவர் என்பது தொழிலான் ஆண் ஒழித்து ( 147 நின்றது என்பர்

அழிவு (625), புன்கண் (1152) என்பனவற்றைக் காரணப் பெயர் எனச் சுட்டி அவை காரியத்தின் மேல்நின்றதைக்(625) காட்டுவர். மறுதலையாகக் கலக்கம் (627), ஒண்மை (844) என்றகாரியப் பெயர்கள் காரணத்தின் மேல் நின்றதை எடுத் துரைப்பர்.

முதனிலைத் தொழில் பெயர்வடிவில் மொழியில் வழங்கப் பெறும், அழி (807), அறி (638), ஆள் (614), கோடு (1313) தும்மு (1318), நோ (877) என்ற முதனிலைத் தொழிற்பெயர் களை எடுத்துரைத்து, அவை பெயர்த்தன்மை பெறும் நிலையை உணர்த்துவார். முதல் நிலைத் தொழிற்பெயர் எதிர்மறை விகுதி 'அல்' உடன் சேர்ந்து அமையும் சொல் அமைப்பைக் 'கொளல்' (720) என்ற சொல்லால் கூறிச் சொல்லிலக்கண அமைப்பு நிலையைப் புலப்படுத்துவார் இடி 607) என்ற முதனிலைப் பெயரின் துணையைக் கொண்டு நட்டார் என்ற பொருளைக் காண வழிவகுப்பார். ஓஒதல் வேண்டும் என்ற குறளில் (653) செய் என்னும் முதனிலைத் தொழிற்பெயரை மாற்றிப் பொருள் காண்பார். அதனை அடுத்துள்ள வினை என்பதனோடு சேர்த்து வினைத்தொகையை ஆக்கிய வழிப் பொருளின்மை காட்டித் தாம் முதனிலைத் தொழிற்பெயர் ஆக்கியமைக்குக் குறளின் நேர் பொருள் காணும் குறிக்கோளை வெளிப் படுத்துவார்

இங்ஙனம் முதனிலைத் தொழிற்பெயரைப் பயன்படுத்தி, அதன் அமைப்பையும் பொருள் காணும் முறையையும் விளங்க உரைப்பார்.

பரிமேலழகர் வினைப்பெயரின் அரிய வடிவங்களையும் எடுத்து உரைப்பார் (1127). குறிப்பு வினையின் அடிப்படையில் பெயர் அமைவதைக் குறிப்பு வினைப்பெயர் எனவும் (604), வினைக்குறிப்புப் பெயர் எனவும் (1160) பரிமேலழகர் குறிப்பர். அரிது என்பதை வினைக் குறிப்புப் பெயர் என்று எடுத்துரைப்பர். பொதுவாகக் குறிப்பு வினைப்பெயர் என்பதைச் சுட்டும்போது வினையெச்சம் அதனைக் கொண்டு முடிந்த நிலையைக் காட்டவே குறிப்பிடுவர். சான்றாக 'மருள் நீக்கி' என்னும் வினையெச்சம் 'காட்சியவர் என்னும் குறிப்பு வினைப்பெயர் கொண்டது' (352) எனக்கூறுவர். இதனால் வினையெச்சப் பொருள் முடியுமிடம் காட்டவே குறிப்பு வினைப்பெயர் என்ற இலக்கண ஊன்றுகோலைக் கையாளுகிறார் என்பது தெளிவாகிறது.

பெயரடையாக வந்து ஓர் இயல்பைப் புலப்படுத்துவதை 'வேய்த் தோளவட்கு' (1113) என்னும் தொடரால் சுட்டுவர்.

'சேர்ந்தாரைக் கொல்லி (306) என்பது ஏதுப்பெயர்' எனப் பெயர் வகை சுட்டி அது உயர்திணைப் பன்மை மேல் வைத்து ஏனைய நான்கு பாலும் தம் கருத்தோடு கூடிய பொருளாற்றலால் கொண்டான் எனக் கூறுவதால் பெயர்ச் சொல்லில் அமைந்த திணை, பால் பற்றிய இலக்கண அறிவு புலப்படுத்திப் பொருட்தெளிவை நல்குவர்.

'அஃது' என்பது சுட்டுப் பெயரெனக் (1093) கூறுவதால் சுட்டுப்பெயரையும், 'எவன்' என்னும் வினாப்பெயர் (2) 'என்' என விகாரப்பட்டு நின்றதைக் கூறி 'இன்மை' குறித்த பொருளையும் குறிப்பர்.

'யா என்பது அஃறிணைப் பன்மை வினாப்பெயர். அஃது ஈண்டு எஞ்சாமை உணர நின்றது (127)' என வினாப் பெயரைத் தனித்துச் சுட்டி, வடிவம் கூறி அதன் பொருள் விளக்கம் காட்டுவார்.

பெயர்ப் பொருளில் ஆகுபெயரைக் குறிப்பர். அங்ஙனம் குறிக்கும்போது 'விசும்பு — ஆகுபெயர்' (16) எனக் காரணம் சுட்டாமலும் 'விருந்து என்பது புதுமை; அஃது ஈண்டு ஆகு பெயராய்ப் புதியராய் வந்தார்மேல் நின்றது' (43) எனச் சொற்பொருள் கூறி ஆகுபெயராகும் நெறியைச் சுட்டியும் உணர்த்துவார்.

'இருள் — நரகம்' அஃது ஆகுபெயராய்க்காரணத்தின் மேனின்றது' (352) எனக் காரணத்தையும், அஃது (உறை) ஈண்டு ஆகுபெயராய் உறைதலைச் செய்யும் நாள் மேல் நின்றது என ஆகுபெயர் சுட்டும் பெயர் எது எனவும், 'மனை' என்பது ஈண்டாகுபெயர், மங்கலம் என்ப மனைமாட்சி என்புழிப்போல' (1268) என முன்னர் ஆகுபெயர் சுட்டிய நிலையை நினைவூட்டுவதும் குறிப்பிடத்தக்கது. பிறருரையில் ஆகுபெயராக்கி இடர்ப்படும் நிலையையும் சுட்டுவர் (632).

பரிமேலழகர் எடுத்துக்காட்டும் குறிப்புக்களில் ஆகுபெயர் மிகுதியான இடங்களைப் பெற்று விளங்குவது குறிப்பிடத் தக்கது.[18]

### வினைச்சொல்

வினையில் உடன்பாடு எதிர்மறை என இருநிலை அமைந் ததை 'மக்கட் பதடி எனல்' என்பதில் உடன்பாட்டையும், 'மகன் எனல்' என்பதில் எதிர்மறையையும் சுட்டுவார் பரிமேல கர் (196).

'தெற்றென்' என்பது (581) முதல் நிலையாக வந்த வியங்கோள் என வியங்கோள் வடிவைக் காட்டி அதனைத் தெற்றென என்னும் செயவென்னெச்சத்தைக் கொண்டு வினை வடிவைப் புலப்படுத்துவர். வியங்கோளில் எவ்வகைப் பொருள்வரும் என்பதையும் காட்டுவர் (1265, 1266).

வினையில் காணும் காலம் கொண்டு குறளின் உயிர்ப் பொருளை உணர்த்துகிறார் பரிமேலழகர். 'புரிந்த என்ற இறந்தகாலத்தான் முன் உரிமை அறிதற் பொருட்டு வைத்த வினையாதல் பெற்றாம்' (511) எனவும், மறுமைக்கண் நிரயத் துன்பம் உழப்பதைச் சுட்ட, 'உழப்பர் என்பது (936) எதிர் கால வினை' எனவும் வினையின் கால அடிப்படையில் பொருட்சிறப்பைக் காட்டுவர்,

நிகழ்வு என்பதனை நிகழ்காலம் குறித்த நிலையில் பல இடங்களில் காட்டிச் செல்வர் (394, 399, 461, 819).

வினைச் சொல்லின் வடிவில் அமைந்த காலம், முன்பின் இயைபு இன்மை நோக்கி வழுவெனக் கருதினும் அது வழு வன்று எனக்காட்ட அதன் குறிப்புப் பொருளை எடுத்துரைப் பார். சான்றாக ஏகினான் என இறந்த காலத்தால் கூறினார்; என்னை,

"வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
ஓராங்கு வருஉம் வினைச் சொற்கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்"

எனத் தொல்காப்பிய வினையியல் நூற்பாவை (49) முழுமை யாகத் திருக்குறளின் முதல் அதிகாரத்தில் மூன்றாம் குறளில் உரைப்பார்.

வினையை அடுத்து எச்சங்கள் பற்றிப் பரிமேலழகர் குறிக் கும் இலக்கணக் குறிப்புகள் சிறப்புடையன. பெயரெச்சம், வினையெச்சம் என்பன குறிப்புப் பெயர் கொண்டு முடிவதைச் (199; 352) சுட்டுவர். பொதுவாக வினை எச்ச முடிபுகள் எது கொண்டு முடியும் என அறிவது கடினம்.[19] இதனை நீக்கி எளிய முறையில் பொருள் காணும் வகையில் முதல் நிலைத் தொழிற்பெயர் கொண்டு வினை எச்சம் முடிந்ததை யும், (93) தொழிற்பெயரின் தொழிலோடு முடிவதையும் (1149), எதிர்மறை வினையுள் முற்பகுதியுடன் முடிகின்ற அரிய ஆட்சியையும் (210, 548) காட்டுவர். இதனால் எச்சங்கள் வினை கொண்டு முடிவதையும் அவ்வினையுள் எப்பகுதி கொண்டு முடியும் என்பதையும் காட்டுவதில் பரிமேலழகர் அரிய நிலை புலப்படக் கூறியுள்ளார்.

எச்சங்களின் வடிவம் (536. 585), காலம் அமைந்த நிலை (3:2) திரிபு (736), முடிபு (93, 463, 435, 815) அடுக்கி வரும் நிலை (448) முதலானவற்றைக் கூறிக் குறளின் உண்மைப் பொருளை உணருமாறு செய்வார்.

## இடைச்சொல்

திருக்குறளுக்குப் பொருள் காண்பதில் இடைச் சொற் களின் துணையைப் பரிமேலழகர் நன்கு பயன்படுத்திக் கொண் டுள்ளார்.

இடைச்சொற்களின் எண்ணிக்கையும் அவை பற்றிய இலக்கணக் குறிப்பும் எண்ணிலடங்காத நிலையில் பரிமேலழகர் கையாளக் காண்கிறோம். பொருள் அடிப்படையில் இடைச்சொற்கள் வழங்கும் பாங்கினைக் கீழ்வரும் அடைவு சுட்டும்.

| பொருள் | இடைச்சொற்கள் |
|---|---|
| அசைநிலை | அரோ ஆங்கு ஆம் ஆல் உம் ஐ ஒடு ஓ ஒரும் கொல் தான் பிற மற்று மன் வாழி (15) |
| இசைநிறை | கொல் |
| இடைவிடாமை | ஓ |
| இரக்கம் | ஓ |
| இழிவு சிறப்பு | உம் |
| உடன்பாடு | ஊழி |
| உயர்வு சிறப்பு | உம் |
| உரையசை | தாண், குறை, போல், போலும், (4) |
| உவம உருபு | ஆங்கு |
| எச்சம் | உம் |
| எண் | ஒடு |
| எதிர்மறை | ஆ ஓ |
| ஐயம் | கொல் |
| ஒழியிசை | மன் |
| தேற்றம் | ஏ |
| பிரிநிலை | ஏ, ஓ |
| மிகுதி | ஓ |
| முற்று | உம் |
| வியப்பு | ஓ |
| வினைமாற்று | மற்று |
| வேற்றுமைப் பொருள் | உளி |

தொகை

சொற்கள் தொடர்ந்து வரும் நிலையில் சாரியை நிற்க உருபு தொகும் நிலையை 'அழிவினவை நீக்கி' (787) என்ற தொடரில் இன் சாரியை நிற்க இரண்டன் உருபு தொக்கது எனக் காட்டுவர்,

வாயுணர்வு என்பது இடைப்பதங்கள் தொக்கு நின்ற மூன்றாம் வேற்றுமைத்தொகை (420) என வேற்றுமைத் தொகை நின்ற நிலையைக் காட்டுவர். மேலும், முன்பின் ஆகத் தொகும் நிலையை ஆறாம் வேற்றுமைத் தொகைக்கு முற்பகல், பிற்பகல் (319), நுனிக்கொம்பர் (467), நடுவூர் (1008) எனக் கூறுவதுடன் ' கடைக்கண் ' (476) என்ற எடுத்துக் காட்டையும் கூறித் தொகை வடிவு பெற்ற இலக்கணத்தைத் தெளிவு படுத்துவர்.

சொற்கள் தொக்கு நிற்கும் தொகைகளை நன்குணர்ந்த பரிமேலழகர் அவற்றை விரித்துப் பொருள் காண்கிறார்.

> " ஆகூழ் போகூழ் என்னும் வினைத்தொகைகள் எதிர் காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப் பொருளவாய் நின்றன " (371)

எனக் குறளில் காணும் வினைத்தொகைகள் அமைந்த காலத்தையும் பொருளையும் புலப்படுத்துவர்.

தொகை அறிவு புலப்படாமையால் 'செய்வினை' (653) என்பதை வினைத்தொகையாக்குவதில் பொருளின்மையை இலக்கண வழிநின்று மறுப்பார்.

**வேற்றுமைத்தொகையில்** அதன் அமைப்பைக் குறிப்பாக ஆறாம் வேற்றுமைத்தொகை அமைப்பை விளக்குவதில் பரிமேலழகரின் தனிப்பண்பு வெளிப்படுகின்றது. இதுபோன்றே தந்தம் வினையென்புழி தொக்கு நின்ற ஆறாம் வேற்றுமை முருகனது குறிஞ்சி நிலம் என்புழிப்போல உரிமைப் பொருட் கண் வந்தது (60) என்பர்.

**அன்மொழித்** தொகையைப் பற்றிக் கூறும்போது, 'தொடலைக் குறுந்தொடி' (*1135*) என்ற தொடருக்கு 'மாலை போலத் தொடர்ந்த சிறுவளையினை உடையாள்' என்று பொருள் கூறி, அப்பெயர் உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என உரைப்பர்.

பண்புருபு இடையிலே தொக்கு நிற்கச் சிறப்புப் பெயரும் பொதுப் பெயரும் சேர்ந்து நிற்கும் நிலையினை விளக்கும் முகத்தான், 'ஆதி பகவன்' (*1*) என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை; வடநூன் முடிபு என உரைப்பர்.

**வேற்றுமை மயக்கம்**

வேற்றுமை உருபுகள் தமக்குரிய பொருளில் வாராது மயங்கி வரும் என்பதை விளக்கப் பரிமேலழகர்,

> 'தவத்திற்கு உருஅற்று' என்பது யானையது கோடு கூரியது என்பதனை யானைக்குக் கோடு கூரிது என்றாற்போல ஆறாவதன் பொருட்கண் நான்காவது வந்த மயக்கம் (261)

எனக் குறளில் வந்த தொடரைக் கூறி, அதில் காணும் வேற்றுமை உருபுகள் எந்த வேற்றுமைக்கு உரியன என்றும், அவை சுட்டும் பொருள் எந்த வேற்றுமைப் பொருள் என்வும் காட்டுதற்கு இலக்கண நடைமுறையில் காணும் யாவரும் அறிந்த 'யானைக்குக் கோடு கூரிது' போன்ற சான்றுகளை எடுத்துரைப்பதின் வாயிலாக வேற்றுமை மயக்கத்தை நன்கு தெளிவுறுத்துவார்.

இரண்டாம் வேற்றுமை உருபு (அதனை 855), மூன்றாம் வேற்றுமை உருபு (காலத்தினால் 102), நான்காம் வேற்றுமை உருபு (எல்லார்க்கும் 582) வருமிடத்து ஏழாம் வேற்றுமைப் பொருள் காண்பர். இவை மயங்கி வருவது குறளில் பெரும் பான்மை எனப் பரிமேலழகர் காட்டுவர்.[20]

மேலும் இரண்டாம் வேற்றுமை உருபும் (தவ்வையை 16 ) மூன்றாம் வேற்றுமை உருபும் (உள்ளத்தால் 294) நான்காம் வேற்றுமையிலும், நான்காம் வேற்றுமை உருபு (விடாதவர்க்கு 347) இரண்டாம் வேற்றுமைப் பொருளிலும், ஐந்தாம் வேற்றுமை உருபு (மூன்றின் 688) மூன்றாம் வேற்றுமைப் பொருளிலும் வருவதைப் பரிமேலழகர் சுட்டுவர்.

இங்ஙனம் வரும் வேற்றுமை மயக்கத்தை ஆறாவது பொருட்கண் வந்த நான்காவது மயக்கம் என்வும் (261) நான் காவது, ஏழாவது பொருட்கண் வ்ந்தது (582) என வேற்று மையைக் கூறியும், 'இன் ஒடுவின்' பொருட்கண் வந்தது (688) என வேற்றுமை உருபுகளை வெளிப்படையாகக் கூறியும் வேற்றுமை மயக்கத்தில் பொருள் காண்பர்.

**புறப்பொருள்**

பரிமேலழகர் புறப்பொருள் இலக்கணச் செய்திகளைக் கூறியும் உரைக்கு விளக்கம் சேர்ப்பது கீழ்க்கண்ட சான்று களால் விளங்கும்.

தன் முன் வலியிழந்தாரை அழித்திடத் துணியாமல், வலியிழவாதவன் மேல் சென்ற வீரனின் கூற்றாக,

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்த லினிது (771)

என்னும் குறட்பாவைச் சுட்டுவார் பரிமேலழகர். இதனை மேலும் விளக்குமுகத்தான் இப்பாட்டு தழிஞ்சியைச் சார்ந்தது எனப் புறப்பொருள் வெண்பாமாலை இலக்கணத்தைச்[21] சான்று காட்டி நிறுவுவர்.

இவ்வாறே 'பேராண்மை என்ப தறுகண்' (773) என்னும் குறட்பாவையும் 'தழிஞ்சி' எனச் சுருங்கிய அளவில் இலக்கணக் குறிப்புத் தந்து விளக்கும் பான்மை எண்ணுதற்குரியது.

கைவேல் களிற்றொடு போக்கி மெய்வேலைப் பறித்த வீரனின் படைச்செருக்கினை 'நூழிலாட்டு'[22] என்னும் புறப்பொருள் குறிப்பால் விளக்கமுறச் செய்வர் (774).

வஞ்சியென்னும் புறப்பொருள் திணையின் துறைகளுள் ஒன்றான நெடுமொழிவஞ்சியினை,[23] 'என் ஐ முன் நில்லன் மின்' (771) என்னும் குறட்பாவினை விளக்கும் சுருக்கக் குறியீடாகத் தம் உரையில் புலப்படுத்தி வீரனின் ஆண்மைத் தன்மையை விளக்கமுறச் செய்வார் பரிமேலழகர்.

புறப்பொருள் இலக்கணக் குறிப்புக்களைத் துறைப் பெயர்களைச் சுட்டிச் செல்லும் அளவிலேயே நுட்பமாக அமைத்துக் குறட்பாக்களுக்கு விளக்கம் தந்த பான்மை கருதத்தக்கது.

பன்னிரண்டு இடங்களில் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடல்களைச் சுட்டிக் குறளுக்கு இலக்கண விளக்கம் தந்தமை எண்ணுதற்குரியது[24].

**அணியிலக்கணம்**

வள்ளுவர் சற்றேறக்குறைய 350க்கும் மேற்பட்ட குறட்பாக்களில் அணிநயம் விளங்கப் பாடியுள்ளார்.[25] பரிமேலழகர் வள்ளுவரின் உவமை நலத்தை விளக்கும்போது அணிவகைகளின் பெயர்களைச் சுட்டி, குறட்பா இன்ன வகையைச் சார்ந்தது என்று கூறுவார். 47 இடங்களில் பரிமேலழகர் உவமையின் பெயரைச் சுட்டிக் குறளுக்கு விளக்கம் சேர்ப்பார்.

குறளுரை விளக்கங்களின் போது அவர் சுட்டுகின்ற அணி வகைகளைப் பின்வரும் அடைவு காட்டும்.

| வ. எண். | உவமை | குறள் எண் |
|---|---|---|
| 1. | தொழில் உவமை | 274, 490, 576, 650, 691, 1076 |
| 2. | பண்புவமை | 277 |
| 3. | இல்பொருளுவமை | 273 |
| 4. | எடுத்துக்காட்டுவமை | 1, 153, 452, 481 798. |
| 5. | ஏகதேச உருவகம் | 8, 24 306, 505, 555, 5[illegible]7 615, 627, 753. 796, 983, 989, 1032, 1093, 1147, 1227 |
| 6. | அவயவ உருவகம் | 1068 |
| 7. | குறிப்புருவகம் | 1020 |
| 8. | சொற்பொருட் பின்வருநிலை | 965 |
| 9. | சொற்பின்வருநிலை | 2[illegible]0 320 623 645 |
| 10 | நிரனிறை | 45 |
| 11. | மயக்க நிரனிறை | 410 |
| 12. | பிறிது மொழிதல் | 475, 476, 4[illegible]5, 496, 500, 599, 763, 879 |
| 13. | குறிப்பான் வந்த வேற்றுமை | 129 |

பரிமேலழகர் ஏகதேச உருவகத்தை 16 இடங்களிலும், பிறிதுமொழிதலணியை 8 இடங்களிலும், தொழில் உவமையை 6 இடங்களிலும் சுட்டுவார். எடுத்துக்காட்டுவமையை 5 இடங்களிலும், சொற்பின் வருநிலையை 4 இடங்களிலும் காட்டுவார். ஏனைய அணிகளை அருகியே காட்டுகின்றார்,

உலகில் வெவ்வேறு தோற்றமும் வடிவமும் கொண்ட இரு பொருள்களை நுணுகி ஆயும் திறம் கவிஞர்கட்கே உண்டு என்பர்.[26] பொருளின் தன்மையையும் இயல்பையும் நுனித்துக் காணும் திறன் பெற்ற அவர்தம் படைப்புக்களை ஆராய்வோரும் அத்தகையோரே ஆவர்.

இதனை வள்ளுவரின் உவமைகளுக்கு விளக்கம் தரும் பரிமேலழகரின் உரை விளக்கங்கள் நன்கு காட்டுகின்றன.

காலமும் இடமும் அறிந்து செயலாற்ற வள்ளுவர் 'கொக் கொக்க கூம்பும் பருவத்து' எனவும். 'குத்தொக்க சீர்த்த விடத்து' (490) எனவும் உவமை நயம் மிளிரக் கூறினார்.

இவ் உவமையைப் பரிமேலழகர்,

'மீன் கோடற்கிருக்கும் வழி அது வந்தெய்துந்துணையும் முன்னறிந்து தப்பாமற் பொருட்டு உயிரில்லது போன்றி ருக்குமாகலானும், எய்தியவழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும், இருப்பிற்குஞ் செயலிற்குங் கொக்கு உவமையாயிற்று. கொக்கொக்க வென்றாராயினும் அது கூம்புமாறு போலக் கூம்புக வென்றும்; குத்தொக்க வென்றாராயினும் அது குத்துமாறுபோலக் குத்துகவென்றுமுரைக்கப்படும். இது தொழிலுவமமாகலின் உவமை முகத்தால் இருப் பிற்கும் செயலிற்கும் இலக்கணங் கூறியவாறாயிற்று''

என உரையில் இருப்பையும் செயலையும் விளக்கிக் கூறுவது கருதத்தக்கது.

குறிப்புகள் :-

1. Helen Gardner, '*The Business of Criticism*', P. 10.
2. WATSON, GEORGE, *The Literary Critics*, P.P. 11-15.
3. தொல். பொருள். இளம்: 57, 58, 88, 200, 298, 299, 300, 305.
4 அவ்வாறு வளர்ந்த திறனாய்வு வகைகளுள் சில பின் வருமாறு :

   1. Psychological Criticism
   2. Archetypal Criticism
   3. Mythopoeic Criticism
   4. Bio Criticism
   5. Marxist Criticism
   6. Socialogical Criticism
   7. Aesthetic Criticism
   8. Analytical Criticism
   9. Historical Criticism

   etc., etc.

5 ELIOT, T. S., *The Frontiers of Criticism*, English Critical Essays, 20th Century Second Series P. 49.
6. Helen Gardner, The Sceptre and the Torch, in 'The Business of Criticism, pp. 1. 24.
7. 8. ELIOT, T. S., *The Function of Criticism* Selected Essays.
9. மீனாட்சிசுந்தரம் டாக்டர் கா., பன்மையில் ஒருமை ப. 64.
10. ELIOT, T. S., The Frontiers of Criticism, On Poetry and Poets P. 115.
11. திருக்குறள் 'நீதி இலக்கிய வகையைச் சார்ந்தது என்பதைத் திருக்குறள் நீதி இலக்கியம் நூல் நன்கு விளக்கிக் காட்டுகின்றது.

    — திருநாவுக்கரசு, க. த, திருக்குறள் நீதி இலக்கியம்
12. "இந்த இடத்தில் ஒரு விசேஷமும் இராதென்று நாம் ஒரு குறளைப் பார்த்து நினைப்போம். அங்கே பரிமேலழகர் ஏதேனும் ஒரு விசேஷத்தை எடுத்துக்காட்டுவார்".

    — சாமிநாதையர் டாக்டர் உ. வே., என் சரித்திரம், ப. 561.
13. புறநானூறு 43.

14. காமந்தகம், அத்தியாயம் 11,. சுலோகம் 124 (ஆறுமுக நாவலர் உரை குறள் 920),
15. குறள் 961, மனுஸ்மிருதி, அதி. 10, சுலோகம் 140 ஆறுமுக நாவலர் உரை, குறள் 104)
16 ஆறுமுகம், K., இலக்கியத் திறனாய்வில் தமிழ் இலக்கணத்தின் பங்கு, *Proceedings of the First International Conference Seminar of Tamil Studies*, Vol. II, P. 484.
17. திருக்குறள் மூலமும் பரிமேலழகர் செய்த இலக்கணவுரையும், திருமயிலை முருகேச முதலியார், சென்னபட்டனம், 1885. (இந்நூலின் முகப்புப்பக்கம் அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது.)
18 குறள் 16, 41, 43, 48, 66, 72 73, 75, 88 90, 124, 141, 178, 180, 183, 184, 186 204, 236 245, 247, 274, 276, 277, 296, 334, 344. 352, 359, 364, 380, 390, 401, 414, 417, 419, 470, 500: 509, 522, 523, 538, 564, 566, 592, 593, 595, 632, 636, 671, 676, 701, 705, 706, 709, 725, 735, 737, 743, 748, 791, 796 801, 813, 817, 872, 882, 901, 907, 916, 920, 927, 939, 940, 953, 958, 984, 996, 997, 1006, 1013, 1024, 1031, 1034, 1038, 1039, 1042, 1047, 1052, 1056, 1058, 1059, 1081, 1097, 1098, 1105, 1111, 1113, 1131 1191, 1196,, 1214, 1215, 1221, 1225, 1231, 1237, 1255, 1261, 1263, 1268, 1275, 1285 1287, 1293, 1313,
19. இசரயேல், டாக்டர் மோ., இலக்கண ஆய்வு வினைச்சொல், ப. 12.
20. குறள் 102, 242, 459, 582, 855, 859, 1117, 1196, 1213, 1231, 1292, 1321.
21, புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சிப்படலம், 3
22. புறப்பொருள் வெண்பாமாலை, தும்பை. 16.
23. புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி. 12
24 குறள் 118, 384, 432, 566, 762, 764, 766, 771, 772. 773 774, 960.
25. சுந்தரமூர்த்தி, இ, திருக்குறள் அணிநலம், ப 248,
26. Lyon, P. H. B., *The Discovery of Poetry* P. 167.

கடவுள் துணை

தெய்வப்புலமைத்

திருவள்ளுவ நாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

தமிழ் வேதமாகிய

# திருக்குறள் மூலமும்

பரிமேலழகர்செய்த

**இலக்கணவுரையும்,**

திருமயிலை

**முருகேச முதலியாரவர்களால்**

பலபிரதிருபங்களைக் கொண்டு

பரிசோதிப்பித்து,

**இவற்றோடு**

தெளிபொருள் விளக்கப் பதவுரையும்

ஆங்கிலேய மொழிபெயர்ப்புஞ் சேர்த்து

**ஊ. புஷ்பரத செட்டியாரால்**

தமது

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சென்னபட்டணம்

1885

# 5

# பரிமேலழகரும் பிற உரையாசிரியர்களும் - ஓர் ஒப்பாய்வு

## ஒப்பாய்வு

திருக்குறளுக்குப் பரிமேலழகர் வகுத்த உரையினைப் பற்றி இதுகாறும் தனிநிலையில் ஆராயப்பெற்றது. இனி அதற்கு எழுந்த பழம் உரைகளுள் இன்று வ்ழக்கில் இருக்கும் சில குறிப்பிட்ட உரையாசிரியர்களுடன் பரிமேலழகரைப் பொருத்திப் பார்ப்பதில் அவர்தம் சிறப்பு மேலும் வெளிப்பட வாய்ப்புக்கள் உண்டு.

அவ்வகையில் மணக்குடவர், பரிதியார், பரிப்பெருமாள், காலிங்கர் பற்றிய பொதுச்செய்திகளை முன்னர்க் காண்போம். பின்னர்ச் சிறப்பாக அவர்தம் உரைக்கூறுகளை,

1. பால் பாகுபாடு
2. பாவின் தோற்றுவாய்
3. இயல் பாகுபாடு
4. அதிகார முன்னடைவு
5. அதிகாரப் பொருள்
6. உரை வேறுபாடு
7. சொற்பொருள்
8. பாடபேதம்

ஆகிய தலைப்புக்களின் கீழ் பரிமேலழகரோடு ஒப்பாய்வு செய்யலாம்.

## மணக்குடவர்

திருக்குறள் உரையாசிரியர்களுள் முதல்வராகக் கருதப் படுபவர் மணக்குடவர். இவரை மணக்குடையார் என்றும் வழங்குவர். இவர் வரலாறு பற்றித் தெளிவாக ஒன்றும் அறிய

இயலவில்லை. இவருடைய உரை எளிய இனிய தனித்தமிழ் நடையில் அமைந்தது; இன்றியமையாத இடங்களில் மிகச் சுருக்கமாகவும் நுட்பமாகவும் விளக்கவுரை அமைந்துள்ளது. மிக அருகியே மேற்கோள்களைக் காட்டுகிறார். குறள் கருத்துக்களை விளக்கும் போது புராணக் கருத்துக்களையும் பழமொழியையும் பயன்படுத்துவர்.[1]

**பரிதியார்**

பரிதியார் என்ற பெயர் பருதியார் எனவும் வழங்கப்பெறும். இவர் சைவ சித்தாந்தத்தில் ஊன்றிய பற்றுடையவர் என்பதை நற்றாள் (2) என்பதற்குச் 'சிவன்ஸ்ரீ பாதத்தை' எனப் பொருள் எழுதுவதால் அறியலாம். மேலும் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில், 'சிவகீர்த்தி' (5), 'பரமேசுரன்' (8), 'சிவஞானம்'-(359) எனக் குறிப்பிடுவர், நாட்டுப்புற மக்களிடையே வழங்கும் கதைகளைக் கூறி உரைக்கு விளக்கம் சேர்ப்பர் 320ஆம் குறளுக்கு அவர் தந்த விளக்கத்தினை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்;

"ஒருவர்க்குத் தான் செய்த விதனம், பின்பு தனக்கு வருகிறபடியினாலே, ஒருவர்க்கும் தாங்கள் விதனஞ் செய்யார் என்றவாறு. அஃது எப்படி என்றால், பிரம்ம ராட்சதன் ஒரு இராசாவின் மகளைப் பற்றி நின்று சந்தியாவந்தனை செய ஆற்றங்கரையிலே வந்து நின்றளவில். பிராமணப் பிள்ளையின் பிள்ளை வாசிக்கின்றவனுக்கு அன்றையிற் பாடம் இந்தக் குறள் ஆகையால் அவன் முகசுத்தி பண்ண வந்தவன், இந்தக் குறளைப் பாடமாகச் சொல்லிக்கொண்டு வந்தான். இத்தைப் பிரம்மராட்சதன் கேட்டுத் தானொரு பிராமண வடிவாய், இந்தப் பிள்ளை வாய்ப் பாடத்தை இரண்டு பிரகாரங் கேட்டு. 'நாம் இராசாவின் மகளை நோய் செய்தோமே! நமக்கு அந்த விதனம் பிறகே வரும்' என்று பயப்பட்டு, இந்தப் பிள்ளை முன்னிலையாக, இராச குமாரத்தியை விட்டுப் போச்சு என்றவாறு" (320)

என்று கதை சொல்வது போல விளக்கம் தருவார்.

'பெற்றார்ப் பெறின்' என்ற குறளுக்கு 'இதற்கு ஒப்பனைகள் கண்ணகியாளைக் கண்டு கொள்க' (58) எனக் காப்பியத்திலிருந்து சான்று காட்டுவர். அறத்துப்பாலில் காணும்

அதிகாரங்களைத் தீது, மத்திபம், நன்று என அதிகாரங்களைப் பிரிப்பது ஒருவகையில் தெளிவு காண இயலவில்லை என்றாலும் மனித நடத்தைகளின் இயல் நிலைகளைக் காண்பதற்குத் துணைபுரியும். இவர் உரையில் வட சொற்கள் மிகுதி என்பது உரை முழுவதிலுமிருந்து அறிய முடிகின்றது.

பரிப்பெருமாள்

'வள்ளுவனார் பொய்யற்ற முப்பால் பொருள் உரைத்தான் தென் செழுவைத் தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து' என உரையின் ஈற்றிலே காணும் வெண்பா இவரைச் சிறப்பிக்கும்.[2] இவர் உரை, 'தலையாய பரிமேலழகர் உரைப் பின்சார நன்று' என்னும் பாராட்டைப் பெறுகிறது.[3]

காமத்துப்பாலின் முன்னுரையில் 'வாற்சானியம்' என்னும் 'காமதந்திர'த்தைக் கூறுவர்.[4]

இவர் உரையில் குற்றங்கடிதல் அதிகாரத்தில் 'செருக்கும் சினமும்' என்னும் குறளின் உரையில், 'பிறர்மனை நயத்தலால் கெட்டான் இராவணன், வெகுளியாற் கெட்டான் சனமேசயன், நுகர்ச்சியாற் கெட்டான் சச்சந்தன்' என இதிகாசங்களிலிருந்தும், காப்பியங்களிலிருந்தும் சான்று காட்டுவார், மேலும், 'மாண்பிறந்த மானத்தால் (432) கெட்டான் துரியோதனன், மாணா உவகையால் கெட்டான் வாதாபி' எனவும் கூறுவார்,

அரசன் தான் காதலித்துள்ள பொருள்களைப் பிறர் அறியுமாறு செலுத்திக் கெட்டமைக்கு (440) வந்தராயணையும், தெரிந்து தெளிதலின் (582) சுக்கிரர் மதத்தையும், துரோணாச்சாரியார் மதத்தையும் (508), கௌடில்யர் மதத்தையும் (504), மயேச்சுரர் மதத்தையும் (506), வியாதர் மதத்தையும், உத்தவாச்சார்யா மதத்தையும் (510) எடுத்துக் கூறுவதால் இவர்தம் வடமொழிப் புலமை விளங்கும்.

'மக்களை ஓரிடத்தே கொண்டிருத்தல் (522)
பல மக்கள் உண்டானால் எல்லார்க்கும்
பகுத்துக் கொடுத்தல் (527)
விட்டுப் போன மகனைக் கூட்டிக்
கொள்ளுதல் (529)

மீண்டு வந்தவனோடு செய்யுந்திறம் (530)
என வரும் தொடர்கள் இவருடைய உலகியல் அனுபவத்தை யும் மக்கட்பற்றையும் புலப்படுத்தும்.

காலிங்கர்

இவரைக் காளிங்கர் என்றும் கூறுவர். சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பது குறளுக்கு அவர் தரும் விளக்கத்தால் அறிய இயலுகிறது. "விரும்பத்தக்க சிறப்புடைய உத்தரு குருவினைத் தாம் எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டுமவர்" என (580) உரையில் குறிப்பிடுவார்.

வள்ளுவரை 'வள்ளுவக் கடவுள்' என அறத்துப்பாலின் இறுதியில் சுட்டுவார். இவருடைய உரைவிளக்கங்கள் பெரும் பாலும் வினாவிடையில் அமைந்து செல்வதை,

> 'படை மக்கள் தமக்கு எப்பொழுதும் இயல்பு ஆகிய மிகவும் பெரிய ஆண்மை என்று சொல்லுவர் உலகோர்; யாதினை எனின், பகைவந்து உற்ற இடத்துப் பண்டை ஆண்மையை மிகவும் கூர்க்கப் பிடித்து அடர்த்து எதிர் நடத்தல் கூர்மையாவது என்றவாறு' (773)

என்னும் உரைப்பகுதி விளக்கும்

இவருடைய உரைப்போக்கு முதலில் பொழிப்பும், பின்னர்க் குறிப்புரை விளக்கம் தரும் முறையும் கொண்டதாக அமைந்துள்ளது. 'மற்று' என்னும் இடைச்சொல்லை (775, 777, 779, 780) உரை இடையே பெய்து எழுதுவர்.

பரிமேலழகர் வரலாறு பற்றிய பொதுச்செய்திகள் முன்னர்க் குறிப்பிடப்பட்டுள்ளன

குறள் உரைகள்

காலத்திற்கேற்பக் குறளுக்குப் பல உரைகள் எழுந்தன. இந்த நூற்றாண்டிலும் காந்திய நெறிக்கேற்ப நாமக்கல் கவிஞர் உரையும், பகுத்தறிவு இயக்கத்திற்கு ஏற்ப குழந்தை உரையும், கா. அப்பாத்துரையாரின் மணிவிளக்கவுரையும், ஞா. தேவ நேயப் பாவாணரின் மரபியக்க நெறியில் தோன்றிய மரபுரையும் வெளிவந்துள்ளன.[5] இவற்றுடன் பல தெளிவுரைகள், நயவுரை கள், குறிப்புரைகள் வெளிவந்தவண்ணம் உள்ளன.[6] இத் துணை அளவு பெருகியுள்ள உரைகள் எல்லாவற்றையும் ஒப்பாய்வு செய்வது என்பது தனி ஆய்வுக்குரியது.[7]

எனவே விரிவஞ்சி இப்பகுதியில் மேற்கண்ட பழைய உரையாசிரியர்கள் நால்வருடன் பரிமேலழகர் உரை மட்டும் ஒப்பாய்வு செய்யப்படுகிறது.

## பால் பாகுபாடு

திருக்குறளை அறம், பொருள், காமம் என மூவகையாகப் பகுப்பதில் உரையாசிரியர் அனைவர்க்கும் கருத்து வேறுபாடில்லை. ஆயின் அப்பாலினுள் காணும் பகுப்பாய்வில் ஒவ்வொருவரும் மாறுபட்டுள்ளனர். உரையாசிரியர்களுள் சிலர் பாலின் தோற்றுவாய் கூறியும் கூறாமலும் செல்கின்றனர். இதனைப் பின்வரும் விளக்க அடைவு காட்டும்:

## பாலின் தோற்றுவாய்

| உரையாசிரியர் | அறம் | பொருள் | காமம் |
|---|---|---|---|
| மணக்குடவர் | இ | உ* | உ |
| பரிதியார் | இ | இ | இ |
| பரிப்பெருமாள் | இ | உ | உ |
| காலிங்கர் | இ | இ | இ |
| பரிமேலழகர் | உ | உ | உ |

* திருப்பனந்தாள் மணக்குடவர் உரைப்பதிப்பில் (1973) தோற்றுவாய் காணப்படுகிறது. உரைக்கொத்தில் (1960) பரிப்பெருமாள் பெயரில் இப்பகுதியை அடக்கிக் காட்டியுள்ளனர்.

உ : தோற்றுவாய் அமைந்த நிலை
இ : தோற்றுவாய் அமையா நிலை

இதனால் தோற்றுவாய் எழுதுவதை எல்லா உரையாசிரியர்களும் எல்லாப் பால்களுக்கும் மேற்கொள்ளவில்லை;

பரிமேலழகர் ஒருவரே மூன்று பால்களுக்கும் தோற்றுவாய் எழுதியுள்ளார்;

காலிங்கரின் தோற்றுவாய் எந்தப் பாலுக்கும் அமையவில்லை;

மணக்குடவரின், தோற்றுவாயும் பரிப்பெருமாளின் தோற்றுவாயும் பொருட்பால் காமத்துப்பால் இரண்டிற்கும் கிடைத்துள்ளன என்பன போன்ற செய்திகள் பெறப்படுகின்றன.

இவற்றுள் விரிந்த தோற்றுவாய் காணும் பகுதி காமத்துப் பாலாக இருப்பதால் இப்பகுதி குறித்து இனி ஒப்பாய்வு செய்வோம்.

மணக்குடவர் காமத்துப்பாலை,

1. கூடலும் அதற்கு நிமித்தமும்
2. பிரிந்து கூடலும் அதற்கு நிமித்தமும்
3. ஊடிக் கூடலும் அதற்கு நிமித்தமும்

எனக் கூடல் என்ற செயலின் அடிப்படையில் பிரித்துக் காண்பார். பரிப்பொருள் காமத்துப்பாலை, "மைந்தர்க்கும் மகளிர்க்கும் கலவியால் ஆகிய இன்பப்பகுதி" எனக் காண்பர், இன்பம் நுகர, கன்னியரும், கணிகையரும், பிறர் தாரமும் இடம் என்பர். அறத்துப்பாலில் பிறர்மனைக் கூட்டத்தையும், பொருட்பாலில் கணிகையர் கூட்டத்தையும் நீக்கி அறமும் பொருளும் இன்பமும் வழுவாது வருவதால் கணிகையர் கூட்டத்தை இங்குக் கூறுவதாக அமைப்பர். அதனைப் பிரமம் முதலிய எட்டு வகையாக்கித் தொல்காப்பியரின் களவியல்[8] அடிப்படையில் கைக்கிளை பெருந்திணைக் குறிப்பை அக இலக்கண நெறியில் காட்டுவர்.

காமத்துப்பால் 'இறையனார் களவியலில் (2) காணுகின்ற நாடக வழக்கா ?' என் ஐய வினாவை எழுப்பி, இஃது உலக வழக்கு எனக் காட்டுவர். மணக்குடவர், கண்ட மூவகைக் கூடலை இவர் எடுத்துரைத்து, அதற்கு விளக்கம் காண்பர் வாத்ஸாயனம் போன்ற வடமொழி நூற்கருத்துக்களைக் கூறிப் பின் தொல்காப்பியர் அகத்திணை இயலில் (16) புணர்தல், பிரிதல், ஊடல் என அடக்குவதைத் 'தமிழ் நடை' எனக் கூறுவர்.

பின், மணக்குடவரின் மூவகைப் பகுப்பையும் காட்டுவர். முன்பு கண்டறியா அருமையிற் கூடலைப் புணர்ச்சி மகிழ்தல் என்றும், அதனை அறிதலாற் பிரிந்து கூடலைப் புணர்ச்சி

விதும்பல் என்றும், கலாந்தீர்ந்து கூடுதலால் ஊடிக் கூடலை உவகை என்றும் காரண அடிப்படையில் பொருள் காட்டுவர்.

காலிங்கர் பொருட்பகுதியின் பின், காமப்பகுதியைச் சுட்டித் தகையணங்குறுத்தல் என்ற அதிகாரப்பெயரால் காட்சி முதலாகிய வகைஇயல் கைக்கிளையைக் காட்டுகிற தென்பர்

பரிமேலழகர், 'பொருளைத் துணைக்காரணமாய் உடைத்தாய் இம்மையே பயப்பதாய இன்பங்கூறக் காமத்துப்பாலை வள்ளுவர் எடுத்துக்கொண்டதாகக் கூறுவர். 'இன்பம் என்பது காம இன்பத்தினை எனப் போசராசனின் கருத்தை எடுத்துரைப்பர்'.

இதனைப் புணர்ச்சி, பிரிவு என இருவகைப்படுத்துவர். தமிழ் நூல்களோடு பொருந்தக் களவு, கற்பு என இரு கைகோள் வகுத்து அதனை விளக்குவர்.

இன்பத்துப்பாலுக்கேற்பச் சுவை மிகுந்த நடையைக் காலிங்கர்[9] போன்றே இவரும் இப்பகுதியில் எழுதிச் செல்வதை,

> " களவாவது, பிணி மூப்பு இறப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மையராய் உருவும் திருவும் பருவமும் குலமும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை உடையவராய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றிப் பால்வகையான் தாமே எதிர்ப்பட்டு புணர்ந்து வருவது .....
>
> பொழில் விளையாட்டுவிருப்பான் ஆயநீங்க அதன் கட்டமியளாய் நின்றாளை, வேட்டவிருப்பான் இளையார் நீங்கத் தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன் அவள் வனப்புத் தன்னைவருத்தமுறுவித்தலைச் சொல்லுதல் "

என்ற காமத்துப்பாலின் முற்பகுதியில் காணலாம்.

## உரையாசிரியர்களின் இயல் பாகுபாடு

அறத்துப்பாலை பாயிரம், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என நான்கு இயல்களாக வகுப்பதில் மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகிய நால்வரும் ஒன்றுபட்ட கொள்கை உடையவராக இருப்பதைக் காண்கின்றோம்.

மணக்குடவர் பொருட்பாலை அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல், குடியியல் எனக் காண்பர். வேறு சிலர் படையியல், அரணியல் எனப் பகுப் பதைக் கண்டு அப்பகுப்பை மறுக்கும் முகத்தான், அவை யெல்லாம் ஒருவனால் ஆக்கப்படும் பொருள் ஆகலின் பொருளியல் என அடங்கும் எனக் காரணம் காட்டுவார்.

துன்ப இயலை நட்பியலுள் அடக்குதல் இயலாது என்னும் கருத்தைப் பேதைமை புல்லறிவாண்மை என்னும் அதிகாரங் களில் நட்கப்படாததும், நட்கப்படுவதுமன்றி ஒருவர்க்குத் துன்பத்திற்குக் காரணமாம் என்று கூறித் தாம் துன்ப இயல் அமைத்தமைக்குச் சான்று கூறுவர்.

காலிங்கர் ஏழு இயல்களாகப் பகுத்திருக்கிறார். அவை அரசியல், அமைச்சியல், அரண், கூழ், படை, நட்பு, குடி என்பன.

ஆனால், பரிமேலழகரோ அரசியல், அங்கவியல் ஒழிபியல் என மூன்று வகையாகப் பகுப்பர்.

காமத்துப்பாலைக் களவியல், கற்பியல் என மணக்குடவர், பரிப்பெருமாள், பரிமேலழகர் ஆகியோர் பகுக்கக் காலிங்கர் மட்டும் ஆண்பால், பெண்பால், இருபால் என மூன்றாகப் பகுப்பர்.

எனவே, மூன்று பால்களிலும் இயல் வகுக்கும் போக்கினை ஒப்பிடும்போது அறத்துப்பாலில் மணக்குடவர், பரிப்பெருமாள் காலிங்கர் ஆகிய மூவருடனும் காமத்துப்பாலில் மணக்குடவர், பரிப்பெருமாள் ஆகிய இருவருடனும் இயைந்து செல்லும் பரிமேலழகர் பொருட்பாலில் முற்றிலும் மாறுபட்டுச் செல்கிறார் காலிங்கருடன் பொருளிலும், காமத்துப்பாலிலும் முழுதும் மாறு படுகிறார்.

| உரையாசிரியர் | இயல் | அதிகாரம் | |
|---|---|---|---|
| **அறத்துப்பால்** | | | |
| மணக்குடவர் | பாயிரம் | 4 | |
| பரிப்பெருமாள் | இல்லறவியல் | 20 | |
| பரிமேலழகர் | துறவறவியல் | 13 | |
| | ஊழியல் | 1 | (38) |

| உரையாசிரியர் | இயல் | அதிகாரம் | |
|---|---|---|---|
| **பொருட்பால்** | | | |
| மணக்குடவர் } பரிப்பெருமாள் } | அரசியல் | 25 | |
| | அமைச்சியல் | 10 | |
| | பொருளியல் | 5 | |
| | நட்பியல் | 5 | |
| | துன்பவியல் | 12 | |
| | குடியியல் | 13 | (70) |
| காலிங்கர் | அரசியல் | 25 | |
| | அமைச்சியல் | 10 | |
| | அரண் | 2 | |
| | கூழ் | 1 | |
| | படை | 2 | |
| | நட்பியல் | 17 | |
| | குடியியல் | 13 | (70) |
| பரிமேலழகர் | அரசியல் | 25 | |
| | அங்கவியல் | 32 | |
| | ஒழிபியல் | 13 | (70) |
| **காமத்துப்பால்** | | | |
| மணக்குடவர் } பரிப்பெருமாள் } பரிமேலழகர் } | களவியல் | 7 | |
| | கற்பியல் | 18 | (25) |
| காலிங்கர் | ஆண்பால் | 7 | |
| | பெண்பால் | 12 | |
| | இருபால் | 6 | (25) |

இவற்றைக் காணும்போது, குறிப்பாகப் பொருட்பாலைக் காணும்போது, அங்கவியல் என்ற பிரிவிலேயே மற்ற உரையாசிரியர் காணும் வகைவகையான இயல் அமைப்புகளைச் சுருக்கி ஒன்றாகக் காண்பதும், தம் காலத்திற்கேற்பக் குடியியலை ஒழிபியல் நிலையில் காட்டுவதும் புலப்படுகிறது.

பால் பகுப்பில் பரிமேலழகர் மிகைபடாதும், குறைபடாதும் அளவுபடப் பகுத்துள்ளார்.

மணக்குடவர், பரிமேலழகர் ஆகிய இருவரும் அறத்துப் பாலில் காணும் எல்லா அதிகாரங்கட்கும் முன் அடைவு எழுதியுள்ளனர்.

கடவுள் வாழ்த்து, மெய்யுணர்தல் தவிர மற்றவற்றிற்குப் பரிதியின் முன் அடைவு காணப்பெறுகிறது.

காலிங்கருடைய முன்னடைவு தீவினை அச்சத்திற்கு மட்டும் திருப்பனந்தாள் உரைக்கொத்தில் (1969) காணப் படுகிறது. தேசிகர் உரைவளத்தில் (1957) வெஃகாமை, தீவினை அச்சம், அருளுடைமை ஆகிய அதிகாரங்கட்குக் காணப்படுகிறது.

திருப்பனந்தாள் உரைக்கொத்தில் (1969) பரிப்பெரு மாள் முன்னடைவு காணப்பெறவில்லை. ஆனால் தேசிகர் உரைவளத்தில் (1957) 1, 6, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16, 19, 20, 21, 25, 26, 27, 29, 31 ஆகிய 19 அதிகாரங் களில் பரிப்பெருமாளின் முன்னடைவு காணப்பெறுகின்றது.

## பொருட்பால்

பொருட்பாலில் இறைமாட்சி என்ற ஓர் அதிகாரத்திற்கு மட்டும் காலிங்கரின் முன்னடைவு காணப்பெறுகிறது. ‘உழவு’ அதிகாரத்திற்கு மட்டும் பரிதியில் முன்னடைவு காணப்பட வில்லை. தெரிந்து வினையாடல், பொச்சாவாமை, நட்பு, தீநட்பு, வரைவின் மகளிர், குடிமை, உழவு இவற்றிற்குப் பரிப்பெருமாளின் முன்னடைவு காணப்பெறுகிறது. திருப்ப னந்தாள் திருக்குறள் உரைக்கொத்துப் பதிப்பில் (1960) மணக்குடவர் பரிப்பெருமாள் ஆகிய இருவரின் முன்னடைவு குடிசெயல்வகை, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை ஆகிய அதிகாரத் தலைப்புகளின் கீழ் இணைந்து காணப்படுகிறது. ஆனால் இவ் அதிகாரங்களில் பரிப்பெருமாள் முன்னடைவு இருப்பதாகத் தருமபுர உரைவளம் (பொருட்பால் - 1951) குறிப்பிடவில்லை.

பண்புடைமை அதிகாரத்திற்குப் பரிப்பெருமாளின் முன் னடைவு காணப்பெற, மணக்குடவரின் முன்னடைவு காணப் பெறவில்லை. (இவ் அதிகார முழுமைக்கும் மணக்குடவர் உரை கிடைத்திலது).

பொருட்பாலில் எல்லா அதிகாரங்கட்கும் பரிமேலழகர் அதிகார முன்னடைவு தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**காமத்துப்பால்**

காமத்துப்பாலில் பரிதியின் முன்னடைவு தகையணங்குறுத்தலுக்கு மட்டும் கிடைக்கிறது.

காலிங்கர் முன்னடைவு தகையணங்குறுத்தலுக்கும் குறிப்பறிதலுக்கும் கிட்டியுள்ளது.

பரிப்பெருமாள், மணக்குடவர் காமத்துப்பாலில் காணும் எல்லா அதிகாரங்கட்கும் முன்னடைவு கண்டதாகத் திருப்பனந்தாள் உரைக்கொத்தில் (1970) காணப்படுகிறது. ஆனால் தருமபுர ஆதின உரைவளத்தில் (1952) 11 அதிகாரங்களுக்கு மட்டுமே (109 - 112, 116, 121-123, 128, 132, 133) பரிப்பெருமாளின் முன்னடைவு தரப்பட்டுள்ளது.

பரிமேலழகரும் மணக்குடவருமே காமத்துப்பாலில் எல்லா அதிகாரங்கட்கும் முன்னடைவு தந்திருப்பதைக் காண்கிறோம்.

எனவே, மூன்று பால்களையும் அதிகார முன்னடைவில் அடிப்படையில் ஆயும்போது,

1. அனைத்து அதிகாரங்கட்கும் பரிமேலழகரே முன்னடைவு நல்கியுள்ளார்.
2. இவருக்கு மணக்குடவர் இத்துறையில் முன்னோடியாக இருந்திருக்கிறார்.

என்பவை தெளிவாகின்றன.

**அதிகாரப் பொருள்**

**தீவினை அச்சம்**

தீவினை அச்சம், அருளுடைமை ஆகிய இரு அதிகாரங்களுக்கும் இவ் ஐவர் எழுதிய முன் அடைவு கிடைத்துள்ளது. எனவே அவற்றை ஒப்பாய்வு செய்ததின் விளைவாகக் கீழ்க் காணும் முடிவைப் பெற முடிகின்றது.

தீவினை அச்சம் என்பதை மணக்குடவர், 'தீவினைகளைப் பிறர்க்குச் செய்யத் துணியாமை' என வினைசெயல் அடிப்படையில் முன்னடைவு கூறியுள்ளார்.

உறுப்பு நிலை என்பதைக் கருதி இவ் அதிகாரத்தை வாயால் கூறும் தீச்சொல் விலக்கும் 'புறங்கூறாமை' 'பயனில சொல்லாமை' என்ற அதிகாரங்களின் பின் வைத்த நிலையைக் கருதியதை, 'அவையிற்றின் பிற்கூறப்பட்டது' என்பர் பரிப் பெருமாள்.

இதனைப் பரிதியார் 'பாவத்தைப் பண்ணப் பயப்பட வேணும்' என மன அடிப்படையில் எழுதிச் செல்வர். இங்ஙனம் மூவரும் உடல், மனம் என்பவற்றின் அடிப்படையில் தீவினை செய்யாமை பற்றிச் சுருங்கிய நிலையில் முன்னடைவு கூறி யுள்ளனர். இதில் பரிதியார் பேச்சுமொழியைக் கையாள் கின்றார்.

காலிங்கர் இவ்விடத்து மனம், மொழி, மெய்வழி வினை செல்வதைக் கூறி, அவற்றுள் அடக்கமுடைமை, வெஃகாமை எனப் பலவாறான மனக்கருத்தின் அறத்தியல்பு உணர்த்திப் பின்பு புறங்கூறாமை, இனியவை கூறல் எனப் பலவற்றால் வாய்மொழியின் அறத்தியல்பு உணர்த்தி, மற்று இனித் தீவினை அச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ் என்பவனவற்றால் காயச் செய்தியில் அறத்தியல்பு உணர்த்துவான்எடுத்துக்கொண்டார். அவற்றுள் முன்னர்த் தீவினைக் குற்றம் அறிவிக்கின்றது எனக் கூறும்போது அதிகார முன் பின் அமைந்த முதல் நோக்கில் அறத்தினைக் காணும் நோக்குப் புலப்படுகிறது.

பரிமேலழகர், 'பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனால் மெய்யின்கண் நிகழும் பாவங்களெல்லாம் தொகுத்து விலக்குகின்றார் ஆகலின் இது பயனில சொல்லாமையின் பின் வைக்கப்பட்டது' என்றுரைப்பர்.

இதில் உறுப்பினால் செய்யும் தீவினை பற்றி இவர்க்கு முன்னர்த் தோன்றிய உரைகாரர்கள் கருத்தை ஒட்டிய பாங்கும், அதிகார வைப்புநிலை பற்றிச் சுருங்கிய நிலையில் முன்னடைவு கூறியமையும் புலப்படுகின்றன.

அருளுடைமை

மணக்குடவர் அருளுடைமை அதிகாரத்திற்கு முன்னடை வாக அதனை 'ஈரமுடைமை' எனக் கூறி, அதன் விளக்கமாகப் 'பிற உயிர்த்துன்பத்தைத் தன் உயிர்த் துன்பமாகக்கருதும் தன்மை' என்பார். இதனால் அருளின் விளக்கம் மட்டும் பெறப்பட்டது.

பரிதியார் சுருங்கிய அளவில் 'அருளுடைமை யாவது வானப்பிரஸ்தம்' என்று உரைத்துள்ளார். பரிப்பெருமாள் 'துறவறம் என்பது தவம் மேற்கொண்டொழுகுதல்' எனக் கூறி அதனை வானப் பிரத்தம், சந்யாசம் என வகைப்படுத்தி அவற்றுள் 13 அதிகாரங்களும் அமையும் முறையைக் கூறி இல்வாழ்வார்க்கு ஏற்றதால் அவற்றிற்குப் பின்னாகவும் தவத்திற்கு முன்னாகவும் அருளுடைமையும் புலால் மறுத்தலும் வைத்த அதிகார வைப்புமுறையும் கூறுகிறார்.

இதனால் துறவற இலக்கணம், வகை, உரிய அதிகாரங்கள், அவை அமைந்த முறை என்பனவற்றை அவர்தம் உரையால் அறிகிறோம்.

காலிங்கர் முன்னுடைவால், இல்லறத்தின் பின் துறவறம் வரும் முறை; அதன் முதற்காரணம் அருளுடைமை; அது அனைத்துயிர்க்கும் ஒப்ப நிகழ்வது; அருளின்றிச் செய்யும் தவம் வஞ்சனை உடைத்தாய் அஞ்சத்தக்கது; ஆதலால் துறவறம் பூண்பார்க்கு நிறையருள் வேண்டும் என்பதனை அறிவிப்பது அருளுடைமை எனக் கூறுவார். இதனால் காலிங்கர் உரையில் இயல் அமைப்பில் காணும் இயைபு, காரண காரிய முறைமை, அருளின் இலக்கணம், அது இல்வழிப் படுங்குற்றம், அதிகார நுதல்பொருள் ஆகியவற்றைக் கூறும் பாங்கு முதலாயின புலப்படுகின்றன.

பரிமேலழகர் எழுதிய முன்னுரையில் துறவறம் என்பதனை, இல்லறத்தின் வழுவாதொழுகி, அறிவுடையதாய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம் எனக் கூறும்போது இல்லற நெறியில் கூர்தலறமே துறவறம் எனச்சுட்டி அவ்வறத்தில் வினை மாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டுத் துறவறத்தாரால் காக்கப்படும் விரதங்களையும் அவற்றால் அவை தூயவாய வழி உதிப்பதாகிய ஞானமும் என இருவகைப்படுத்தி உரைப்பார். அறம் செய்வதையும், பாவம் ஒழிவதையும் விரதங்கள் எனவும், அவற்றைத் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வர் என உரைத்தும், அவற்றுள் சிறப்புடையன சிலவற்றை வள்ளுவர் கூறத் தொடங்கினார் என அருளுடைமை அதிகாரத் தோற்றுவாயில் உரைப்பார்.

இவ் விரிந்த, ஆழமான அடிப்படையின் வாயிலாக அருளு டைமையைத் 'தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை' எனவும், இல்லறத்திற்கு அன்புடைமை போலத் துறவறத்திற்கு அருளுடைமை சிறந்ததால் முற்கூறப்பட்டது' எனவும் உரைப்பார். இதனால் வினை மாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டு விரதம் மேற்கொண்டு அதன்வழி ஞானம் பெறும் வழியைக் காட்டும் முதற்படி அருளுடைமை என்கிறார். துறவறம் என்ப தற்கேற்பத் தொடர்பு பற்றா நிலையையும் இல்லறத்தின் வழுவா இயல்பினால் கருணை இயல்பாக எழுந்த நிலையை யும் அதுவே துறவறத்தில் சிறந்த நிலை பெற்றமையையும் முன்னடைவில் கூறியுள்ளார்.

மணக்குடவரும் பரிதியாரும் முன்னடைவு கூறுவதில் சுருக்க நெறியைப் பின்பற்றுகின்றனர். அப்பண்பினைப் பரிமேலழகர் அருளின் இலக்கணமும் அதிகார வைப்பும் கூறுவதில் பின்பற்றியுள்ளார். பரிப்பெருமாள் துறவற இயலின் முழுமை நோக்கை அதிகார எண்ணிக்கை கொண்டு கூறும் முறைமையைப் பரிமேலழகர் தவிர்த்து, 'பலவற்றையும் அகப் படுத்து நிற்கும் சிறப்புடைய சிலவற்றை ஈண்டுக் கூறுவான் தொடங்கி' எனக் கூறும் பொதுமை நெறியில் முடிப்பார்.

காலிங்கர் உரையில் காணும் காரண காரிய முறை வளர்ச்சி சுட்டி 'நிறையருள்' என்பதைக் கருணை என்னும் ஒரு சொல்லால் காட்டியுள்ளார்.

அறத்துப்பாலில் இல்லற இயலில் அமைந்த ஓர் அதிகாரத் திற்கும் துறவற இயலில் அமைந்த ஓர் அதிகாரத்திற்கும் அமைந்த முன்னடைவுகளை ஆயும்போது மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதியார் ஆகியவர்களை ஒரு குழுவாகவும் காலிங்கரைத் தனி ஆசிரியராகவும் காண முடிகிறது.

மணக்குடவர், பரிதியார், பரிப்பெருமாள் ஆகிய மூவரும் சுருங்கிய நெறியில் முன்னடைவு கூறுகின்றனர்.

காலிங்கர் விரிவு நெறியில் உரை கூறுகின்றார்.

பரிமேலழகர் இவ்விரு நெறிகளையும் உணர்ந்து பொரு ளின் இன்றியமையாமை நோக்கி இவ் இருநெறிகளில் உரை கூறிச் செல்கிறார்.

**உரை வேறுபாடு**

இனி, தனித்த நிலையில் குறளுக்கு உரை காணுமிடத்து இவ்வுரைகாரர்கள் போக்கினை ஆய்வோம். சான்றாக,

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார் (952)

என்னும் குறளுக்கு, "ஒழுக்கமுடைமையும், மெய்ம்மை கூறுதலும், சுற்றம் மறைத்தலாகிய நாணமுடைமையும் ஆகிய இம் மூன்றினையும் தப்பார் உயர்குடிப் பிறந்தார் என்றவாறு" என மணக்குடவர் உரை கூறுவார். அதில் வாய்மை, இழுக்கார் என்ற சொற்களுக்குப் பொருளும் நாண் என்பதற்குப் பொருள் விளக்கமும் கூறிக் குடி என்ற சொல்லுக்கு அடை சேர்த்துள்ளார்.

பரிப்பெருமாள் உயர் என்ற அடை சேர்க்காமல் 'இவை மூன்றினையும் தப்பி ஒழுகார்' என்று ஒழுகு நெறியைக் காட்டுவர். (960)

பரிதியார், 'வாய்மை' என்ற சொல்லுக்குச் 'சத்திய வசனம்' எனவும், 'குடிப்பிறந்தார் இழுக்கார்' என்ற தொடர்க்கு 'குடிப்பிறந்தார்க்குக் கைவரும்' எனவும் பொருளுரைப்பர். இங்கு மணக்குடவரும், பரிப்பெருமாளும் எழுவாய்த் தொடராகக் கொண்டதை இவர், நான்காம் வேற்றுமைத் தொடராக மாற்றிய நிலை புலப்படுகிறது.

காலிங்கர், கீழ்ச்சொல்லிப் போந்த ஒழுக்கமுடைமையும், வாய்மை நிகழ்ச்சியும், அங்குத் தோற்றம் செய்த நாணமுடைமையும் என்னும் இம்மூன்றும் சிறிதும் வழுவகில்லார்: யார் எனின் குடிப்பிறந்தார் என்றவாறு' என விரிந்த நிலையில் உரைப்பர். இவ்வுரையில் சொற்களுக்கு முன்னே கூறும் விளக்கம் முன்னர்க் கூறிய அதிகாரங்களின் அடிப்படையையும், பண்புகள் குடிப்பிறந்தார் உடைமையாகும் நிலையையும் காட்டி, யார் எனின் என்ற வினாவை எழுப்பி அதற்கு விடையாகக் குடிப்பிறந்தார் என்ற விடையை நல்குவர். இந்நெறியில் விரிவும், வினா விடை வடிவில் தெளிவும் புலப்படுகின்றன.

பரிமேலழகர், 'உயர்ந்த குடியின்கண் பிறந்தார் தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாண் எனப்பட்ட இம்மூன்றன்கண்ணும்

கல்வியானன்றித் தாமாகவே வழுவார் என்றவாறு' என்றுரைப்பர். வாய்மைக்கு மெய்ம்மை என்ற சொற்பெய்துள்ளமையைப் பரிதியார் சத்திய வாசகம் எனக் கூறியதோடு ஒப்பிடின் இதன் சிறப்புப் புலப்படும்.

ஒழுக்கம், வாய்மை, நாண் என்பவற்றை, 'ஒழுக்கம் முதலியன மெய்ம்மொழி மனங்களினவாகலின் அம்முறையவாயின' எனக் கூறினார், 'கல்வியானன்றித் தாமாகவே வழுவார்' என்ற கூற்றின் சிறப்புரையாக இழுக்குதல் அறியாது வருகின்றமையின் 'இழுக்கார்' என்றார்' எனவும் உரைப்பர்.

ஐவர் உரையையும் ஒப்பிட்டாய்ந்ததின் விளைவாகக் குறளின் சொற்பொருள் காண்பதில் எளிமையைப் பின்பற்றும் முறையையும், பெரிதும் ஒன்றுபட்ட நடையையும், மணக்குடவர் பரிப்பெருமாள் உரைகளில் காண்கிறோம்.

பரிதியார் வடசொல் ஆட்சியை விரும்பிக் கையாள்வதையும், விரிந்த வடிவில் அமைந்த உரை கூறி, வினா விடை காணும் வகையில் கேட்போருக்குத் தெளிவூட்டும் வகையில் காலிங்கர் உரை அமைந்ததையும் காணலாம்.

எளிய உரை, குறளின்கண் அமைந்த சொல்லமைப்பு, அவற்றின் பொருட்காரணம் காட்டுதல், அவற்றின் தனிப் பொருள் குறள் காட்டும் மாந்தர் இயல்போடு இயைதல் முதலாயினவற்றைப் பரிமேலழகர் உரையுள் காண்கிறோம்.

முறைமையும், சொற்பொருள் இயைபில் இயற்கையிலமைந்த தொடர்பும் சுட்டிக் குறளில் காணும் பொருள் மேம்பாட்டைக் காட்டும் தனிப்பண்பையும் பரிமேலழகர் உரையுள் காண்கிறோம்.

மணக்குடவர், உழவதிகாரத்தில் காணும் பொருள் கூறிய பின், மேலும் நூலாசிரியர் கருத்தை வெளிப்படுத்தும் வகையில், 'இது நாடோறும் சென்று பார்க்க வேண்டும் என்றது' என உரைப்பர்.

இதனை மேலும் விளக்கும் வகையில் 'பாராக்கால் பயன் குன்றும்' என் எதிர்மறை வகையில் பொருள் விளக்கம் காட்டி உழுதிறத்தைப் புலப்படுத்துவர் பரிப்பெருமாள்.

நிலம் என்பதை வயல் என்னும் பெண் எனக் கூறி, 'வாடுமாப்போல' என்று பொருளுரைப்பர் பரிதியார்,

காலிங்கர் மற்றவர்கள் கொண்ட குறட்பாடத்தைக் கொள்ளாமல், ''நிலமடந்தை புல்லாள் புரள விடும்' என்று வேறு பாடங்கொண்டு கீழ்வருமாறு பொருள் உரைப்பர் :

> ''தன் நிலக்கிழத்தியைப் பயிர்முகத்துத் தான் சென்று பலநாளும் விழி ஓட்டிப் பாரானாகில் அந்நிலமடந்தை அவனை என்றும் மேவாளாகித் தனக்கு அலங்காரமாகிய பயிர்க்கோலம் அழிந்து தன்னோடு பொருந்தி வாழாளாகிப் புலந்து இவன் வாழ்க்கையைப் புரள விடும் என்றவாறு''.

மேலும், காலிங்கர் மற்ற உரையாசிரியர் கொண்ட பாடத்தைக் காட்டி 'கற்புடை மகளிரை ஊடிவிடும் என்பது பொருள் அல்ல. கிழவன் என்றது அந்நிலத்துக்கு உரியன் என்றது' எனப் பிறர் உரையை மறுப்பர். இக்குறளை உழவு அதிகாரத்தின் இறுதிக் குறளாகக் கொண்டதால் அடுத்துள்ள நல்குரவு என்ற அதிகாரத்திற்கு,

> 'உழுதலைச் செய்யாது இகழ்ந்திருப்பின் இல்வாழ்க்கை புரளும் என்பதனால் வறுமை வந்தெய்தும் குறிப்பு உணர்த்தியமையான் இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலையதிகாரம்'

என முடித்துக் காட்டுவர்,

பரிமேலழகர், செல்லான் இருப்பின்' என்ற தொடர்க்கு 'நாடோறும் சென்று பார்த்து அடுத்தன செய்யாது மடிந்திருக்குமாயின்' என விரிந்த நிலையில் பொருள் காட்டிப் புலக்கு மிடமும் ஊடுதற்குரிய வினையும் கூறுவதைக் காணலாம்.

செல்லுதல் என்ற சொற்கு ஆகுபெயர் என்ற இலக்கணக் குறிப்பு வரைந்த நோக்கினைப் போய்ப் பார்த்து வேண்டுவன செய்தல்' என்னும் காரணப் பொருள் கொண்டு உணர்த்துகிறார். இல்லாள், கணவன் என்ற உறவின் பிணைப்பைப் புலப்படுத்தத் தானே சேறல் வேண்டும் என்பது போதரக் 'கிழவன்' என்றார் என்று சொல் விளக்கம் கூறுகிறார். மேலும் நில விளைவுக்கும், இல்லற இன்பத்திற்கும் பொதுவாக அமைந்த சொல்லினைக் கொண்டே 'அவன் போகம் இழத்தல் நோக்கி' என முடித்துக் காட்டுகிறார்'

இதனால் இலக்கணம் சுட்டிப் பொருள் கூறல், குறளி னகத்தே அமைந்த சொல்லின் துணைகொண்டு பொருள் விளக்கம் காணல், உவமைக்கும் பொருளுக்கும் உள்ள உறவை இருவேறு சொற்களில் கூறாமல் சொற்சுருக்கம் கருதிப் பொதுச் சொல்லைப் (போகம்) பயன்படுத்தி உரையழகு காணும் போக்கு முதலாயினவற்றை அறிகிறோம்.

## சொற்பொருள் ஆய்வு

குறளில் காணும் சொற்களுக்கு உரையாசிரியர்கள் தத்தம் அறிவு, அனுபவம் ஆகிய அடிப்படைகளில் பொருள் காணு கின்றனர். அவற்றுள் சில சான்றுகளைக் காணலாம்.

சான்றாக. 'மகளிர்' என்னும் சொல்லுக்கு இவ் ஐந்து உரையாசிரியர்களும் எங்ஙனம் பொருள் கொண்டனர் என் பதைக் காண்போம். மகளிர் என்னும் சொல் குறளில் 57, 822 912, 918, 974 ஆகிய குறட்பாக்களில் வருகின்றன, அவற்றிற்கு உரையாசிரியர்கள் கொண்ட பொருள் வருமாறு :

| குறள் | மணக் குடவர் | பரிதியார் | பரிப் பெருமாள் | காளிங்கர் | பரிமே லழகர் |
|---|---|---|---|---|---|
| 57 | குலமகளிர் | குலமகளிர் | — | இல்வாழ்க் கைக்குரிய மகளிர் | குலமகளிர் |
| 822 | பெண் | — | — | குலமகளிர் | பெண் |
| 912 | மகளிர் | மடவார் | மகளிர் | மகளிர் | மகளிர் |
| 918 | மகளிர் | மகளிர் | மகளிர் | மகளிர் | மகளிர் |
| 974 | — | குலமகள் | மகளிர் | மகளிர் | மகளிர் |

அதிகாரப் பொருண்மையை ஒட்டியும், அடைய ஒட்டியும் ஒரு சொல்லின் குறிப்பிட்ட பொருளை வரையறுப்பது மரபு, மகளிர் என்ற சொல் பொதுவாகப் பெண்களைக் குறிக்கும்.

மேலே கண்ட அடைவால் மகளிர் என்ற சொல் எடுத் தாண்ட இடங்களையும், அதற்கு உரையாசிரியர் கண்ட பொருள்களையும் வேறுபடுத்திக் காட்ட முடியும். பொதுவாக இச்சொல்லைப் பொறுத்தவரை அதிகாரத்தை விட அடை மொழியின் துணைகொண்டே உரையாசிரியர்கள் பொருள் கண்டுள்ளனர்.

'மகளிர் **மனம்** போல வேறுபடும்' (822) என்னும் குறளில் அமைந்துள்ள 'மனம்' என்னும் சொல்லிற்கு உரையாசிரியர்கள் பொருள் கண்டதைக் காண்போம்:

மணக்குடவர் **பெண்மனம்** எனவும், பரிதியார் அப்பெண்டிரை இருமனப் பெண்டிர் எனவும் பொருள்காண்பர். காலிங்கர் பொதுமகள் என்னாது மகளிரெனப் பொதுவகையால் கூறியதால் 'குலமகளிருங் குணம் கெடுதல் கூடும்' என்ற குறிப்பு வெளிப்படுகின்றது.

பரிமேலழகர் 'பெண் மனம் பேதின்றொருப் படுப்பேன் என்னும் எண்ணில் ஒருவன்' என்னும் வளையாபதித் தொடர் கொண்டு சுட்டுவர்.

இங்ஙனம் பரிமேலழகர் காலிங்கர் பொருளைத் தழுவியது போல இங்குப் பொருள் கூறிச் செல்வதைக் காண்கிறோம்.

இவ்வாறே பிற சொற்களுக்கும் அடைவு கண்டு தெளிதல் கூடுமாயினும் விரிவஞ்சி இங்கு ஒன்று மட்டும் காட்டப்பட்டது. இதன் அடிப்படையில் மேலும் இரு சொற்களுக்கு (காரிகை 571. கை 925) உரையாசிரியர் காணும் பொருள் நெறியை ஒப்பாய்வு செய்வோம்.

'காரிகை' (571) என்ற சொல்லுக்குப் பொருள் கூறும் போது மணக்குடவர் 'அழகு' என்பர். பரிப்பெருமாளும்' 'அழகு' என்பர். பரிதியார் 'திருமாது' என்று கூற, காலிங்கர் 'நன்மை' என்பர். பரிமேலழகர் மணக்குடவர், பரிப்பெருமாள் வழிநின்று, அழகு என்ற பொருளையே கூறி அதனை 'உயிர் அழகு' எனச்சுட்டி 'உயிருக்கு உறுப்பு அது' என நிலைபேறும் கூறுவர்.

'கை' என்ற சொல்லுக்குப் (925) பயன் என்ற பொருளில் மணக்குடவரும் பரிப்பெருமாளும் பொருள் காணப் பரிதியார் 'கையாம் உறுப்பையே' குறிப்பிடுவர். காலிங்கரோ 'ஒழுக்கம்' என்பதைத் தனித்து எடுத்துரைப்பர். ஆனால் பரிமேலழகர் 'செய்வது' என்று பொருள் கூறி அது அப்பொருள் உடைய தாதலைப் 'பயனுடைப் பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று' (புறம் 20) என்ற புறநானூற்றுத் தொடர் கொண்டு நிறுவுவர்.

இப்பொருளே மரபுநெறி நின்று சிறந்து நிற்பதைக் காட்டு கிறது.

## பாட வேறுபாடு

உரையாசிரியர்கள் திருக்குறளில் கண்ட பாடபேதங்கள் பலவாக உள்ளன.[10]

மணக்குடவரினின்றும் 6 இடங்களில் பரிப்பெருமாள் பாட வேறுபாடு கொண்டுள்ளார். (480, 1077, 1081, 1116, 1178, 1195). இவற்றில் பெரிதும் காமத்துப்பாலிலேயே இவ்வேறு பாடுகள் காணப்படுகின்றன

காலிங்கர் (288, 317, 930, 1033) காட்டிய பாடவேறுபாடு களைப் பரிமேலழகர் மூலபாடமாகக் கொண்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

பரிமேலழகர் தம்முடைய உரையில் 48 இடங்களில் பிறர் உரைக்கும் பாடவேறுபாடுகளைக் குறிப்பிட்டுள்ளார்.[11] அவற்றுள் காரணங்காட்டி மறுத்தவை 8. மீதி இடங்களில் பாடங்கள் குறித்துக் கருத்துத் தெரிவிக்காததால் அவை பொருத்தம் உடையன எனக் கொண்டார் எனலாம்.

காலிங்கரின் பாட வேறுபாடுகளை 15 இடங்களில்[12] பரிமேலழகர் எடுத்துக்காட்டியுள்ளார்.

எனவே உரையாசிரியர்கள் கையாண்ட பாட வேறுபாடு களைக் காணும்போதும், அவற்றிற்கு அவர்கள் எழுதிய உரை வேறுபாட்டைக் காணும்போதும் பெரும்பான்மையான இடங் கள் அவற்றைத் தழுவிச் செல்வதைக் காண்கிறோம்.

பொதுவாக உரையாசிரியர்கள் பாட வேறுபாடுகளைச் சுட்டுவதில்,

1. இலக்கணம் கூறி மறுத்தல்
2. ஆசிரியர் ஓதியதை அறியாமல் உரையாசிரியர்கள் தத்தமக்குத் தோன்றியவாறு உரைத்தல்
3. பொருண்மைவழி நின்று மறுத்தல்
4. பிற உரையாசிரியர் கூறும் வேறு பொருளைக் கூறி அது பொருந்தாமையை வினை அடிப்படையில் நின்று மறுத்தல்

ஆகிய நெறிகளை எடுத்தாளுவர்.

இங்ஙனம் இலக்கணம், ஆசிரியர் உளம் அறியாமை, சொற்பொருண்மை காணாமை என்பன போன்ற காரணங்களால் முன்னோர் உரை மறுக்கும் நெறி பரிமேலழகர் உரையிலும் காண முடிகிறது.

இவ்வகையில் இன்னும் பழமொழிகள், புராணக் கதை மரபுகள், எடுத்துக்காட்டி விளக்கி மேற்கோள் கூறல், மரபு நெறி, ஆசிரியர் சிறப்புச் சுட்டல் போன்ற பல வகையாலும் உரையாசிரியர்களின் ஒற்றுமை வேற்றுமைகளை உரையடிப் படையில் ஆராய்தற்கு இடமுண்டு. அது இக்கட்டுரையின் தலைப்புக்கு மிக விரிந்து செல்லுமாகலான் சில கூறுகளில் மட்டுமே ஒப்பாய்வு செய்யப்பட்டது.

குறிப்புகள் :-

1. குறள் 28, 284, 778, 1198.
2. **திருக்குறள் காமத்துப்பால்**, காலிங்கருரை - பரிப் பெருமாளுரை, தி. பொ. பழநியப்ப பிள்ளை பதிப்பு - ப. 140.
3 **திருக்குறள் உரைக்கொத்து** பொருட்பால் பதிப்பு திருப்பனந்தாள் காசிமடம் — ப. 27.
4. திருக்குறள் காமத்துப்பால், காலிங்கர் — பரிப்பெருமா ளுரை, ப 2.
5. அப்பாத்துரை, கா., **திருக்குறள் மணிவிளக்கவுரை**, நான்கு தொகுதிகள், (1967, 1968, 1970, 1971).
குழந்தை, அ. மு., **திருக்குறள் குழந்தையுரை**, (1949)
தேவநேயப் பாவாணர், ஞா , **திருக்குறள் மரபுரை**, (1969).
6. வரதராசனார், மு., **திருக்குறள் தெளிவுரை**, (1949).
மாணிக்கம், வ. சுப., **உரைநடையில் திருக்குறள்**, (1936).
கோவிந்தசாமி, மு , **திருக்குறள் நயவுரை**. (1962).
7. **திருக்குறள் உரை வேற்றுமை மட்டும் குறித்துத் தனி ஆய்வு நூல் வெளிவந்துள்ளது குறிப்பிடத்தக்கது.**
— சாரங்கபாணி, இரா., **திருக்குறள் உரை வேற்றுமை**, அறம் (1957), பொருள் (1960). காமம் (1964)
3. தொல். களவியல் 14, 15
9. செய்குன்றும் இளமரக்காவும் ஆகிய யாரும் இல்லதோர் சிறையிடத்து மற்று இவன் வல்லப்பூக் கொய்துகொண்டு ஆங்கு இனிது நின்ற தலைமகளை நிரம்ப முன் தான் செய்த தவப்பயனாகிய விதிவகையால் ஓர் வேட்டம் போந்து விளையாடுகின்ற தலைமகள் ஒரு மான் தொடர்ந்து வந்து எய்திக் கண்டாள். கண்டபின் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.
— காலிங்கர் உரை, குறள் 1081.
10. பாடபேதம் குறித்து மூன்றாம் இயலில் விளக்கப் பட்டுள்ளதெனினும் ஒப்பாய்வு கருதி இங்கும் சுருக்க மாகத் தரப்பட்டுள்ளது.
11. இயல் - 3, குறிப்பு —29 காண்க.
12. குறள் 500, 501, 636, 660, 662, 979, 1058, 1161.
13. குறள் 420, 437, 501, 639, 710, 953, 958, 1012, 1013, 1052, 1056, 1081, 1122, 1161, 1178,

6

# பரிமேலழகரின் உரைப்பெருமை

**உரைப்பெருமை**

பரிமேலழகரின் திருக்குறள் உரைத்திறன் குறித்து இது காறும் ஆராய்ந்ததில் அவர்தம் உரைப்பண்புகளாகப் பல வற்றைக் கண்டோம். இவ் ஆய்வினால் தெளியப்பட்ட பரிமேலழகரின் உரைப்பெருமையைக் கீழ்வருமாறு தொகுத்துக் காணலாம் :

பரிமேலழகரின் உரைத்திறனுக்கு அடிப்படையாக அமை வது அவர்தம் பல்துறைப் புலமை ஆகும்.

தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த பயிற்சி உடையவர் என்பதை அவர் எடுத்துக்காட்டியுள்ள சங்க நூல்கள், காப்பி யங்கள், கீழ்க்கணக்கு நூல்கள், சமய நூல்கள், இலக்கண நூல்கள் முதலிய 27 நூல்களிலிருந்து 230 மேற்கோள்களைக் காட்டியிருப்பதால் அறிகிறோம். இதனைக் கீழ்வரும் அடை வாலும் இவ் அடைவிற்குரிய முழு விவரத்தை இணைத்துள்ள பின்னிணைப்பாலும் நன்கு தெளியலாம்.[1]

| நூல்கள் | | மேற்கோள்கள் |
|---|---|---|
| சங்க நூல்கள் | 10 | 62 |
| காப்பியங்கள் | 5 | 30 |
| கீழ்க்கணக்கு நூல்கள் * | 5 | 104 |
| சமய நூல்கள் | 2 | 4 |
| பிற | 2 | 2 |
| இலக்கண நூல்கள் | 3 | 20 |
| மேற்கோள் விளங்காப் பாடல்கள் | | 8 |
| | 27 | 230 |

* திருக்குறளை எடுத்தாண்ட இடங்களை இவ் ஆய் வேட்டின் மூன்றாம் இயல், குறிப்பு எண். 37இன் கீழ்க் காணலாம்.

சங்க இலக்கியத்தில் புறப்பொருள் நூல்களுள் புறநானூற்றிலும், அகப்பொருள் நூல்களுள் கலித்தொகையிலும் பரிமேலழகரின் ஆழ்ந்த புலமை புலப்படுகின்றது. அது போன்றே காப்பியங்களில் சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் இவற்றில் தோய்ந்த உள்ளம் குறளுரையில் பல இடங்களில் வெளிப்படுகின்றது. குறிப்பாக நீதிநூல்களில் நாலடியாரை 'நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்பதற்கேற்பத் தம்முரையில் எடுத்தாண்டு குறள் விளக்கத்திற்கு அணி செய்கிறார்.

வடமொழி இலக்கியங்களிலும் இவருக்கு ஆழ்ந்த பயிற்சி இருந்திருக்கிறது என்பதை வடநூற் கருத்துக்களாக 39 இடங்களில் குறிப்பதிலிருந்தும் வெளிப்படையாக மனுநூல் (அறத்துப்பால், உரைப்பாயிரம்), போசராசனின் இன்பநூல் (காமத்துப்பால் தோற்றுவாய்) ஆகியவற்றைக் குறிப்பதாலும் தெளியலாம்.

அரசன், அமைச்சன், துணையாதற்குரிய பெரியோர், ஒற்றர், போர்ப்பணி, தூது, என்னும் பல்வேறு அரசியல் அங்கங்களை விளக்குமிடத்து ஏனைய உரையாசிரியர்களுக்கு இல்லாத ஆழ்ந்த அரசியல் புலமை இவர்பால் அமைந்து விளங்குவதைக் காண்கிறோம்.

பரிமேலழகர் இவ்வகையில் விரித்து உரைத்த கருத்துக்கள் இக்காலத்திற்கும் ஏற்பு உடையனவாய் இருப்பதை அறிஞர் சுட்டுவதனாலும் இக்கூற்று வலுப்படுகின்றது.

பொருட்பாலில் காணப்படும் வள்ளுவருடைய பொருள் நூல் கருத்துக்கள் இக்காலப் பொருள்நூல் முறைமைக்கும் பொருந்துவன என்று அறிஞர் பலரும் கருதுகின்றனர். இத்தொடர்பிலமைந்த குறட்பகுதிக்கு அமைந்த பரிமேலழகரின் உரைக்கருத்துக்கள் மேற்கூறிய கூற்றுக்கு ஆதாரமாக நின்று மேலும் விளக்கம் தருகின்றன என்பதை இவ்ஆய்வில் கண்டோம். குறிப்பாக அரச வருவாய், செலவு, காப்பு போன்ற பொருள்நூற் பாகுபாடுகளை விளக்கி உரைப்பதினின்று இக்கருத்து வலுப்பெறுகின்றது.

அறத்துப்பாலில் கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல், துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்ற அதிகாரங்களுக்கு அமைந்த இவர் உரையிலிருந்து இவருடைய பல்சமயப் புலமை நன்கு வெளிப்படுகின்றது.

மறுக்கும் வழி மறுப்பினும் இவ்வாறு பல சமயக் கருத்துக்களை ஏற்றவிடத்து இணைத்துக் கூறுவதனால் அவருடைய சமயப் பொறை வெளிப்படுகின்றது என்பதை இவ் ஆய்வில் கண்டோம்.

துறவு, மெய்யுணர்தல் என்னும் அதிகாரங்கட்கு உரை வகுக்குமிடத்து இந்திய மெய்ப்பொருள் நெறியில் எண்வகை யோகம், தத்துவம் பற்றிய கருத்துக்களையும், நடைமுறை இயல்புகளையும் விரித்துக் கூறுவதனால் இத்துறைகளில் அவருக்கு இருந்த புலமையின் ஆழமும் அகற்சியும் வெளிப் படுதலைக் காணலாம்.

குறளின்கண் செறிந்து கிடக்கும் பொருளை வாங்கி விரித்து எழுதும் இடத்தும், பிறர் உரையினும் தம் உரையே சிறந்தது என நிறுவுமிடத்தும் சில தொடர்க்குச் சிறப்பான விளக்கம் தருமிடத்தும் பரிமேலழகர் அளவைநூற் கொள்கை களை எடுத்தாளுவதால் அத்துறையில் அமைந்த புலமை நன்கு விளங்கும். (273-278).

ஏனைய உரைகாரர்களைக் காட்டிலும் பரிமேலழகர்தான், அளவைநூற் கூறுபாடுகளையும், கொள்கைகளையும் பெயர் விதந்து தம் உரைக்குப் பயன்படுத்துகிறார் என்பது குறிப் பிடத்தக்கது.

மருந்து என்னும் அதிகாரத்திற்கு அமைந்த இவர் உரை யில், உடலியல், மருந்தியல் (Pharmacology), ஆகிய துறை யறிவும், மருத்துவர், செவிலியர் ஆகிய மருந்துவத்துறை யினர்க்குரிய ஒழுகலாறுகள் பற்றிய அறிவும், உணவு, உண் ணும் நேரம், அளவு, உணவின் தன்மை போன்ற ஆதுரன் (நோயாளி) மேற்கொண்டொழுகுதற்குரிய நெறிமுறைகள் பற்றிய அறிவும் விரவிக் கிடப்பதைக் காண்கிறோம்.

இத்துறையிலும் ஏனைய குறள் உரைகளிலும் பரிமேலழகர் உரையே சிறந்து விளங்குகிறது

குறிப்பறிதல் (பொருட்பால், காமத்துப்பால்) அதிகாரங் களுக்கு அமைந்த இவருடைய உரையில் உளவியல் பற்றிய சில நுணுக்கமான குறிப்புக்கள் இருப்பதால் இத்துறையிலும் அவருக்கிருந்த புலமையை அறிகிறோம்.

உழவு அதிகாரத்துள் இவர் வகுத்த உரையில் உழவுத் தொழிலின் பல்வேறு நிலைகள், அரசனது வருவாய்க்கும் உழவுத் தொழிலுக்குமுள்ள இயைபு என்பன குறிக்கப்படு தலின் இத்துறையிலும் அவருக்கிருந்த அறிவு வெளிப்படு கின்றது.

பரிமேலழகர் கண்ட உரைப்போக்கில் சில வரையறைக் குட்பட்ட நெறிகளை இவ்வாய்வில் காண முடிகிறது. அவை யாவன :

மூன்று பால்களையும் தொடங்குமுன் தோற்றுவாயாகச் சிறப்புரை எழுதிச் செல்கிறார்.

பாலில் காணும் இயல்களை வகுக்கும்போது மிகைநிலைப் பகுப்பையோ, குறைநிலைப் பகுப்பையோ கையாளாது தகு நிலைப் பகுப்பையே மேற்கொண்டுள்ளார்.

அதிகாரத் தோற்றுவாய் செய்து, அதன் இயைபையும் எடுத்துரைக்கிறார்.

ஓரதிகாரத்தில் காணும் பத்துக் குறள்களையும் பொரு ளடிப்படையில் பகுக்கும் சிறப்பு முயற்சியைக் குறளின் தொடக்கம் முதல் முடிவு வரை மேற்கொண்டுள்ளார்.

அறத்துப்பால், பொருட்பால்களுக்குக் கருத்துத் தொகுப்பை உரையிறுதியில் கூறிக் காமத்துப்பாலில் மட்டும் கூற்றுநிலைக்கேற்பப் பொருள் கூறுதற்குக் குறளின் முன்னர்க் கருத்துத் தொகுப்பைக் கூறியுள்ளார்.

குறளின் பொருள் விளக்கத்திற்கேற்பச் சொல்லையும் தொடரையும் வேண்டுமிடத்து அவாய் நிலையால் வருவித்துக் கொள்கிறார்.

விதப்புக் கிளவியால் பெறும் சிறப்புரையை நன்கு கூறிச் செல்கிறார்.

சொல்லுக்கு அரும்பொருள் காண்பதில் பரிமேலழகர் மற்ற உரையாசிரியர்களை விடத் தனித்து நிற்பதை உரை முழுதும் நன்கு காண முடிகிறது. (காண்க : பின்னிணைப்பு : 2)

அருந்தொடர் நயம் காட்டும் முறை, உவமையைப் பல நெறியில் நின்று விளக்கல், பாடபேதம் காட்டல், பிறர் உரை ஏற்றல், மறுத்தல் ஆகிய இரண்டிலும் காணும் முறைமை, முன்

னொடு பின் மலையாமை, குறளுரைக்குக் குறளின் மேற்கோள் ஆகிய சிறப்பு நெறிகளைப் பின்பற்றும் முறையை இவ்வாய்வு தெளிவுபடுத்துகின்றது.

இலக்கிய உரை காணுகின்ற தமிழ் மரபையொட்டிச் சிறந்த உரையினைத் திருக்குறளுக்கு அமைத்திருப்பதை நன்கு தெளிய முடிகிறது. மேலைநாட்டின் தொடர்பால் விளைந்த அறிவுச் சூழலில் அம்மரபில் செல்லுகின்ற திறனாய்வுப் போக்கு நம் பண்டை உரையாசிரியர்க்கு உண்டா இல்லையா என்னும் வினா இக்காலத்து எழுப்பப்படுகிறது. இந்நிலையில் இன்று பெருவழக்கினதாக உள்ள விளக்கமுறைத் திறனாய்வின் அடிப்படைகள், கொள்கைகள் ஆகியவற்றால் ஆராயுமிடத்துப் பரிமேலழகர் உரை சிறந்து விளங்குவதைக் காண்கிறோம்.

ஆழ்ந்த வாழ்க்கை அனுபவமும், மேற்கொண்ட நூலின் துறை அனுபவமும் அமையப்பெற்றுத் திருக்குறளின் பொருட் சிறப்பையும் கலைச்சிறப்பையும், கற்போர் விளங்கிக் கொள்ளு மாறும் அதனால் இன்பம் அடையுமாறும் ஒப்பாய்வு, பகுப் பாய்வு என்னும் இரு திறனாய்வுக் கருவிகளின் மூலம் தம் உரையை அமைத்துப் பரிமேலழகர் சிறந்த திறனாய்வாளராக வும் விளங்குகிறார் என்பதை இவ் ஆய்வில் கண்டோம்.

இலக்கணப் புலமையைப் பரிமேலழகர் மற்ற உரையாசிரி யர்களை விட மிகுதியாகத் தம் உரையில் துணையாகக் கொண்டுள்ளார்.

எழுத்து இலக்கணப் புலமையை முதற்குறள் உரையில் பயன்படுத்தியுள்ளார்.

குற்றியலுகரம் போன்ற எழுத்துக்களைச் சிறப்பாக எடுத் துக் கூறி அது சொற்றொடரில் புணரும் நெறிகொண்டு கிடைக்கும் உண்மைகளால் பிறர் உரையை மறுக்கின்றார்.

சொல்லிலக்கணத்தில் வினைச்சொல்லில் எச்சமுடிவு களை மிகக் கூர்ந்து முடித்துக் காட்டுகின்றார்.

தொகை பற்றிய விளக்கங்களைச் சுட்டிக்காட்டிப் பொருள் முடிபைத் தெளிவு செய்கிறார்.

வேற்றுமைத் தொகையினை விரித்தும் வேற்றுமை மயக் கத்தில் எந்த வேற்றுமை எந்த வேற்றுமைக்குரிய பொருளில் வந்தது எனவும் அதற்குரிய உருபுகளைச் சுட்டியும் செல்வது இவர் உரையின் தனிச்சிறப்பெனக் கண்டோம்,

பொருளிலக்கணத்தில் களவு, கற்பு என்பதை அடிப்படை யாகக் கொண்டு காமத்துப்பால் உரையை வகுக்கின்றார்.

புறத்திணை இலக்கணத்தில் அவ்வத்துறைகளைக் கூறி அதன் அடிப்படையில் குறளின் பொருள் நலத்தை நன்கு காண முயல்வதில் வெற்றி பெற்றுள்ளதை இவ்வாய்வால் கண்டோம்.

குறிப்பாக எந்த அணியைக் குறள் பூண்டுள்ளதென எடுத்துரைப்பதில் மற்ற உரையாசிரியர்களை விடத் தனித்து நிற்கிறார் என்பதை இவ் ஆய்வு உணர்த்துகிறது.

பரிமேலழகர் தனித்தன்மையைக் காணும் முறையில் மற்ற உரையாசிரியர்கள் உரைகளை முழுமையாக ஒப்பிட வாய்ப் பில்லாவிடினும் சுருங்கிய அளவில் ஆய்ந்ததால் கிடைத்த உண்மைகள் பின்வருமாறு :

மணக்குடவர் பரிப்பெருமாள் போன்றவர் பின்பற்றிய சுருங்கிய நெறியைப் பரிமேலழகர் வேண்டுமிடத்துப் பயன் படுத்திக் கொண்டார்.

காலிங்கர் போன்று எல்லா இடத்தும் விரிந்த உரை கூறா மல் இன்றியமையா இடங்களில் மட்டும் அந்நெறியைப் பரிமே லழகர் மேற்கொண்டார்.

தம்காலத்து நிலவிய இலக்கணப் புலமையின் துணை கொண்டு குறளின் கருத்தை அறியவும் பிறர் உரையை மறுக்க வும் பயன்படுத்தினார்.

அதிகார முன்னடைவு விளக்கம் எல்லா அதிகாரங்கட்கும் இவர் ஒருவரே கூறியுள்ளார்.

இலக்கிய மரபுகளை எடுத்தாளும்போது குறளின் கருத்தை நன்கு உணரவும், பிறர் உரையைப் பொருந்தாமை கூறவும் கையாண்டதை அறிகிறோம்.

பின்னிணைப்பு—1

## 1. பரிமேலழகர் எடுத்தாண்ட நூல்கள்

| எண். (1) | பாடலடி (2) | எடுத்தாளப் படும் இலக்கியம் (3) | குறளில் வரும் இடம் (4) | நோக்கம் (5) |
|---|---|---|---|---|
| | **சங்க இலக்கியம்** | | | |
| | **1. புறநானூறு : 31.** | | | |
| 1. | தூங்குகையா னோங்குநடைய | புறம் 22 | 39 | இ. வி. |
| 2. | இட்டுந் தொட்டுங் கவ்வியும் துழந்தும் நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தல் | ,, 188 | 64 | பொ. வி. |
| 3. | தன்னகம் புக்க குறுநடைப் புறவின் றபுதி யஞ்சிச் சீரை புக்கோன் | ,, 43 | 72 | பொ. வி. |
| 4. | இனியகனிக ளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தானவற்றை | ,, 91 | 100 | பொ. வி. |

குறிப்பு ; அதிகமாக மேற்கோள் தரப்பட்ட நூல் முன்னரும், ஏனையவை அடுத்தும் தரப்பட்டுள்ளன.
* குறியிட்டவை பாடல் அல்லது தொடரின் கருத்து.

சுருக்க விளக்கம் : பொ. வி. : பொருள் விளக்கம்
சொ. பொ. : சொற்பொருள் விளக்கம்
இ. வி. : இலக்கண விளக்கம்

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 5. | பெரிய வறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை யறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்* | ,, 34 | 110 | பொ. வி. |
| 6. | வியா - துடம்பொடு நின்ற வுயிருமில்லை | ,, 363 | 207 | சொ. பொ. |
| 7. | உணவின் பிண்டம் உண்டி முதற்று | ,, 18 | 231 | பொ. வி. |
| 8. | புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவ னேவா வான வூர்தி எய்துப வென்பதஞ் செய்வினை முடித்து | ,, 27 | 234 | பொ. வி. |
| 9. | ஒப்பநாடி அதற்குத்தக வொறுத்தல்* | ,, 10 | அ,உ.பா. | பொ. வி. |
| 10 | சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல | புறம் 31 | அறன்.தோ. | பொ. வி. |
| 11. | மாண்ட-அறநெறி முதற்றே அரசின் கொற்றம் | ,, 55 | 384 | பொ. வி. |
| 12. | பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று | ,, 183 | 395 | பொ. வி. |
| 13. | யாண்டு பலவாக நரையில மாயினேம் | ,, 191 | 399 | பொ. வி. |
| 14. | மாண்டே அறநெறி முதற்றே அரசின் கொற்றம் | ,, 55 | 546 | பொ வி. |
| 15. | பயக்குறையில்லைதாம் வாழுநாளே | ,, 188 | 612 | சொ பொ. |
| 16. | போரெனிற் புகலும் புனைகழல் மறவர் | ,, 31 | 778 | பொ. வி. |
| 17. | புட்பகைக் கேவானாகலின் சாவேம் யாம்என நீங்கா மறவர்வீங்குதோள் புடைப்ப | ,, 68 | 778 | பொ. வி, |
| 18. | இன்றே போல்க நும்புணர்ச்சி | ,, 785 | 785 | பொ. வி. |
| 19 | காலனும் காலம் பார்க்கும் பாராது வேலீண்டு தானை விழுமியோர் தொலைய வேண்டிடத்தடூஉம் வெல்போர் வேந்தர் | ,, 41 | 893 | பொ.வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 20. | பழனுடைப் பெரும்மரம் வீழ்ந்தெனக் கையற்று | ,, 209 | 925 | சொ, பொ. |
| 21 | கழுவாயுமுள | ,, 34 | 948 | பொ. வி. |
| 22 | புலவர்பாடும் புகழுடையோர் விசும்பின் வலவனேவா வானவூர்தி யெய்துவர் | ,, 27 | 970 | பொ. வி. |
| 23. | பெருங்கடற் காழிய னையன் மாதோ | ,, 330 | 989 | சொ. பொ. |
| 24. | உறைப்பெய லோலை போல மறைக்குவன் பெரும நிற்குறித்து வருவேலே | ,, 290 | 1029 | சொ.பொ. |
| 25. | ஊன்றுசான் மருங்கினின்றதன் பயனே | ,, 35 | 1034 | பொ.வி. |
| 26. | உயிரெனச் சிறந்த அரசனதியல்பு* | ,, 186 | அர. தோ. | பொ. வி. |
| 27. | காவற் சாகாடுகைத்தல்* | ,, 185 | அங்.தோ. | சொ. பொ, |
| 28 | காவற் சாகாடுகைத்தல்* | ,, 185 | பெரி. துணை.தோ. | சொ. பொ. |
| 29. | அரிமயிர்த்திரண் முன்கை | புறம் 11 | 1090 | இ. வி. |
| 30. | துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன் நட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன் | ,, 380 | 1165 | சொ. பொ |
| 31. | கோட்டங் கண்ணியும் கொடுந்திரை யாடையும் | ,, 275 | 1313 | பொ. வி. |
| | 2. கலித்தொகை : 16. | | | |
| 1. | என்னி ரறியாதீர்போல விவை கூறி னின்னீர வல்ல நெடுந்தகாய் | கலி. பாலை 6 | 144 | இ. வி. |
| 2. | அறிவுடை யந்தணன் அவளைக் காட்டென்றானோ | ,, மருதம் 27 | 167 | இ. வி. |
| 3 | கடியு — மிடந் தேற்றாள் சோர்ந்தனள்கை | ,, குறிஞ்சி 27 | 187 | இ. வி. |
| 4. | உளனா வென்னுயிரையுண்டு | ,, குறிஞ்சி 22 | 205 | இ. வி. |

| (1) | (2) | (3) | | (4) | (5) |
|---|---|---|---|---|---|
| 5. | கண்டவ ரில்லென வுலகத்துள் உணராதார் தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள் நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவு மறையாவாம் நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின் | கலி. நெய்தல் | 8 | 293 | பொ, வி. |
| 6. | தூவறத் துறந்தாரை | ,, நெய்தல் | 1 | 455 | சொ. பொ |
| 7. | கோட்டின் வாய்ச் சாக்குத்தி | ,, முல்லை | 5 | 829, | இ. வி. |
| 8. | அறிவுடை யந்தணன் அவளைக் காட்டென்றானோ | ,, மருதம் | 7 | 929 | இ. வி. |
| 9. | நோதக்க செய்யுஞ் சிறுபட்டி | ,, குறிஞ்சி | 15 | 1074 | சொ. பொ. |
| 10. | பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல் | ,, நெய்தல் | 16 | பண்பு தோ | சொ. பொ. |
| 11. | முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக் கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்து மமையாரென் ஒள்ளிழை திருத்தும் | ,, பாலை | 3 | 1152 | பொ. வி. |
| 12 | வாலிழை மகளி ருயிர்ப்பொதி யவிழ்க்குங் காலை | கலி. நெய்தல் | 2 | 1221 | பொ. வி. |
| 13. | ஒல்கிடத்துலப்பிலா வுணர்விலார் தொடர்பு | ,, பாலை | 25 | 1293 | பொ. வி. |
| 14. | கடம் பூண்டொருகா னீவந்தை | ,, குறிஞ்சி | 27 | 1301 | இ. வி. |
| 15 | பந்தெறிந்தவயா | ,, குறிஞ்சி | 4 | பசப். அதி. முன். | பொ.வி. |
| 16. | நிறையெனப்படுவது மறைபிறரறியாமை | ,, நெய்தல் | 16 | நிறையழிதல் | பொ.வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| | 3. அகநானூறு : 4. | | | |
| 1. | சென்றுசேர் கல்லாப் புள்ள<br>உள்ளிவென்றாழ் வியன்குளம் | அகம். 42 | 210 | பொ.வி. |
| 2. | இருதலைப் புள்ளின் ஓருயிராய | ,, 12 | 1109 | பொ.வி. |
| 3. | பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கல் | ,, 5 | 1120 | பொ.வி. |
| 4 | இஃதோ செல்வர்க் கொத்தனென்யான் | ,, 26 | 1161 | இ வி. |
| | 4. நற்றிணை : 2. | | | |
| 1 | கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்<br>கல்லாச் சிறஅர் நெல்லிவட் டாடும் | நற்றிணை 3 | 401 | சொ.பொ. |
| 2. | முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்<br>நஞ்சு முண்பர் நனிநா கரிகர் | ,, 355 | 580 | சொ.பொ. |
| | 5. குறுந்தொகை : | | | |
| 1. | குன்றி - னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல் | குறுந். கடவுள். | 1250 | சொ.பொ. |
| 2 | நன்றென உணரார்மாட்டும் சென்றேநிற்கும் | குறுந். 78 | 1255 | பொ வி. |
| | 6. பட்டினப்பாலை : 2 | | | |
| 1. | கொள்வது மிகையும் கொடுப்பது குறையும்<br>ஆகாமல் ஒப்பநாடிச் செய்தல் | பட்டினப்பாலை<br>209—210 | 120 | பொ.வி. |
| 2, | காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு | பட்டினப்பாலை<br>283—284 | 1032 | பொ.வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| | 7. **பரிபாடல் : 2.** | | | |
| 1. | கடல் குறைபடுத்தநீர் கல்குறைபட வெறிந்து | பரிபாடல் 20 | 17 | சொ.பொ. |
| 2. | தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன் | பரிபாடல் (நுண் பொருள்மாலை மேற்கோள்) | 23 | இ.வி. |
| | 8. **நெடுநல்வாடை : 1.** | | | |
| 1. | நூல்கால் யாத்த மாலை வெண்குடை— தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப | நெடுநல் 184-185 | 1144 | சொ.பொ. |
| | 9. **பதிற்றுப்பத்து : 1.** | | | |
| 1. | சினனே காமம் கழிகண்ணோட்டம் என்றிவற்றை அறந்தரு திகிரிக்கு வழியடையாகும்* | பதிற்றுப்பத்து 22 | 432 | பொ.வி. |
| | 10. **பொருநராற்றுப்படை : 1** | | | |
| 1. | பருகு வன்ன வருகா நோக்கமொடு | பொருநரா. 77 | 811 | பொ.வி. |

**காப்பியம்**

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| | 1. **சீவகசிந்தாமணி : 17** | | | |
| 1. | அந்தோ வினையே யென்றழு | சீவக. முத்தி. 27 | 2:5 | பொ.வி, |
| 2. | அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினாலலறு முந்நீர்த் தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி உடம்பொடு முகங்களொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர் மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்னரேறே | சீவக. முத்தி. 244 | 276 | பொ.வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 3. | உயிர் நிலத்து வினை வித்திட்டார்க்கு விளைவும் அதுவே | சீவக முத்தி. 164 | 320 | பொ வி. |
| 4. | காதன் மிக்குழிக் கற்றவும் கைகொடா ஆதல் கண்ணகத்தஞ்சனம் போலுமால் | ” கனக. 76 | 373 | பொ.வி. |
| 5 | விறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான் ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான் மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான் ஆறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன் | சீவக.மண்மக- 160 | 384 | பொ.வி. |
| 6 | உருவின் மிக்கதோ ருடம்பதுபெறு தலுமரிது | ” முத்தி. 154 | 407 | பொ.வி. |
| 7. | பொன்னினாகும் பொருபடை யப்படை தன்னி னாகும்தரணி தரணியிற் பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொரு துன்னுங் காலை | சீவக, விமலை. 35 | 437 | பெர்.வி. |
| 8. | மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல் பேதுசெய்து பிளந்திடல் | ” ” 32 | 450 | பொ.வி. |
| 9. | மருங்கொற்றி மூக்கூன்றித் தாள்தவழ்ந்து | ” முத்தி. 186 | 624 | பொ.வி. |
| 10. | ஒளி - உறங்கா நிற்கவும் தாம் தாம் உலகங் காக்கின்ற அவர் கடவுட்டன்மை | ” நாமக. 219 | 698 | சொ.பொ |
| 11. | நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம் | ” நாமக. 48 | 731 | பொ.வி. |
| 12. | பொருள் செய்வார்க்கு மஃதிடம் | ” நாமக. 48 | 739 | பொ.வி. |
| 13. | நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சிலல்லால் | சீவக. காந்தருவ. 809 | 771 | பொ.வி. |
| 14. | மல்லன் மலையனைய மாதவர் | ” முத்தி 191 | 898 | பொ.வி. |
| 15. | இல்லாளை யஞ்சி விருந்தின் முகங்கொன்ற நெஞ்சிற் - புல்லாளனாக | ” மண்மக. 217 | 905 | பொ.வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 16. | தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன<br>ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர் தாங்கல் கடன் | ,, காந்தருவ 6 | 1030 | பொ.வி. |
| 17 | குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா<br>விவர்ந்து செல்ல | ,, விமலை. 1 | 1182 | சொ.பொ, |
| | 2 சிலப்பதிகாரம் : 8. | | | |
| 1. | காணாத கண் | சிலப். ஆய்ச்சியர். 404 | 9 | பொ.வி. |
| 2. | இம்மைச் செய்தன யானறி நல்வினை<br>உம்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்<br>திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது | சிலப். அடைக்.<br>91—93 | 169 | பொ வி. |
| 3. | அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும்<br>துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்<br>விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை | சிலப் கொலை.<br>71—73 | அன்பு<br>அதி. தோ. | பொ.வி. |
| 4. | மகனை முறைசெய்தான் | சிலம். வழக்குரை. 54 | 547 | பொ.வி. |
| 5. | வளைவிற் பொறியும் மயிற்செறி நிலையும்<br>கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்<br>பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்<br>காய்பொன் னுலையுங் கல்விடு கூடையுந்<br>தூண்டிலுந் துடக்கு மாண்டலை யடுப்புங்<br>கவையுங் கழுவும் புதையும் புழையு<br>மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்<br>சென்றெறி சிரலும் பன்றியும் பணையு<br>மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்<br>கோலுங் குந்தமும் வேலும் சூலமும் | சிலப். அடை.<br>208 - 216 | 743 | பொ,வி. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 6, | இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு முழவிடை விளைப்போர் | சிலப். நாடுகாண். 149—150 | 1034 | பொ வி. |
| 7. | கவவுக் கைநெகிழினும் | ,, மங்கல வாழ்த்துப் பாடல் 61 | 1235 | பொ.வி. |
| 8. | நம்மை மறந்தாரை நாமும் மறக்கற்பாலம் | ,, கானல். 32 | 1255 | பொ.வி. |
| | 3. **மணிமேகலை** : 2, | | | |
| 1. | மாதவர் நோன்பு மடவார்கற்புங் காவலன் காவல் | மணி. 22: 208, 209 | 543 | பொ.வி. |
| 2. | குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும் | ,, 11—76 | 1043 | பொ.வி. |
| | 4 **வளையாபதி** : 2. | | | |
| 1, | எழுமையென்றது வினைப்பயன் தொடரும் பிறப்பினை அது வளையாபதியுட் கண்டது* | வளையாபதி | 107 | பொ.வி. |
| 2 | பெண்மனம் பேதின் றொருப் படுப்பேனென்னு மெண்ணிலொருவன் | வளையாபதி 49 | 822 | பொ.வி. |
| | 5 **இராமாயணம்** : 1. | | | |
| 1. | இன்றுபோய் நாளை நின்றா னையோடு வா* | கம்ப. யுத்த. முதற் போர் 255 | 773 | பொ.வி. |
| | **பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்** : | | | |
| | 1. **நாலடியார்** : 22 | | | |
| 1, | உறற்பால - தீண்டாவிடுதலரிது | நாலடி. 109 | 7 | சொ.பொ. |

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 2. | தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால் வான்சிறிதாப் போர்த்து விடும் | ,, அறன். 8 | 87 | பொ வி. |
| 3. | ஈட்டிய ஒண்பொருளைக் காத்தலும் ஆங்கே கடுந்துன்பம் | நாலடி. ஈயாமை 10 | 88 | பொ.வி. |
| 4. | தவத்தின்முன் னில்லாதாம் பாவம் | ,, துறவு 1 | 96 | பொ.வி. |
| 5. | உம்மை - யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் | ,, துறவு. 8 | 157 | பொ வி. |
| 6. | வைகலும் வைகல் வரக்கண்டும் | ,, அறன்வலி. 6 | 200 | இ.வி, |
| 7. | எல்லா - மிரப்பார்க் கொன்றீயாமை | ,, 145 | 224 | பொ.வி. |
| 8. | நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம் | ,, 251 | 270 | பொ.வி. |
| 9. | வான்றோய்குடி | ,, 142 | 272 | இ.வி. |
| 10. | கொல்லச் சுரப்பதாங் கீழ் | ,, 279 | 305 | சொ.பொ. |
| 11. | அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித் துக்கத் தொழுநோ யெழுபவே | ,, 123 | 330 | பொ வி. |
| 12. | கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத் தருமமுந் தக்கார்க்கே செய் | ,, 250 | 391 | பொ.வி, |
| 13. | புல்லா வெழுத்திற் பொருளில்வறுங் கோட்டி | ,, 155 | 401 | இ.வி. |
| 14. | கயப்பூப் கோல்வேறுபடாது கோட்டுப்பூப் போல | ,, நட்பு ஆராய்தல் 5 | 425 | பொ.வி. |
| 15. | கைத்துண்டாம் போழ்தே கரவாது அறஞ்செய்ம்மின் | ,, 19 | 593 | சொ.பொ. |
| 16, | மதலையாய் மற்றதன் வீழூன்றியாங்கு | ,, 197 | 615 | சொ.பொ. |
| 17. | தெருண்ட வறிவினவர் | ,, இரவச்சம் 1 | 787 | இ.வி. |
| 18. | வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போல | ,, 180 | 797 | பொ.வி. |

